பெட்டகம் 1

# மங்கையர் மலர்

பெட்டகம் - 2
கேட்டு வாங்குங்கள்

MANGAYAR MALAR - APRIL 2005

ரூ.15/-

## கல்யாணமே! வைபோகமே!



* போட்டிகள், * பரிசுகள், * விழா விவரங்கள்.





# மங்கையர் மலர் ஆச்சி

சாம்பார் பொடி

## இணைந்து வழங்கிய திருச்சியில் கோலாகல

# வெள்ளி விழா!






நிகழ்ச்சித் தொகுப்பு
பக்கம்-52



# மங்கையர் மலர்





## திருமண மலர் இரட்டைச் சிறப்பிதழ்


ஏப்ரல் 2005 மலர் : 25 இதழ் : 3

முதலில் பார்க்க...



KGEYES வழங்கும்

# வீடு!

பக். 8




## ரூ .25,000/- தங்க நகை யாருக்கு...

பக். 49



## அடுத்த வெள்ளி விழா நிகழ்ச்சி

பக்கம் - 100!



வருக வருக பார்த்திப

- மீனா ஹரிஹரன்




மங்கையர் மலர்

(கல்கி நிறுவன வெளியீடு)

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்கல்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை -32

ஆசிரியர் :
ரேவதி சங்கரன்

உதவி ஆசிரியர் :
சாந்தி ரங்கராஜன்

தொலைபேசி :
22251522, 22250623,
22251324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
mangayarmalar@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

மங்கையர் மலர்
இன்டர்நெட் முகவரி :
www.mangayarmalaronline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.190/-
ஆறு மாதம் : ரூ.95/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 37 யுஎஸ். டாலர்
இலங்கை : ரூ.900/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.


இந்தியாவின் நெ.1 மகளிர் இதழ் : மங்கையர் மலர்



# சுப - யாத்ரா®



43, தெற்கு மாட வீதி, ( சித்திர குளம் எதிரில் ) மைலாப்பூர், சென்னை - 4.
Ph. 2495 0218, 2495 2319. Cell : 98400 64243.

**ஷிரிடி சாய் பாபா தரிசனம்** 20-04-05 | 27-04-05 | 18-05-05
ஷிரிடி – சனி சிங்கனாபூர் – மஹா கணபதி (4 நாட்கள்) ரூ.1700/-

**ஷிரிடி – பண்டரிபுரம்** 20-04-05 | 15-06-05
ஷிரிடி – சனி சிங்கனாபூர் – பண்டரிபுரம் (5 நாட்கள்) ரூ. 2400/-

**ஷிரிடி – நாசிக் – எல்லோரா** 18-05-05 (6 நாட்கள்) ரூ. 3000/-

**ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமி தரிசனம்** 29-04-05 | 27-05-05 | 24-06-05
மந்திராலயம், பஞ்சமுகி ஆஞ்சநேயர் கோவில் (2 நாட்கள்) ரூ. 1000/-

**குளு – மணாலி – அமிர்தசரஸ் – டெல்லி** 30-04-05 | 06-05-05
(12 நாட்கள்) ரூ. 6800/-

**பத்ரி – கேதார் யாத்திரை** 08-05-05 (12 நாட்கள்) ரூ. 6400/-
ஆக்ரா – ஹரித்துவார் – ரிஷிகேஷ் – கேதார்நாத் – பத்ரிநாத் – டெல்லி

**ALSO CONTACT US FOR TRAIN, BUS AND AIR TICKET BOOKING**

---

# உடல் எடை குறைக்க/கூட்ட&
# கேன்சர்-மூலிகை சிகிச்சை

**உடல் எடை குறைக்க:** வீட்டில் இருந்தால் ஒரு மாதத்தில் 15 கிலோ வரை / இங்கு தங்கினால் 12-நாளில் 10 கிலோ வரை குறைகிறது. உடலில் உள்ள அழுக்குகள், துர்நீர் வெளியேறுவதால் உடல் எடை குறைகிறது. அப்போது அல்சர்,பிரசர், முழங்கால் வலி, தலைவலி, மாதவிடாய் பிரச்சனைகள் போன்ற மற்ற நோய்களும் தொந்தரவுகளும் இயற்கை முறையில் பாதுகாப்பாக பெருமளவு குணமாகின்றன. <u>பலருக்கு ஒரே வாரத்தில் எடை குறைவது நன்கு தெரியும்</u> இரண்டாம் மாதத்திலிருந்து மேலும் மேலும் எடைகுறைவதோடு உடல் அளவும் (SIZE) வேகமாக குறைந்து உடல் நன்கு இறுகும், பலமும் அழகும் அதிகரிக்கும்.

உடலிலுள்ள கொழுப்பு , ஊளைச் சதை போன்றவை நீங்குவதால் பெண்களுக்கு கருத்தரிக்கும் வாய்ப்பு மிகவும் பிரகாசமடையும். ஆண்களுக்கு நேரம், பலம் திறன், உறுதி ஆகியவை நன்கு மேம்பட்டு முன்பு எப்போதும் இல்லாத அளவிற்கு தாம்பத்திய உறவு சிறப்படையும்.

உடலின் இயற்கையான இயக்கத்தின் மூலம் அழுக்குகள் வெளியேற்றப்படுவதால் எவ்வித பின்/பக்க விளைவுகள் ஏற்படுவதில்லை. ஒரு மாத மருந்து ரூ.1100/- முதல் ஐந்து விலைகளில் கிடைக்கும். போனில் முகவரி தெரிவித்து V.P.P.மூலமாகவும், நேரிலும் மருந்துகளைப் பெறலாம்.

**கேன்சர்:** பெரும்பாலானோருக்கு மிக நல்ல பலன்களை உறுதியாக வெகு விரைவில் தரமுடியும்.

**உடல் எடை கூட்ட:** மூலிகை மருந்து ரூ.430/- (or) ரூ.700/- (or) ரூ.1300/- (or) ரூ.1900/-

எமது மூலிகை மருத்துவத்தில் எந்த தொந்தரவுக்காக சிகிச்சை பெற்றாலும் மொத்த உடல் ஆரோக்கியமே மேம்படும். பசி, தூக்கம் ஒழுங்காகும். அல்சர், கேஸ்ட்ரபுள் போன்றவை குணமாகி நன்கு ஜீரணமாகும். முடி உதிர்வது நிற்கும். முகப்பருக்கள் குணமாகும். இரத்தம் சுத்தமாகும். நோய் எதிர்ப்பு சக்தி அதிகரிக்கும். சுகர் நன்கு குறையும். மேலும் முழங்கால் நீர்க்கட்டு, உடல் வலிகள், வயிற்றுக் கோளாறுகள் ஆண்மைக் குறைவு உட்பட, <u>உணவு சாப்பிட்டு நடமாடும் நிலையில் உள்ளவர்களின் எல்லா நோய்களுக்கும்</u> **Dr.M.முத்துக்குமார்** B.Sc., DNYS, DEMS, இயற்கை மருத்துவ இல்லம் (பதிவு), 40-அனுமன் கோவில் வீதி, கோபிசெட்டிபாளையம் - 638 452, ஈரோடு (Dt) செல்:98427-11449. போன்: (04285)228957. www.natureclinic.net [e-mail natureclinic@gmail.com]

# கனாக்கண்டேன் தோழி நான்!

மஞ்சள், குங்குமம், பன்னீர், ரோஜா, மல்லி மணமாலை இவற்றின் மணம் சுவாசக் காற்றில் கலந்து உள்ளே போவதுதான் எத்தனை சுகம்! கண்களை மூடுகிறேன். இந்தக் கணத்தின் வாசம், இதம் அப்படியே நெஞ்சப் பெட்டகத்தில் உறைந்து விடாதா என்ற சிறு ஆசை!

ஆனால் எங்கேயோ நழுவுகிற மாதிரி ஓர் உணர்வு... ஒரு சுழற்சி தெரிகிறது.

விழித்தால், கம்பரும், சடையப்ப வள்ளலும் அருகே வந்து, ''உன்னிடம் ஒன்று கூற வேண்டும்.. தசரதன் பெருத்த செல்வங்களோடு ஆடை அணிவகைகளும் அளவற்றதாய்க் கொண்டு வந்து கொடுத்து சீதையை மருமகளாய் ஏற்றான். இதை நான் மறக்காமல் கூறியிருக்கிறேன் எனது காவியத்தில்'' என்கிறார் கம்பர். சடையப்ப வள்ளலும் சிரித்தபடி தலையை அசைக்கிறார்.



அதற்குள் சலசலப்பு எனக்குப் பின்னால். திரும்புகிறேன்... நகரத்தார் மக்களில் பல பெரியோர்கள், ''நகையும், திருப்பூட்ற சேலையும் கொடுத்துத்தேன் பொண்ணைக் கட்டிக்கிட்டு வருவோம். இப்படி மூணும் மூணும், அஞ்சும் அஞ்சும்னா கேட்டோம்?'' மற்றும் ஒரு சுழற்சி...

என்னைச் சுற்றி மஞ்சள் ஆடையில் பேதை முதல் பேரிளம் பெண் வரை கையில் ஜபமாலையுடன் பெண்கள் கூட்டம். எண்ணற்றோர் என்னைச் சுற்றி! யாரென எண்ணும் முன் 'பளிச்'செனப் பதில் வருகிறது. ''வரதட்சிணை, வகையின்மை, வாழ்க்கையெனும் கானல் நீர் ஆகிய முக்கடலின் முனையில் நின்று நித்தம் தவம் செய்யும் குமரிகள்... கன்யாகுமரிகள்... வழி பிறக்குமா?''



அத்தனை பேர்களுடைய சுட்டும் விழிச்சுடரும் என்னைத் தகித்ததில் நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொள்கிறது. இன்னும் ஒரு சுழல்... ஆண்களும் பெண்களுமாக நடுத்தர வயதினர், வர்க்கத்தினர். திபேத்திய லாமாக்களின் தாழ்வான குரலின் முணுமுணுப்பில்...''

''தலைமுறை வாழவேண்டும் என்பதற்காகவா இந்தத் தண்டனை? பிள்ளைகளுக்காக உழைத்து உழைத்து ஓடாகி விட்டோம். ஓயவில்லையே மீளாக்கடனும், மாளாத்துயரும்!'' தாய்மார்களது மூச்சின் வெப்பத்தில் திணறுகிறேன். ''குடும்பம் எனும் பெருஞ்சுமை, குறைபாடுள்ள குழந்தைகள், பொறுப்பற்ற கணவன்மார், மீறிவிட்ட குழந்தைகள்... எது பாதை?'' இப்போது நானாகவே சுழற்சியைத் தேடுகிறேன்...

அமைதியான சூழலில் அன்புவட்டம் தெரிகிறது. இதிலுள்ள மூன்று பெண்களும் யார்?

**உங்களுடன்... ரேவதி சங்கரன்**

இருவர் அன்னையர், ஒருத்தி இளம்பெண். அந்த இளம்பெண், ஒரு பெண்மணியின் மகள், மற்ற பெண்மணியின் மருமகள். அன்பால் ஒன்றாகிவிட்ட மூன்று பெண்களது முகங்களிலும் மகிழ்ச்சி! ஆக, சக வாசகியர், தம்முள் பெண் கொடுத்துப் பெண் எடுத்து சம்பந்தியாகி, உறவு உறுதியாகி, நிலையான அன்பு வட்டம், குடும்ப வட்டமாகி விரிந்த காட்சி! வியப்பால் என் கண்கள் விரிகின்றன...

ஒன்றுபட்ட வாசகியர் உயர்ந்த கோட்பாடுகளைச் செயலாக்குவர்! சமுகக் கட்டுப்பாடு என்ற பெயரில் நமக்காக வாழ மறந்து பிறருடைய சொல்லுக்கு அஞ்சி நம்மைச் சுற்றி நாமே போட்டுக் கொண்டுள்ள தளைகளை உடைத்தெறிய வேண்டும். தடைகளைத் தாண்ட வேண்டும். இதுவே, இத் தமிழ்ப் புத்தாண்டில் நாம் எடுத்துக் கொள்ளும் முதல் முயற்சியாக இருக்கட்டும்.

இனி, பெண் கல்வி, கல்விக்கேற்ற வேலை வாய்ப்பு, சுய வேலை வாய்ப்பு, ஆடம்பரம் இல்லாத எளிய திருமணங்கள் இவை அன்பு வட்டத்தில் விரியும்.

தோள் கொடுக்கும் தோழியராக நாம் ஒவ்வொருவரும் அன்புச் சங்கிலியால் பிணைக்கப்பட்டு ஒன்றாகி விட்டோம். ''இனி ஒரு விதி செய்வோம், அதை எந்த நாளும் காப்போம்''. திடுக்கிட்டு விழிக்கிறேன்... மணி நான்கு முறை ஒலிக்கிறது. அதிகாலைக் கனவு பலிக்கும் என்பார்கள்... பலிக்கும்! கட்டாயம் பலிக்கும்!

வாழ்க வளமுடன்! வாழ்க வையகம்.'

## ஊஞ்சல் பாட்டு

(ஐம்பது ஆண்டுகளுக்கு முன் இயற்றப்பட்டது.)



அண்ணல்ராமச் சந்திரனுடன் ஆரணங்கு சீதை
வண்ணமுடன் ஊஞ்சலாடும் வைபவத்தைக் காணீர்
(ஆடீர் ஊஞ்சல்)

விண்ணவரும் மண்ணவரும் கண் குளிரக்காண
வேதம் நாலும் கீதம்பாட நாதனுடன் சீதை
(ஆடீர் ஊஞ்சல்)

நவரத்ன மண்டபத்தில் ஸ்வர்ணமய ஊஞ்சல்
சந்த்ரசூர்ய குலமணிகள் அந்தமுடன் அமர்ந்து
(ஆடீர் ஊஞ்சல்)



* அம்புஜம் கிருஷ்ணா

துந்துபி முழங்க எங்கும் தேவர்குழாம் கூடி
அந்தரம் தனில்நின்று சுகந்த மலர் தூவ
(ஆடீர் ஊஞ்சல்)

வைதேஹியுடன் ராமன் வடிவழகைக் கண்டு
ரதியுடன் அனங்கன் மனம் வெட்கித்தலைகுனிய
(ஆடீர் ஊஞ்சல்)

- அம்புஜம் கிருஷ்ணா







Entertainment Sets



More than 10 Models

Quality. Trust. Excellence.

# Sathya

## Furniture World

Since 1968

Lifetime Investment

*One of India's Biggest Furniture Showroom*

Almirahs



More than 25 Models

Wardrobes



More than 10 Models

**H.O : Mylapore**
( 20,000 sq.ft )
139, R H Road,
Next to Sanskrit College,
Ch-4. Ph : 24982930 / 31

**Anna Nagar ( West )**
DABC Bldg.,
6, M T H Road, Padi,
Opp. TVS, Padi, Ch-50.
Ph : 52155929

**Velachery**
Paramount Park,
358, Velachery-Tambaram
Main Rd, Ch-42
Ph : 52144929

**Coimbatore**
266, Mettupalayam Road,
Near Saibaba Temple
Bus Stop, Cbe - 43.
Ph : 2452929 / 30

Sofa-cum-Beds



More than 10 Models

Computer Tables



More than 25 Models

**Also Available**

Diwans
Recliner Chairs
Pooja Cabinets
Computer Tables/Chairs
& Office / Institutional Furniture

**SUNDAY OPEN**

Exchange Option available for Old Furniture

Major Credit Cards accepted



# மங்கையர் மலர்



# KGEYES

**KGEYES RESIDENCY PVT LTD.**

இணைந்து வழங்கும் 10 மாதப் போட்டி

# என் இனிய இல்லம்

'கல்யாணம் பண்ணிப் பார்; வீட்டைக் கட்டிப் பார்!' என்று சும்மாவா சொன்னார்கள்? மனதில் எண்ணம் எழுவதிலிருந்து மண், கல், கம்பி என்று கலவைகளால் முழுவதுமாக ஒரு வீடு எழுவது என்பது ஒரு தனி அனுபவம்... உங்கள் அனுபவத்தைத்தான் கேட்கிறோம். சிறு சிறு நிகழ்வுகளின் தொகுப்பாகவும் இருக்கலாம். ஆனால் மங்கையர் மலரின் ஒரு பக்கம் மிகாமல் இருக்க வேண்டும்.

- மாதம் ஒரு போட்டித் தலைப்பும், மாதம் ஒரு கூப்பனும் 10 மாதங்களுக்கு தொடர்ந்து இங்கு இடம்பெறும்.
- வாசகிகள் பத்து மாதங்களும் தொடர்ந்து இப் போட்டியில் கலந்து கொள்ள வேண்டும்.
- பத்தாவது மாத இறுதியில் அனைத்து போட்டிகளுக்கும் உண்டான கட்டுரைகளையும் மேலும் கூப்பனில் கேட்கப்பட்டிருக்கும் கேள்விக்கான பதிலையும் அதிலேயே நிரப்பி கட்டுரைகளுடன் கூப்பன்களையும் இணைத்து மொத்தமாக, அறிவிக்கப்படும் கடைசி தேதிக்குள் எங்களுக்கு அனுப்பி வைக்க வேண்டும்.
- போட்டியும் பரிசும் வருமான வரி விதிமுறைகளுக்கு உட்பட்டது.
- தேர்வு செய்யப்படும் கட்டுரைகளிலிருந்து 5 இல்லத்தரசிகளின் வீட்டிற்கு மங்கையர் மலர் மற்றும் KGEYES குழு படையெடுக்கும்.
- இறுதியாக ஒருவர்க்கு மட்டும் வீடு பரிசு!
- ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

• பாரதன் பப்ளிகேஷன்ஸ் நிறுவனத்தில் பணிபுரியும் ஊழியர்கள் மற்றும் அவர்தம் உறவினர்கள் இந்தப் போட்டியில் பங்குகொள்ள வாய்ப்பில்லை.

போட்டி 1

# ஏப்ரல் மாத போட்டித் தலைப்பு :

# வீட்டைக் கட்டிப் பார்!



## KGEYES

**KGEYES RESIDENCY PVT LTD.**

**கேள்வி**

KGEYES ன் மூன்று புதிய கட்டுமானப்பணிகள் எங்கெங்கு நடைபெறுகின்றன ?

**பதில்**

மங்கையர் மலர்
கோலாகல வெள்ளி விழா



போட்டி கூப்பன் - ஏப்ரல் 05



பெயர் : ..........................................

வயது : ..........................................

முகவரி : ..........................................

..........................................

..........................................

தொலைபேசி : ..........................................

மின்னஞ்சல் : ..........................................

## திருமணத்திற்குச் செல்வோர் கடைப்பிடிக்க வேண்டிய (எழுதப்படாத) விதிகள் :

# பண்பான கட்டளைகள்

1. எல்லோருடனும் மென்மையாய்ப் பேசி, பண்போடு பேசி, சந்தோஷமாக ஆர்வத்துடன் கலந்து கொள்ள வேண்டும். ஏதோ உங்களுக்குள்ள இமாலய வாய்ப்பினை விட்டு விட்டு அந்தத் திருமணத்துக்கு வந்திருப்பதாக நடக்கக் (நடிக்கக்) கூடாது.

2. திருமணத்தில் சந்திக்கும் பிரபலங்களையோ, மருத்துவரையோ உடனே அட்டை போல் ஒட்டிக் கொண்டு வேலை வாய்ப்பு, இலவச ஆலோசனைக் கேட்கக் கூடாது.

3. மண்டபத்தில் வசதிக்குறைவாக இருந்தால் உடனேயே நீங்கள் ஏதோ அதிக வசதி நிறைந்த திருமண மண்டபத்தில் திருமணம் நடந்தால் ஒழிய, போவதில்லை என்பது போல், குறைசொல்ல ஆரம்பிக்காதீர்கள்.

4. மேடையில் திருமணம் நடந்து கொண்டிருக்கும் போது, உரத்த குரலில் நான்காவது வரிசையில் உட்கார்ந்திருப்பவரிடம் குடும்ப நலன், விசாரணையை நடத்தாதீர்கள். மற்றவர்களை திரும்ப வைப்பது அப்படி ஒன்றும் நல்ல பண்பில்லை. உங்களைக் 'காட்டான்' என்று அவர்கள் சொல்லுவது உங்கள் செவிக்கு எட்டாது!




5. உங்களுக்குக் குளிர்பானமோ, ஜூஸோ கொடுத்தால் நொடிப் பொழுதில் மடக் மடக் என்று குடித்து விட்டு அந்த பிளாஸ்டிக் கப்பை நொறுக்கி நாற்காலியின் அடியில் விட்டெறியாதீர்கள். அடுத்து அமர்ந்திருப்பவரிடம் சிரித்த முகத்தோடு தந்து விட்டு உங்களுக்குத் தரப்படுவதை வாங்கி மெதுவாகக் குடிக்க வேண்டும்.

6. அடிக்கடி கடிகார முள்ளைப் பார்த்து நீங்கள் ஏதோ முள்ளின் மீது அமர்ந்திருப்பதாக 'பாவ்லா' பண்ணாதீர்கள். தாலி கட்டும் வரை கஷ்டப்பட்டு பொறுமை காப்பதாக மற்றவர்கள் நினைக்க மாட்டார்கள். "போக வேண்டியதுதானே! இது என்ன கடுவன் பூனை மாதிரி!" என்பார்கள்.

7. தினசரித் தாளில் குறிப்பிடப்பட்ட நபர் யாரேனும் திருமணத்திற்கு வந்திருந்தால் அதிர்ச்சி காட்டுவதோ, 'கிசுகிசு'வில் இவரைப் பற்றி வந்ததே என்றும் 'கமெண்ட்' அடிக்காதீர்கள்.

8. மிகவும் ஆடம்பரமாக திருமணம் நடத்தப்பட்டால், "இதெல்லாம் வேஸ்ட்" என்ற உங்களது எக்ஸ்பர்ட் ரிமார்க்ஸும் தேவையற்றது.

9. கலப்புத் திருமணமாக இருந்தால், "வருங்காலம் எப்படி?" என்ற உங்களது கருத்துக் கணிப்பினை பக்கத்திலிருப்பவரிடம் சொல்ல வேண்டாம். காலம் மாறி வருகிறது. நீங்கள் கட்டுப்பெட்டி என்ற உண்மையை நீங்களே தண்டோரா போட வேண்டாம்.

போவ்... ராமசாமி ராமசாமி...

10. விருந்தை மூக்குப் பிடிக்கச் சாப்பிட்டு விட்டு, 'அது சரியில்லை. இது சகிக்கவில்லை' என்றெல்லாம் உங்கள் குடும்பத்தினரோடு பேசுவது அநாகரிகம். கையில் ஐந்தாறு பீடாக்களை அள்ளாதீர்கள்.

11. ஆக்கபூர்வமான கருத்துக்களையே பிள்ளை வீட்டாரிடமும் பெண் வீட்டாரிடமும் சொல்லி நீங்களும் மகிழ்ந்து எல்லோரையும் மகிழ்வுடன் நிறைவு பெறச் செய்யுங்கள்.

- வாதூலன்

# கேன்ஸர் நோயா?



Dr. K. Sri Sridar

## கவலைப்பட வேண்டியதில்லை.

### குருபாலா கிளினிக்கின் சிறப்பு மூலிகை சிகிச்சை

**மீண்டும் மகிழ்ச்சியை உங்கள் இல்லத்திற்கு கொண்டு வருகிறது.**

**Lung Cancer** என் மனைவி உஷாவிற்கு Lung Cancer – டாக்டர்கள் கைவிட்ட நிலையில் உங்கள் மருந்து வாங்கி கொடுத்தேன். 07.07.04 அன்று முதல் சிகிச்சை தொடங்கி இன்றுவரை நன்றாக இருக்கிறாள். ஆச்சரியம் என்னவென்றால் எங்கள் டாக்டர் எடுத்த டெஸ்ட்டில் கேன்சர் இல்லை என்று வந்தது. மீண்டும் உங்கள் மூலமாக எடுத்த X-ray விலும் கேன்சர் இல்லை என்று வந்துவிட்டது. மார்ச் முதல் வாரத்தில் எடுத்த CT Scan லும் கேன்சர் இல்லை என்று வந்துவிட்டது. டாக்டர்கள் ஆச்சரியபடுகிறார்கள். இது Miracle என்கிறார்கள். நாங்கள் உங்கள் மருந்து தவிர வேறு சிகிச்சை எடுக்கவில்லை.

பாலகிருஷ்ணன், மைலாப்பூர், சென்னை-4.

**Stomach Cancer** என் மனைவி ஆனந்தவல்லிக்கு வயிறு புற்று நோய்க்காக அலோபதி மற்றும் சித்த மருந்துகள் கொடுத்து சரியாகாத நிலையில் உங்களை சந்தித்தோம். ஒரு மாதம் உங்கள் மருந்து சாப்பிட்ட உடன் அவர் எழுந்து உட்கார்ந்து விட்டார். அவர் வயிற்றில் இருந்த கட்டி நன்கு குறைந்து விட்டது. எங்கள் டாக்டர் ஆச்சரியப்பட்டு உங்கள் மருந்தையே தொடர்ந்து கொடுக்கச் சொல்லிவிட்டார்.

C.ராஜகோபாலாச்சாரி, நங்கநல்லூர், சென்னை-61.

**Liver Cancer** என் மாமியாருக்கு Hepatoma என்றும், ஒரு மாதம் தான் உயிரோடு இருப்பார்கள் என்று டாக்டர்கள் சொன்னார்கள். 07.05.04 முதல் உங்கள் மருந்து மட்டுமே கொடுத்து வருகிறோம். கடந்த ஏழு மாதமாக அவர் நார்மலாக உள்ளார். வாந்தி நின்று ஸ்வீட், எண்ணைப் பலகாரம் என எல்லாம் சாப்பிடுகிறார். எடை 9 கிலோ கூடி உள்ளது. அவர் மகன் திருமணத்தில் கலகலப்பாக எல்லா வேலையும் செய்தார். டாக்டர்கள் இதை கண்டு ஆச்சரியபடுகிறார்கள்.

C. ராஜ், அரக்கோணம்.

**Glioblastoma ( மூளைகேன்சர்)** என் தாயாருக்கு வயது 71 மூளை கேன்சர் ஆபரேஷன் செய்த பிறகும் குணம் தெரியாமல் உங்களை அணுகினோம். ஒரே மாதத்தில் என் அம்மா நார்மலாகிவிட்டார். நன்கு சாப்பிட்டு நன்கு தூங்குகிறார். வலி என்பதே இல்லை. என் தாயார் இன்று உயிரோடு நன்கு இருப்பதே உங்களால்தான்.

R.கிருஷ்ணன், செகந்திராபாத்

### கை விடப்பட்ட கேன்ஸரா ? கவலை வேண்டாம்

எல்லாவித புற்று நோய்க்கும் சிகிச்சை உண்டு. நோயாளி நேரில் வர வேண்டியது இல்லை. முழுமையாக எல்லா ரிப்போர்ட்டுகளையும் அனுப்பி வைக்கவும். சிறப்பு மூலிகை சிகிச்சை என்பது டாக்டர் கே. ஸ்ரீ ஸ்ரீதர் வடிவமைத்த அற்புத முறையாகும். பத்தியம் இல்லை. மற்ற மருந்துகளோடும் சேர்த்து சாப்பிடலாம். வாழும் போது நோய் தொந்தரவு குறைந்து நிம்மதியாக சந்தோஷமாக வாழலாம். அவர்களின் வாழ்நாள் 40% அதிகரிக்க முயற்சிக்கலாம். இங்கு சிறப்பு மூலிகை சிகிச்சை பயனுள்ளதாக அமைகிறது. டாக்டர்களால் கைவிடப்பட்ட நோயாளிக்கும் உடனே நன்மை அளிக்கிறது.

### Also Specialise in

ASTHMA - Special Treatment available 27,375 patients are happy with our treatment. அனைத்து நோய்களுக்கும் சிகிச்சை அளிக்கப்படும்.

## Gurubalaa Clinic

Speciality Clinic for Herbal Oncology & Asthma

Royale Apartment, 6, Mannar Reddy Street,
(Opp. Street to T.Nagar Bus Terminus), T.Nagar,
(Next to Krishnaveni Theatre) Chennai - 600 017.
CLINIC : Ph : 044 - 24339596
Res : 044 - 55872782, Cell : 98401 48808.
TIMINGS : 10.00 am to 5.30 pm
On Sundays : 10.00 am to 12.00 Noon

**Our Speciality is :**

Herbal Oncology, Surgical Oncology, Medical Oncology & Radio Therapy Advise. All under one roof.

வெளியூர் வாசகர்கள் செல் நம்பருக்கு போன் செய்யும் முன்பு '0' சேர்க்கவும்

**நேரில் வரமுடியாதவர்கள் தங்கள் நோயின் விவரத்தை எழுதி அனுப்பினால் கூரியர் மூலம் மருந்துகள் அனுப்பி வைக்கப்படும்.**

துறவு ஏற்கும் நோக்கத்தோடு காசிக்குப் புறப்படும் பிரம்மச்சாரியை (மணமகனை) பெரியோர்கள் தடுத்து நிறுத்தி அறிவுரைகள் கூறி கிருஹஸ்தாஸ்ரமத்தை ஏற்றுக் கொள்ளச் செய்யும் சடங்காக பரவலாக கருதப்படுகிறது இந்த காசி யாத்திரை. ஆனால் காசி யாத்திரை புறப்படும் மணமகனின் கோலம், அதாவது ஆடை, அலங்காரங்கள், புதிய காலணி, குடை, பூ மாலை, மேளவாத்தியம் போன்றவை சந்நியாசத்திற்கு முரண்பட்டவையாகும்.

# காசி யாத்திரை

இச் சடங்கிற்கு வேறு என்ன பின்னணி? இன்றைய வாழ்க்கையில் உள்ள சூழ்நிலைகளை ஆராய்ந்தால் தெளிவான பதில் கிடைக்கிறது. அன்றைய வாழ்க்கையில் வேத சாஸ்திரக் கல்வியில் 10 அல்லது 12 வருடங்கள் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்ட ஒரு மாணவன் மனதில் அடுத்து தனது வேதசாஸ்திர அறிவை ஆராய்ச்சி நிலையில் தொடர, காசியில் இருந்த வேதசாஸ்திர ஞான வித்யா பீடமே குறிக்கோளாக இருந்தது. மறு பகுதியில் தன்னைச் சார்ந்த தாய், தந்தை, சகோதர சகோதரிகளின் வாழ்க்கையை சீராக அமைத்துக் கொடுக்க உள்ள தனது கடமையும் யோசிக்க வேண்டியிருந்தது. பெரியோர்களின் அறிவுரை மிகவும் தேவையுள்ள இத் தருணம் "காசி யாத்திரை" என்ற சடங்காக மாறி வந்துள்ளது.

இன்று பொறியியல், கம்ப்யூட்டர் மற்றும் விஞ்ஞானத் துறையில் உயர் நிலை (எம்.எஸ்ஸி., (அ) பி.எச்டி.) முடித்துள்ள மாணவனுக்கும், மேற்கொண்டு படிக்க அமெரிக்கா அல்லது மற்ற வெளிநாடுகளுக்குச் செல்ல வேண்டிய நிர்ப்பந்தம் உள்ளது.

அமெரிக்காவுக்குச் செல்வதா அல்லது தன்னைச் சார்ந்துள்ள குடும்பத்தினருக்காக இங்கேயே திருமணம் முடித்து தொழிலில் இறங்குவதா என்ற கேள்விகள் இன்றைய மாணவனின் முன் உள்ளன. திருமணமாகாமல் அமெரிக்காவுக்குச் சென்றால் அந்தக் கலாசாரத்தின் பாதிப்பை பற்றியும் குடும்பத்தினர் கவலை கொள்ள வேண்டியுள்ளது.



ஆகவே காசி யாத்திரை இன்றும் சிம்பாலிக்காக நமக்கு அர்த்தமுள்ளதாகவே இருக்கிறது.

- ராஜம்

Angels®
Advanced Clinic (P) Ltd

hair, skin & body care

Since 1991

Website: www.angelsadvancedclinic.com
Email: angels@angelsadvancedclinic.com

## தேவையற்ற ரோமங்களுக்கான சிகிச்சை



முகத்திலுள்ள தேவையற்ற ரோமங்களை நீக்குவதற்கு பலரும் எலக்ட்ராலிசிஸ் போன்ற சிகிச்சைகளையே நாடுகின்றனர். இவை, தற்காலிகமான தீர்வையே தருகின்றன என்பதோடு, பக்கவிளைவுகளையும் ஏற்படுத்தக்கூடும். ஆனால் ஏஞ்சல்சின் அட்வான்ஸ்டு லேசர் சிகிச்சை, ரோமங்களை வேர்களிலிருந்தே நீக்குவதால் அவை மீண்டும் வளர வாய்ப்பில்லாமல் போகிறது. இதில் லேசர் கதிர்களின் உதவியுடன் ரோமக்கால்களை வலுவிழக்கச் செய்வதன் மூலம் அனாவசிய ரோமங்கள் அறவே நீங்குகின்றன. இது பெண்களுக்கு மேல் தாடை - கீழ் தாடை - அக்குள் - வயிறு - மார்பகம் போன்ற பகுதிகளிலும் தேவையற்ற ரோமங்களை நீக்கி விடலாம்.

## தலைமுடி உதிர்தல் மற்றும் வளர்ச்சிக்கான சிகிச்சை



முடி அடர்த்தியின்மை, முடி கொட்டுதல் மற்றும் பொடுகு தொல்லை போன்ற அறிகுறிகளின் பயமா? கவலையை விடுங்கள். **FDA (USA)** - வால் அங்கீகரிக்கப்பட்ட **Low Level Laser Therapy (LLLT)** - வினால் உங்கள் முடி சம்பந்தமான எல்லா பிரச்சனைகளுக்கும் ஏஞ்சல்ஸ் நிரந்தர தீர்வு அளிக்கின்றது. மேலும் பெண்களுக்கு அடர்த்திதன்மையற்ற தலைமுடிக்கு **HAIR REGROWTH** சிகிச்சையில் வளர செய்யலாம். இது 100% பாதுகாப்பான சிகிச்சை. தலைமுடி உதிரவிடாமல் கட்டுப்படுத்தி, அதனை வலுவூட்டும் சிகிச்சையான ஹேர் கேர் தெரபி மற்றும் **ROOT STIMULATION** சிகிச்சையின் மூலம் இப்போது இந்தியாவில், உங்கள் ஏஞ்சல்ஸில் கிடைக்கிறது. இச்சிகிச்சையின் மூலம் தலை முடி உதிர்தலை தடுத்து விடலாம். இதைப் பற்றி மேலும் அறிந்துகொள்ள கிளினிக்கை தொடர்பு கொள்ளுங்கள்.

## கட்டுக்கோப்பான மார்பகத்திற்கு ஏஞ்சல்ஸின் சிகிச்சை



அனைவருடைய மார்பகமும் அவர்களது உடலமைப்பிற்கு ஏற்றவாறு அமைவதில்லை. சிலருக்கு இயற்கையாகவே அமைந்து விடுகிறது. இப்படி உடலமைப்பிற்கு ஏற்றவாறு மார்பகம் வளர்ச்சி அடையாத பெண்களுக்கு ஏஞ்சல்ஸின் அட்வான்ஸ்ட் மசில் ஸ்டிமுலேஷன் தெரபி என்ற அதிநவீன சிகிச்சையின் மூலம் மார்பகத்தை சுற்றியுள்ள சதைகளை சீரமைத்து சீரான மார்பக வளர்ச்சி பெற முடியும். இது **Non - Surgical** சிகிச்சையாகும்.



உங்கள் கேள்விகளுக்கு
பதிலும், தீர்வும் அளிக்கிறது
**ஏஞ்சல்ஸ்**

2B, 3rd Avenue, T-53/99, (Opp. 14 Shops), Rajeshwari Mansion, Anna Nagar, Chennai - 40.

**Cell: 98400 46599, Ph: 044 - 52176679 / 26212547 / 26213468**

● Hyderabad - (040)23222111, 55368999 ● Vijayawada - (0866)2477149 ● Vizag - (0891)2598697
● Rajahmundry - (0883)2461007 ● Bangalore - (080)51153995

**தா**னமாகக் கொடுக்கப்படும் உறுப்புகள் எந்த நோயாளிக்கு பயன்படுத்தப்படுகிறது என்று அறிய முடியுமா? நாங்கள் அவருடன் தொடர்பு கொள்ள முடியுமா? என்று உதானம் செய்யும் குடும்பத்தினர் மருத்துவர்களிடம் கேட்பது வாடிக்கையான விஷயம். பிரதி உபகாரம் எதிர்பார்க்காமல் ஒரு உயர்ந்த உள்ளத்தின் வெளிப்பாடாக செய்யப்படும் இந்த உதானத்தில் எந்த ஒரு

டாக்டர். என். ராமகிருஷ்ணன்



# யாருக்கு யார் சொந்தம்?

வகையிலும் வியாபார நோக்கம் ஏற்படாமல் தடுப்பது மருத்துவ உலகின் தார்மிகப் பொறுப்பு. இதனால், கொடுத்தவர் யார்; கொடுத்து வைத்தவர் யார் போன்ற விவரங்கள் இரகசியமாகப் பாதுகாக்கப்படுகின்றன.

மாற்று சிகிச்சை எந்த நோயாளிகளுக்கு தேவைப்படுகிறது? சிறுநீரகம் பழுதடைந்தால் நம் உடலின் சுத்திகரிப்பு சக்தி குறைந்து தேவையற்ற பொருட்கள் நம் ரத்தத்தில் கலக்கின்றன. இந்த நிலையில் டயாலிஸிஸ் மூலம் ரத்தம் சுத்தம் செய்யலாம். சிறுநீரகம் பழுதடைய பல காரணம் இருப்பினும் அதற்கு முக்கியக் காரணம் இரத்தக் கொதிப்பு, சர்க்கரை வியாதியும்தான். இந்த வியாதிகள் இருப்பவர்கள் டாக்டர்களிடம் முறையாக பரிசோதனை செய்து அவர்களுடைய ஆலோசனைப்படி செயல்படுவது அவசியம். ஆரம்ப நிலையிலேயே மருந்துகளை முறையாக எடுத்துக் கொண்டால் சிறுநீரகம் மேலும் பழுதடையாமல் தடுக்கவும் வாய்ப்புண்டு. அதையும் மீறி நிலைமை மோசமானால் டயாலிஸிஸ் கருவி மூலம் இரத்த சுத்திகரிப்பு வாரத்திற்கு பல முறை தேவைப்படலாம் அல்லது சிறுநீரக மாற்று சிகிச்சை முறையினாலும் குணப்படுத்தலாம். டயாலிஸிஸ் தேவைப்படும் அனைவருக்கும் மாற்று சிகிச்சை செய்து குணப்படுத்த முடியும் என்று பொதுப்படையாகக் கூற முடியாது. யாருக்கு இத்தகைய சிகிச்சை பயன்படும் என்பதை உங்கள் மருத்துவர் பல பரிசோதனைகள் செய்த பின்பே முடிவு செய்ய முடியும்.

இதே போல, இருதய நோய் உள்ள சிலருக்கு இதயத்தின் தசை முழுமையான சக்தியுடன் செயல்படாமல் இருக்கலாம். இந்த நிலைமை 'கார்டியோமயோபதி' என்று அழைக்கப்படும். இது இதயத்தின் இரத்த ஓட்டம் குறைவதனால் ஏற்படலாம். அல்லது காரணம் எதனால் என்று தெளிவாகத் தெரியாமலும் விளையலாம். இதனால் சிறிது வேலை செய்தாலே மூச்சிரைப்பும், அசதியும் ஏற்படலாம். மருந்துகளின் மூலம் குணப்படுத்த முடியாவிட்டால் இருதய மாற்று சிகிச்சை தேவைப்படலாம்.

கண் தானம் என்றதும் பலர் முழுமையாக கண்ணை எடுத்து மற்றவருக்குப் பொருத்தப்படுவதாக நினைப்பது தவறு. இது கண்ணின் முன்பகுதியான கார்னியா பழுதடைந்தால் மட்டுமே செய்யக்கூடிய சிகிச்சை. எவருடைய உறுப்பையும் யாருக்கு வேண்டுமானாலும் பொருத்தலாமா? என்ற சந்தேகம் ஏற்படுபவர்களுக்கு பதில் - நிச்சயம் முடியாது. பொருத்தம் பார்த்த பிறகே மாற்று சிகிச்சை செய்ய முடியும். எப்படிப் பொருத்தம் பார்க்க முடிகிறது, மாற்று சிகிச்சைக்குப் பிறகு வாழ்க்கை எப்படி மாறுகிறது போன்ற கேள்விகளுக்கு வரும் இதழ்களில் பதிலளிக்கிறேன்.



(உதானம் தொடரும்)

✉ வீட்டிலேயே திராட்சைப் பழத்தைக் கொண்டு 'கிஸ்மிஸ்' தயாரிப்பது எப்படி என்று எளிய முறையில் சொல்லிக் கொடுத்த தோழியின் டிப்ஸுக்கு பரிசாக இந்தத் தோழியின் 'ப்ளையிங் கிஸ்'களையே அனுப்பி வைக்கிறேன். மிஸ் பண்ணாமல் பிடித்துக் கொள்ளுங்கள்.
நெய்வேலி - 7, க. ராஜேஸ்வரி கண்ணன்.

✉ தெய்வீகத் திருமதி எம்.எஸ். அவர்களின் திருமுக முகப்புப் படம் அழகின் உச்சம். வணங்கி மகிழ்ந்தேன்.
திருவண்ணாமலை, எல்.எம். மங்கை.

✉ ஸ்ரீகாந்த்தின் சரித்திர நாயகிகளை இக்கால அம்மாக்களாக வரித்து வரையப் பட்ட கற்பனையான "எங்கள் தாய்" இரசிக் கத்தக்கதாய், இனிதாய் அமைந்திருந்தன!
நெய்வேலி , கே. சுந்தர்.

✉ 'ஈச்வரி ஜெகதீச்வரி' கட்டுரையும், படங் களும் சூப்பரோ சூப்பர். கோமதி அம்மன் படம் கண்களில் ஒத்திக் கொள்ள வேண்டும் போல் அவ்வளவு கருணைப் பார்வையுடன் கூடிய படம். சங்கரன் கோவிலுக்குச் சென்று தரிசித்திட வேண்டும் என்ற ஈர்ப்பு ஏற்பட்டது. உண்மையில் அதிசயம்... அற்புதம்... ஆனந்தம்தான்.
கோயமுத்தூர், ஆர். அபர்ணா.

✉ 'மரம் வைத்தவன்' சிறுகதையைப் படிக் கும் சமயம், கண்ணில் நீர் வந்து, படிக்கவே இயலாமல் செய்து விட்டது. அவ்வளவு யதார்த்தமாக உள்ளது. எழுதியவருக்கு மிகுந்த பாராட்டுக்கள்.
ஹோசூர், வசந்தி கேசவன்.

✉ அன்பு வட்டத்தில் கேள்விகளுக்கு அடுக் கடுக்காய், அசத்தலாய், அன்பாய், அப் பட்டமாய், ஆரோக்கிய மாய் பதில ளித்து வாசகி களை அர வணைத்துச் செல்வது கண்டு பிரமிப்புற்றேன். அப் பப்போ அங்கங்கே 'பஞ்ச்' டயலாக்... பில்டர் காப்பியின் சுவையே தனிதான். மிக வும் ரசித்தேன். சுவைத்தேன்.
சென்னை - 41, புஷ்பா நரசிம்மன்.

✉ 25 வகையான ஊறுகாய் செய்முறைகள் டிப்ஸ் தந்து அசத்திய விதம் வெகு ஜோர். குறிப்பறிந்து தகவலை அள்ளிப் படைப்ப தில் அசத்தலான ஆள் நீங்க! பாராட்டுக்கள்.
புதுவை - 3, கே. லீலாபதி.

✉ நேருவுக்கு காரோட்டியாக இருந்த பாலம்மா மன்னார்குடியில் பெரிய பண் ணையார் வீட்டில் பிறந்து வசதியாக வாழ்ந்தவர். ஒரு பொதுக் கூட்டத்தில் நேரு வுக்கு மாலை போட்டதற்காக அவரின் கண வர் அவரை விலக்கி விடவே, அவர் தீவிர மாகச் சமூகத் தொண்டு செய்வதில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டார்.
சென்னை - 83, கே. பிச்சம்மாள்.

✉ எப்பொழுதும் பிஸியாகவே இருக்கும் என்னவர், அன்று மங்கையர் மலரை படித்து விட்டு, "அடடா பொது அறிவியல், விஞ்ஞானம், விளையாட்டு, ஆன்மிகம்னு எல்லா விஷயத்தையும் அள்ளித் தரும் அட்சய பாத்திரமா இருக்கே" என்று கூறி இதுவரை நான் சேமித்து வைத்திருந்த பொக் கிஷங்களை ஒவ்வொன்றாக (ம.மலர்) படிக்க ஆரம்பித்து விட்டார். கண்ணம்மா உண்மை யிலேயே நீ சூப்பர்மா!
மதுரை - 20, எஸ். மதிப்பிரியா.

✉ "தாயைப் பிழைத்தாலும் தண்ணீரைப் பிழைக்காதே'' என்ற பழமொழியை "தாயைப் பழித்தாலும் தண்ணீரைப் பழிக் காதே" என்று சிதைத்துள்ளதாக நாமக்கல் கவிஞர் தன் கட்டுரைத் தொகுப்பு ஒன்றில் கூறியுள்ளார் - இதை உறுதிப்படுத்தும் வகை யில் "நீர் பிழை புரிதல் ஊர்ப் பிழைத்தற் றால், நெடுமுடி மன்னவன் கடுஞ்சிறை கொள்ளும்" என்று ஒரு பழைய கல்வெட் டுக் குறிப்பு உள்ளதையும் குறிப்பிட்டுள்ளார் அவர் என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.
கும்பகோணம், எஸ். மைதிலி.

# கண்ணம்மா நீ சூப்பரம்மா!

முதன் முதலாக சரித்திரம் படைத்த, பெண்கள் பற்றிய தகவல்களில் முதல் பெண் மருத்துவராக டாக்டர். முத்துலக்ஷ்மி ரெட்டியை குறிப்பிட்டுள்ளீர்கள். ஆனால் முதல் பெண் இந்திய மருத்துவர் டாக்டர். ஆனந்தி கோபால்ராவ்தான்.
- தையு ராமமூர்த்தி, சென்னை - 40.

பெட்டகம் -II அட்டை வண்ணப்படம் : ஸ்ரீஹரி

# அன்பு வட்டம்

## உங்களுடன் ஒரு கலந்துரையாடல்



• *சு. தேவகாந்தி, சென்னை - 81.*

*மண் ஆசை, பெண் ஆசை, பொருள் ஆசை இதில் எந்த ஆசை சிறந்தது?*

இந்த மூன்று ஆசைகளுமே சிறந்தவை. வாழ்க்கைப் படகு மிதப்பதே ஆசை எனும் அலையில்தானே! என் தாய்நாட்டு மண், என் மூதாதையர் வாழ்ந்த கிராமத்து மண், எத்தனையோ மகான்கள் நடந்து வழிபட்ட கோயில் மண் இப்படி மண்ணாசையும், உலக நாயகியாக இயக்கி வரும் சக்தி எனும் பெண், பெற்ற தாயாகிய பெண், வாழ்வில் இன்ப துன்பங்களில் பங்குகொள்ளும் மனைவியாகிய பெண் ஆகிய பெண்களின் மீது ஆசையும், தானமும், தருமமும் செய்வதற்குப் பொருள் வேண்டுமே என்பதற்காகப் பொருளாசையும் கொள்ளத்தான் வேண்டும். இத்தனையும் வேண்டும் எமக்கேலோர் எம்பாவாய்!!

*பி. சந்திரா பத்மநாதன், சென்னை - 74.*

*இந்தக் காலத்தில் இளைஞர்கள் திருமணமானவுடன் தாயை விட, தாரமே பெரிதாகக் கருதுகிறார்களே? இவர்களுக்கு தாங்கள் கூறும் அறிவுரை என்ன?*

அந்தக் காலத்தில் மனைவி வந்ததும் கணவன் மாறாததற்குக் காரணம், கூட்டுக் குடும்பம், அவர்களுக்குள் சொல்லாமலேயே விதித்துக் கொண்டிருந்த கட்டுப்பாடு, இயல்பான வாழ்க்கை முறை, இவையனைத்துக்கும் மேலாக, யார் யாருக்கு எந்த இடத்தில் முக்கியத்துவம் தரவேண்டும் என்பதனை அவர்களுக்கு முந்தைய தலைமுறை வாழ்ந்து காட்டிப் புகட்டியிருந்த வகை என்பது என் கருத்து. இந்த இதழில் மணமகனுக்குச் சொல்லியிருக்கிறோமே!

*ராஜி கணேசன், வளசரவாக்கம்.*

*என் கணவர் ஆண்களுக்காக 'ஸ்பெஷல் டே' இல்லையே என்று கூறுகிறார். உங்கள் கருத்து என்ன?*

ஆண்கள் தினம் மகிழ்ச்சியோடு கொண்டாடலாமே! ஆனால், ஒரு நாள் மட்டும் கொண்டாடுவதில் என்ன பயன்? மகளிர் தினத்தன்று மட்டும் பெண்களைப் போற்றுவதும், அவர்களுக்குச் சிறப்புத் தள்ளுபடி என்று தம் வியாபாரத்தைப் பெருக்குவதும், அடுத்த நாளே அவர்களை மதிக்க மறப்பதும், ஏசுவதும், துன்புறுத்துவதும், போகப்பொருளாய் மட்டுமே கருதுவதும் நம் நாட்டில் இல்லாத நன்னாள் மலரும்போது ஆண்டு முழுவதுமே ஆண்கள் தினமாக மனமுவந்து கொண்டாடுவோம்! அவசியம் கொண்டாடுவோம்.

*லக்ஷ்மி கோபாலகிருஷ்ணன், ஈரோடு.*

*கோபம் குறைந்து மனம் ஒருநிலை பெற என்ன செய்ய வேண்டும்?*

கோபம் என்பது நவரசங்களில் காரமான ஒன்று. அதை நாம் அடக்கி ஆளாமல் விட்டு விட்டால், அது நம்மைச் சாப்பிட்டு விடும். கோபத்தினால் உடல் உள்ளுறுப்புகள் பாதிக்கப்படுவதாகச் சொல்கிறார்கள்.

நரம்புத் தளர்ச்சிக்குக் காரணமே மூக்கு நுனிக் கோபமல்ல, கண் மண் தெரியாத கோபம். ஒவ்வொரு நாளும் இரண்டு மணி நேரம் மௌன விரதத்தைக் கடைப்பிடித்து வாருங்கள். அபிநயம் கூட வேண்டாம்.

என்ன நடந்தாலும் மௌனத்தை விடாதீர்கள். உங்கள் கோபம் கட்டுக்குள் வருவதை உணர்வீர்கள். தார்மிகக் கோபமாக இருந்தால் அதைக் கட்டுப்படுத்தாதீர்கள். நியாயம் பிறக்க அந்தக் கோபம் தேவை!

*ஆர். ராஜலட்சுமி, கரூர்.*

*பெண்களுக்கு நகைச்சுவையுணர்வு குறைவு என்பது சரிதானா?*

சரியில்லையே! பெண்ணுக்கு நகைச்சுவை உணர்வு அதிகம் இருந்ததால்தான் எத்தனையோ கடினமான காலகட்டங்களைக் கடந்திருக்கிறாள். ஒரு மணி விழாவில், வயதில் பெரியவர்கள் ஆசீர்வாதம் செய்ய, மணி விழா நாயகி மூட்டு வலியால் சிரமப்பட்டு விழுந்து கும்பிடக் குனிந்த போது மணி விழாக் கண்டவர், 'எல்லாரும் தர்ற ஆசி எனக்கு! வாதம் மட்டும் உனக்கு' என்றதும் 'நான்தான் விழாநாயகியாச்சே!' என்று சொல்லி, நின்றபடியே கும்பிட்டாராம். நகைச்சுவையும், (பொன்) நகையில் சுவையும், நகைக்கப் பேசுவதில் சுவையும் பெண்களுக்கு எப்போதும் உண்டு.

*பிரபா டாக்கர், ஹைதராபாத் - 4.*

*என் இனிய இல்லம் 10 மாதப் போட்டியில் வெளியூர் சகோதரிகளான நாங்கள் கலந்து கொள்ளலாமா? சென்னை சகோதரிகளுக்கு மட்டுமா?*

என் இனிய இல்லம் பத்து மாதப் போட்டி உலகெங்கிலும் இருக்கின்ற மங்கையர் மலர் வாசகிகளுக்காகவே! வெளியூர், வெளிநாடு என்ற வட்டத்தைத் தாண்டி அல்லவா நாம் பிணைக்கப்பட்டுள்ளோம்! நல்ல வேளையாகக் கேட்டீர்கள்! நீங்களாக நினைத்துக் கொண்டு போட்டியில் கலந்து கொள்ளாமல் இருந்து விடப் போகிறீர்கள்!

*ப. ராமகிருஷ்ணன், புதுக்கோட்டை.*

*என் போன்ற ஆண் வாசகர்களை 'மங்கையர் மலர்' எந்த வகையில் பார்க்கிறது?*

ஆண் வாசகர்களையும் அறிவு ஜீவிகளாகவே பார்க்கிறோம். மலர் எனும் குடும்பத்தின் உண்மையான அங்கத்தினராகவும், மங்கையர் மலர் வாசகியின் மனம் கவர்ந்த நாயகராகவும், நல்ல தந்தை



• தாய் மண்ணே வணக்கம்!






யாகவும், சகவாசகிகளின் அன்புச் சகோதரனாகவும், நல்ல குடிமகனாகவும் தான் எங்களது பார்வையில் என்றென்றும் விளங்குகிறீர்கள்! அறிவுக்குண்டோ ஆண் என்றும் பெண் என்றும் பேதம்?

*கே. பட்டு, குரோம்பேட்டை.*

*இறந்த என் மகனின் பல உறுப்புகளை (கண்கள் - சிறுநீரகம், இதயம், கல்லீரல்) தானமாக வழங்கிய என் மனதில் ஒரு சமயம் நாம் செய்தது சரியா என்கிற கலக்கம் ஏற்படுகிறதே? தவறுதானே சகோதரி?*

காலம் மாறி விட்டது. சராசரி மனிதனது ஆயுள் இப்போது உயர்ந்திருக்கிறது. நீண்ட காலம் தொடர்ந்து செயல்படுவதால், உடல் எனும் இயந்திரத்தின் உறுப்புகள் பழுதடைவது இயற்கைதானே! அப்படிப் பழுதடைந்த உறுப்புக்களை மீண்டும் இயங்கச் செய்வதில் உங்களுடைய சோகத்தையும் மீறி மனிதகுலத்துக்கு உதவுகின்ற நல்ல எண்ணத்தாலும், நற்செயலாலும், பண்பாலும் இறைவனே உங்களைப் படைத்த பொழுதினும் மகிழ்வார். ஆயிரம் அன்ன சத்திரம் கட்டுவதிலும், கல்விச் சாலைகள் அமைப்பதிலும் உயர்ந்தது தங்கள் பணி! கரம் கூப்பிச் சிரம் தாழ்த்திப் பணிகிறோம் சகோதரி!

*விசாலாக்ஷிப்ரதாபன், அம்பத்தூர்.*

*நான் வேலைக்குச் செல்வதால் எங்கள் குடியிருப்பில் என்னுடன் நன்றாகப் பேசும் இரு இல்லத்தரசிகளிடம் வீட்டுச் சாவியைக் கொடுத்து வருகிறோம். இருவர்களில் ஒருவர் மற்றொருவரிடம் நமக்கு இவர்களால் என்ன பலன்? இவர்கள் சம்பாத்தியத்தில் நமக்கு தரப் போகிறார்களா? நாம் இவர்களுக்கு ஏன் கேஸ், கொரியர், வாங்க வேண்டும்? என்று கேட்கிறார். மனம் வேதனைப்படுகிறது.*

இந்தக் குறுகிய வட்டத்தை நம் நாடு முழுதும் காண முடிகிறது. காரணம், நாம் இல்லத்தரசிகளாக மட்டுமே இருக்கிறோம் என்ற மனப்புழுக்கத்தினாலும், பணிபுரியும் பெண் எல்லா வசதிகளையும் அடைகிறாள் என்ற ஏக்கப் பெருமூச்சினாலும் அவர்களது கண்ணோட்டம் மெல்லிய (பொறாமை)புகைமூட்டத்தினால் மறைக்கப்படுகிறது. ஒரு வழி இருக்கிறது. அவர்களுடைய பிறந்த நாள், மணநாள், பண்டிகை நாட்களில், அவர்களுடைய சொந்த உபயோகத்திற்கான பொருட்களை, உள்ளன்போடு தந்து அணைத்துக் கொண்டு வாழ்த்துவீர்களானால், அவர்களுக்கு உள்ள தாழ்வு மனப்பான்மை மாறும். என்றாவது ஒருநாள், அந்தப் பெண் மணிகளை வெளியில் கூட்டிச் செல்லுங்களேன். நீங்கள்தான் அவர்களை உங்கள் அன்பு வட்டத்தில் அரவணைத்துக் கொள்ள வேண்டும். அன்பால் எதையும் சாதிக்க முடியும். ஒற்றைச் சக்கரத்தால் வண்டி உருளாது. ஒற்றுமைச் சக்கரத்தால் உலகையே உருட்டுவோம் என்ற மு. மேத்தாவின் வரிகள் உரமூட்டட்டும்.

*எம். நிஷா உசேன், சிவகாசி.*

*குழந்தையைத் திறம்பட வளர்ப்பதில் ஓர் அன்னையின் அர்ப்பணிப்பு (பங்களிப்பு) எப்படி சரியானபடி அமைய வேண்டும்?*

இன்றைய போட்டி உலகில் குழந்தைகளை வளர்ப்பது மிகப் பெரிய சவால்தான். இருப்பினும், விவரம் தெரியும் வரை உங்களுடைய அன்பு, அரவணைப்பு, வழி நடத்தல், உங்கள் கனவுகளை அவர்களோடு பகிர்ந்து கொள்ளுதல், தனித்திறமைகளின் சிறப்பு, நாட்டுப்பற்று, நல்ல தலைவர்களான முன்னோடிகளின் வரலாறு, நற்பண்புகளை நீங்கள் எப்படிக் கடைப்பிடிக்கிறீர்களென்பதையும், நல்ல ரசனை எது, தீயவை எவை என்பதையும் எடுத்துச் சொல்லுங்கள். அவர்களுக்கு உங்களை முழுமையாகத் தர வேண்டும். இந்த வேள்வியில் தாயின் தன்னலமற்ற பங்களிப்பு 120%! பள்ளி நாட்களில் கண்காணிப்பும், விடுமுறை நாட்களில் அதிக அரவணைப்பும், அவர்களோடு விளையாடுவதும் நெருக்கத்தை அதிகமாக்கும்.

* இந்த மாதம் அன்பு வட்டம் சிறந்த கேள்விக்கு நர்மதா பதிப்பகம் வழங்கும் ரூ. 250/- மதிப்புள்ள புத்தகங்களை பரிசாகப் பெறுபவர் : சு. தேவகாந்தி, சென்னை - 81.



மருதாணி இலைகளை அம்மியில் வைத்து வெண்ணெய் போல் அரைத்து மரச்சிப்பின் மேல் வைத்து, உள்ளங்கையில் பழைய ஒரு ரூபாய் அகலத்துக்கு வட்டமும் விரல்களின் நுனியில் பழைய போலீஸ்காரர் தொப்பியும் வைத்து

# கைசிவக்க மருதாணி !

அம்மா, சித்தி, அத்தை யாராவது வாயில் சாதம் ஊட்டி விடப் பாயில் படுத்து உறங்கியது நினைவு இருக்கிறதா? அது அந்தக் காலம்! இப்போது எல்லாமே நம் வசதிக்கு வளைந்து கொடுக்கிற காலம்!

மணப்பெண்ணுக்கு அழகு நிலையத்தார் மெஹந்தி வைப்பதைப் போல் வீட்டிலுள்ள எல்லோருக்கும் வைக்க வேண்டும் என்று ஆசைப்படலாம். கட்டுப்படியாகுமா? கற்றுக் கொள்ள நீங்கள் தயாரானால் சொல்லித் தர நாங்கள் இருக்கிறோமே!

**செய்முறை :**

கடையில் வாங்கும் நல்ல மருதாணிப் பவுடரை (பச்சை நிறமாக இருக்கிறதா என்று பார்த்து வாங்கவும்) ஒரு மல் துணியில் நன்றாகச் சலித்துக் கொள்ளவும். காற்றுப் புகாத டப்பாவில் போட்டு வைக்கவும். அடுப்பில் ஒரு பாத்திரத்தில் 1 தம்ளர் நீர் ஊற்றிக் கொதிக்கும் போது ஒரு சிட்டிகை சர்க்கரையும் 1 ஸ்பூன் புளி பேஸ்ட், 3 டீஸ்பூன் தேயிலைத் தூளையும் போட்டு நன்றாகக் கொதிக்க வைக்கவும். சற்றுச் சுண்டியபின் கெட்டியான அந்த டிகாக்ஷனை (தூள் இல்லாதபடி) வடிகட்டி ஆறவைக்கவும்.

ஒரு கண்ணாடிப் பாத்திரத்தில் நான்கு டேபிள் ஸ்பூன் மருதாணிப் பொடியைப் போட்டு அதில் 1 டீஸ்பூன் நீலகிரித் தைலம் சேர்த்து, டீ டிகாக்ஷனைச் சிறிது சிறிதாகச் சேர்த்து ஒரு ஈர்க்குச்சியால் குழைக்கவும். கெட்டியான இட்லி மாவு பதத்தில் குழைத்தால் சரியாக இருக்கும். கட்டியில்லாமல் குழைத்து மூடி மூன்று மணி நேரம் ஊறவைக்கவும்.

பால் உறைகளைச் சுத்தம் செய்து, செவ்வகமாகக் கத்தரித்து பட்டாணிக் கடலைக் கடையில் சுருட்டுவது போல் 'கோன்' வடிவில் சுற்றி முனைகளை செல்லோ டேப்பால் ஒட்டவும். பிறகு அதன் உள்ளே ஊதிவிட்டு குழைத்த மருதாணியை ஒரு பிளாஸ்டிக் ஸ்பூனால் உள்ளே இட்டு நன்றாக



எங்களது ATMகள் மற்றும்
நெட்வொர்க்குகள் நவீனமாக
இருந்தாலும் எங்கள் முகமலர்ச்சியுடன்
கூடிய வங்கி சேவை
88 வருடங்கள் பழமையானது.

மேம்பட்ட தொழில்நுட்பத்தில் மட்டுமல்ல பாரம்பரியத்திலும் தனிச்சிறப்பு வாய்ந்த எங்கள் வங்கிக்கு உங்களை வரவேற்பதில் மகிழ்ச்சியடைகிறோம். நிறைவான மற்றும் பாரம்பரியமிக்க வாடிக்கையாளர் சேவையினை அளிக்கும் உயரிய கலாச்சாரத்தை KVB கொண்டுள்ளது. 21ம் நூற்றாண்டின் சக்தி வாய்ந்த ஆன்-லைன் கணினி சேவைகளை KVB நாடு முழுவதிலும் அளிக்கிறது. அதுமட்டுமல்ல, உங்களுக்கு பிரத்தியேக சேவைகளை அளிப்பதற்கான சிறப்பம்சங்களையும் இது தன்னகத்தே கொண்டுள்ளது. இனி வருங்காலங்களில் உங்களுக்கு பல வசதிகளுடனான சிறப்பான சேவையை அளிக்க உறுதியுடன் செயல்படுகிறது.

KVB Karur Vysya Bank

*Smart way to bank*

மடித்து 'ஸ்டேப்ளரால்' பின் அடிக்கவும். இந்தக் கோனின் அடியில் கத்தரிக்கோலால் மிகவும் நுண்ணிய துளையைக் கத்தரிக்கவும். அதன் வழியே வரும் மருதாணிப் பசையால் நமக்கு வேண்டிய சித்திரங்களைப் (பக்கத்துக்குப் பக்கம் தந்திருக்கிறோமே!) பார்த்து



எழுதவும். பேனாவைப் பிடிப்பது போல் கோனைப் பிடித்து எழுதினால் எளிதாகும். காய்ந்தபின் அதன் மீது சர்க்கரை, எலுமிச்சை கரைசலைப் பஞ்சால் தொட்டு வைக்கவும்.

நான்கு மணி நேரம் கழித்துக் கையிலுள்ள மருதாணியைச் சுரண்டி விடவும். தண்ணீரில் கழுவ வேண்டாம். கைகளில் தலைவலி பாம் அல்லது தேங்காய் எண்ணெய், அல்லது கடுகு எண்ணெயைத் தடவித் தேய்த்து விடவும். சிலர் காஸ் அடுப்பின் மீது தோசைக் கல்லைப் போட்டுச் சூடான பின் அதில் லவங்கத்தைப் பொடித்துப் போட்டு அந்தப் புகையைக் கைகளில் காட்டுவார்கள். இது தேவையானால் மட்டுமே. முதலில் ஆரஞ்சு நிறத்திலிருக்கும் வண்ணம் நேரமாக நேரமாகச் சிவந்து அழகாக ஜொலிக்கும்.

- துர்கா

## மருதாணிச் சிவப்பு

"திருவிழாவாம் திருவிழா
விரல் முழுக்க மருதாணியாம்...
பெருவிரல் சிவப்பானால்
பெரியம்மாவும் வந்திடுவாள்
சுட்டு விரல் சிவப்பானால்
கொட்டுச் சத்தம் வீட்டினிலே
நடுவிரல் சிவப்பானால்
நல்ல செய்தி கிடைத்திடுமே
மோதிர விரல் சிவப்பானால்
அத்திம்பேரும் அடுப்படியில்
சுண்டுவிரல் சிவப்பானால்
சுண்டைக்காயும் இனித்திடுமே...

- கோமதி நமசிவாயம்.

பள்ளி மாணவர்கள் இறைவணக்கம், தமிழ்த் தாய் வாழ்த்து மற்றும் நாட்டுப் பண் பாடும் பொழுது வெறும் கூச்சலாக இருக்கும், (விதிவிலக்கு பள்ளிகளும் இருக்கலாம்...) அதைத் தவிர்க்க எங்களது தலைமை ஆசிரியர் எடுத்துக் கொண்ட முயற்சி 100% வெற்றி பெற்றுள்ளது. தினமும் ஒலிநாடாவில் பாடலைப் பாடச் செய்து அத்துடன் மாணவர்களையும் பாடச் செய்து சிறிது நாட்களுக்குப் பிறகு பாடிக் கொண்டிருக்கும் நாடாவை பாதியில் நிறுத்தினார். மாணவர்கள் மீதியைச் சரியாகப் பாடி முடித்தனர், வருடம் முடியும் தருவாயில் இரண்டு வரிகளுடன் நாடாவை நிறுத்தச் செய்தார். மாணவர்கள் முழுப் பாடலையும் அருமையாக பாடுகின்றனர் ஒரே கோர்வையாக.

- மதுரை எஸ். நாமகிரி.

* ஆர். மகேஸ்வரி



# தோழி நீ வேண்டும்

தோழி நீ வேண்டும் என் பகிர்வுக்காக
தோழி நீ வேண்டும் என் உரிமைக்காக
தோழி நீ வேண்டும் என்
நெஞ்சத்தின் நினைவாக
தோழி நீ வேண்டும் என்னை ரசிக்க
தோழி நீ வேண்டும் என்
மனதின் வாசனையறிய
தோழி நீ வேண்டும்
என்னை ஊக்கப்படுத்த
தோழி நீ வேண்டும் என்னைப்
புதுப்பிக்க

தோழி நீ வேண்டும் எனக்கு ஆறுதல்
சொல்ல
தோழி நீ வேண்டும் என் உணர்வைக்
காண
தோழி நீ வேண்டும் என் திறமையை
உலகிற்குணர்த்த
தோழி நீ வேண்டும் என் மகிழ்வைக்
காண
தோழி நீ வேண்டும் என் இருதயத்
துடிப்பை உணர
அனைவருக்கும் தோழி வேண்டும் உலக
வாழ்க்கையை நிறைவு செய்ய

- ஆர். மகேஸ்வரி, பி.எஸ்.என்.ஏ.
தொழில்நுட்பக் கல்லூரி.

இளந்தளிர்கள்



# ஸ்ரீ டிராவல்ஸ்

194 - A. 2வது மாடி, அண்ணா சாலை, ஆயிரம் விளக்கு, சென்னை - 6.
Ph: 55345081, 55345082, 55345083, 28516799, 55870482
E-Mail:sritrave@satyam.net.in Web:www.sreetravels.com

## வெள்ளி விழா காணும் மங்கையர் மலர் வாசகர்களுக்கு பிரத்தியேக வட இந்திய சுற்றுலா

கொளுத்தும் கோடையில் குளுகுளு மணாலியில் வெண்பனியில் விளையாடி மகிழுங்கள்

பிரத்தியேக போட்டிகள், ஆட்டம், பாட்டம், கொண்டாட்டம், சிறப்புப் பரிசுகளோடு!

**சென்னை - டில்லி - அமிர்தசரஸ் - சிம்லா - மணாலி - சண்டிகர் - சென்னை**

பயண தேதி : 20.05.05 பயண நாட்கள் : 12 நாட்கள்
பயணத்தொகை ஒரு நபருக்கு ரூ. 6,000/- + ரயில் / விமான டிக்கெட்
குழந்தைகளுக்கு ரூ. 4,500/- + ரயில் / விமான டிக்கெட்

## சிறப்பு அம்சங்கள்:

1. இரயிலில் உணவு.
2. புது டில்லியில் உயர்தர ஓட்டலில் இரண்டு இரவுகள் தங்கும் வசதிகள். (A/c Rooms) மற்றும் அனைத்து இடங் களிலும் தரமான தங்கும் அறைகள்.
3. மணாலியில் ஹிமாசல பிரதேச நடன நிகழ்ச்சிகள்.
4. CAMP FIRE.
5. நட்சத்திர ஓட்டலில் கலை நிகழ்ச்சிகள், போட்டிகள்.
6. நட்சத்திர ஓட்டலில் சிறப்பு விருந்து.
7. நிறைவு நாளில் ஒவ்வொரு குடும்பத்துக்கும் ஸ்வீட் பாக்ஸ் அன்பளிப்பு.

**சுற்றுலா நிறைவு நாளில் மங்கையர் மலர் நிர்வாகத்தின் சார்பில் சிறப்பு விருந்தினரும் பங்கு கொள்வார்கள்.**

## திருக்கைலாய யாத்திரை

சென்ற ஆண்டில் எமது வெற்றிகரமான 4 பயணங்களுடன்

ரயில் மூலம் : ரூ. 50,000/-
விமானம் மூலம் : ரூ. 59,000/-

மே 17, 31, ஜீன் 16, ஜீலை 17. 19 நாட்கள்
{20 பேர் கொண்ட குழுவாக வருபவர்களுக்கு பிரத்தியேகமாக ஏற்பாடு செய்யப்படும்}

★ பூரி - புவனேஷ்வர் - கயா - புத்தகயா - காசி - அயோத்தியா - அலகாபாத் - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - ஜம்மு வைஷ்ணவி - புது டில்லி - ஆக்ரா - மதுரா - விருந்தாவன்.
ரூ. 8,900/- டிக்கெட்டுடன்

நேபாளம் - முக்திநாத் - போக்ரா
ரூ.18,500/- (ஹெலிகாப்டர் பயணத்துடன்)

## LTC மற்றும் கோடைக்கால சுற்றுலாக்கள்

★ சிம்லா - மணாலி - அமிர்தசரஸ் - டில்லி
ரூ. 5,800/- + ரயில் டிக்கெட்

★ கல்கத்தா - டார்ஜிலிங் - கேங்க்டாக்
ரூ. 6,500/- + ரயில் டிக்கெட்
கூடுதலாக காத்மாண்டு - போக்ரா - வாரணாசி. ரூ. 5,000/- + டிக்கெட்

★ காஷ்மீர் - அமிர்தசரஸ்
ரூ. 7,900/- டிக்கெட்டுடன்

★ பத்ரி - கேதார் யாத்திரை
ரூ. 6,500/- டிக்கெட்டுடன்

★ பஞ்சதுவாரகை யாத்திரை
ரூ. 8,900/- டிக்கெட்டுடன் (A/C பஸ் வசதியுடன்)

4 பேர் அல்லது அதற்கு மேல் குழுவாக வருபவர்களுக்கு நாங்கள் விரும்பும் தேதியில் பிரத்தியேகமாக ஏற்பாடு செய்து தரப்படும்/ அனைத்து சுற்றுலாக்களுக்கும் அருமையான தங்கும் அறைகள், தென்னிந்திய சைவ உணவு/ டீலக்ஸ் பஸ் வசதி உட்பட/ அனைத்து பேங்க் கார்டுகள் ஏற்கப்படும்/ LTC மற்றும் டிராவல் லோன் வசதி உண்டு.

# மங்கையர் மலர்

## மே மாத மெகா போட்டி



பரிசு :
பிரஸ்டீஜ் டீலக்ஸ் அனோடைஸ்ட்
பிரஷர் குக்கர் மற்றும்
ப்ரீதி செஃப்ப்ரோ ப்ளஸ் சூப்பர்
எக்ஸ்ட்ராக்டர். (மிக்ஸர் ஜூஸர்)

**மே** மாத மெகா போட்டி கணினி சம்பந்தப்பட்டது. கணினியில் பயன்படுத்தப் படும் பொதுவான, எளிமையான வார்த்தைகளை அமைத்து பின்புறம் ஒரு புதிர் கொடுக்கப்பட்டுள்ளது. அவற்றைக் கண்டுபிடித்து எழுதி அனுப்புங்கள்.

## போட்டி விதிமுறைகள்

1. அனைவரும் கலந்து கொள்ளலாம்.
2. வயது வரம்பு இல்லை.
3. எத்தனை கூப்பன்கள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
4. கடைசித் தேதி : 15.4.2005
5. பரிசுகள் அனைத்தும் விதிமுறைகளுக்கு உட்பட்டவை.
6. ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.
7. சரியான விடை அளிப்பவர்களிலிருந்து குலுக்கல் முறையில் ஒருவர் பரிசுக்குரியவராகத் தேர்ந்தெடுக்கப்படுவர்.
8. மங்கையர் மலர், 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032.

பெயர்: ........................................

வயது: ........................................

முகவரி: ........................................

........................................

........................................

........................................

ஈமெயில்: ........................................

தொலைபேசி எண்: ........................................

# மங்கையர் மலர்

# மே மாத மெகா போட்டி

## கம்ப்யூட்டர் புதிர்

கீழே உள்ள ஒவ்வொரு எண்ணுக்கு எதிரிலும் ஐந்து வார்த்தைகள் இருக்கின்றன. ஒவ்வொரு வார்த்தையிலிருந்தும் ஒரு எழுத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அதே வரிசையில் இந்த ஐந்து எழுத்துக்களையும் இணைத்தால் கணினி தொடர்பான ஒரு சொல் அல்லது பெயர் கிடைக்கும். இப்படி பத்து விடைகளையும் கண்டுபிடித்து எழுதுங்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. மாலினி | தனிமை | வட்டி | கடம் | சுவர் |
| 2. இனிமை | கன்னி | ஃபோட்டோ | சிறிது | ஆஸ்தி |
| 3. தம்பி | இல்லை | கேட்டை | குட்டு | அஸ்கா |
| 4. ஆமென் | நன்றி | பொட்டு | கருமை | இருள் |
| 5. கட்சி | வலிமை | சுக்கு | கடமை | அவன் |
| 6. பிள்ளை | பிரிவு | அண்டா | மடமை | சுவர் |
| 7. தப்பு | ரொட்டி | நாக்கு | இராது | சுகம் |
| 8. அன்னை | மெட்டி | பரிவு | சொக்கு | காதல் |
| 9. அக்கா | ஈராஸ் | கபம் | ரோமியோ | ஜவ்வு |
| 10. அடிமை | ஏவுகணை | கோட்டை | புதிது | அட்டை |

நினைவிருக்கட்டும். கணினி வேலை வாய்ப்பு என்றதும் நினைவுக்கு வரும் நாடு, கணினியில் உள்ள பாகத்தின் பெயர் (தமிழ் பெயரோ, பழக்கமாகிவிட்ட ஆங்கிலப் பெயரோ), கணினியுடன் செஸ் விளையாட்டில் தோற்ற பிரபலமானவர், கணினியுடன் இணைக்கப்படக்கூடிய பாகம், கணினியால் கோடீஸ்வரர் ஆனவர், நம் நாட்டின் சிறந்த கணினி நிறுவனங்களில் ஒன்று - இப்படி எது தொடர்பாகவும் இந்த வார்த்தைகள் இருக்கலாம்.




திருமணம் முடிந்த புதுமணப் பெண்களின் மனநிலையில் புது வாழ்வின் மகிழ்ச்சி ஒருபுறம் இருந்தாலும், மணவாழ்க்கை துவங்குகையில் அதன் விளைவாக ஏற்படும் உடல்ரீதியான சங்கடங்களைச் சொல்லத் தயங்கும் மனத்தவிப்பு நிலவுவது இயற்கையே. அவற்றைத் தகுந்த மருத்துவ ஆலோசனைகள் பெறுவதன் மூலமாக நிவர்த்திக்க இயலும்.

**மண உறவு கொள்கையில் வலி மற்றும் விருப்பமின்மையின் காரணங்கள் :**

மண உறவில் விருப்பமின்மை அல்லது தவிர்க்க விரும்புவதற்கு அடிப்படையாக பெரும்பாலும் மனரீதியான சில சமயம் உடல்ரீதியான காரணங்கள் இருக்கலாம்.

# எப்படிச் சொல்வேனடி...

**மனரீதியான காரணங்கள்:**

1. வளரும் வயதில், பாலியல் உணர்வு கொள்ளுதல் தவறானது என்றும், மண உறவு கொள்ளுதல் மனைவியின் கடமை என்றும் சொல்லி வளர்க்கப்பட்ட விதம்.

2. குழந்தையாகவும், வளரும் வயதிலும் பார்த்து வெறுத்துப் போன மகிழ்ச்சியைப் பிரதிபலிக்காத குடும்பச் சூழ்நிலைகள்.

3. மணந்து கொண்டவரிடம் முழுமையாக அன்பு செலுத்த இயலாமை - ஒரே குழந்தையாக வளர்ந்து பெற் றோரைப் பிரிய விரும்பாதது; கணவரின் தினசரி நடவடிக்கைகள், போக்குகள் தன் மனதில் கற்பனை செய் திருந்தவனைப் போலன்றி இருத்தல் இவைகளே அதற்கு தடைக்கற்களாக இருக்கக்கூடும்; தன்னையே முதன்மைப்படுத்த விரும்பும் பெண்ணும் பாதிக்கப்படக்கூடும்.

4. கருவுறுதலின் போதும், பிரசவ சமயம் துன்பங்களையும் பிறர்வாயி லாகக் கேட்டதனால் ஏற்பட்ட பய உணர்ச்சி, சில பெண்களின் இயற்கை யான பாலுணர்வை அடக்கிவிடக்கூடும்.

5. தற்காலிக கருத்தடை முறையாக கருத்தடை மாத்திரைகளைப் பயன்படுத்தும் பெண்களின் இயல்பான பாலியல் உணர்வை, இந்த ஹார்மோன் மாத்திரைகள் கணிசமாகக் குறைக்கக்கூடும்.



## சதம் கண்ட சாம்பார்ப் பொடி

**எ**ன்னுடைய பாட்டி தீபங்குடியைச் சேர்ந்தவர். நூறு ஆண்டுகளுக்கு முன் அவரது குடும்பத்தில் சாம்பார்ப் பொடி செய்த வகையையே இன்றும் என் பேரன், பேத்தி வரை உபயோகப்படுத்தி வருகின்றனர். இதை மங்கையர் மலர் வாசகிகளும் பயன்பெற இங்கே தந்துள்ளேன்.

குண்டு மிளகாய் வற்றல் - ¼ கிலோ, தனியா (மல்லி) - ¼ கிலோ, விரலி மஞ்சள் (நீளமானது) - 12, மிளகு - 50 கிராம், வெந்தயம் - 50 கிராம், துவரம் பருப்பு - ½ தம்ளர், கடலைப் பருப்பு - ½ தம்ளர், உளுத்தம் பருப்பு - ½ தம்ளருக்கு சற்றுக் குறைவாக.

வெய்யிலில் உலர்த்தி அரைத்தது அந்தக் காலம். லேசாகச் சூடு வரும் வரை வாணலியில் வறுத்து அரைக்கவும். அரைத்த உடனேயே மூடக் கூடாது. அரைந்த பொடியை பேப்பரில் கொட்டித் துலாவி வைக்கவும். நன்கு ஆறிய பின்னர் மரக்கரண்டியால் அள்ளிப் பாட்டிலில் போட்டு மூடி வைக்கவும்.

**- கமலா ஸ்ரீநிவாஸன்.**

6. புதிதாக ஏற்றுக் கொண்ட வீட்டுப் பொறுப்புகள், வேலைக்குச் செல்லும் பெண்களுக்கு அதிக உடல் சோர்வை ஏற்படுத்தக்கூடும். இதனால் ஆர்வமின்மை ஏற்படுவது சகஜம்தான்.

**சிறுநீர்ப்பை தொற்று (Honeymoon Cystitis):**

இந்த மருத்துவச் சொல் புதுமணப் பெண்களின் சிறுநீர்ப் பையில் ஏற்படும் ஒருவகை தொற்றினைக் குறிப்பிடுவதாகும். பெண்ணின் கருப்பாதையிலும், வெளிப்பகுதியிலும் உள்ள சாதாரணமான பாதிப்பு விளைவிக்காத கிருமிகள் மண உறவிற்குப் பின் சிறுநீர்ப் பாதை வழியே சிறுநீர்ப் பையில் தொற்றினை ஏற்படுத்தக்கூடும். இதனாலும், மற்றும் மண உறவினால் ஏற்படும் வலியினாலும், சிறுநீர் முழுவதுமாக வெளியேறாமல் தேங்கியிருப்பதாலும் சிறுநீர்ப் பையில் உள்ள தொற்று இன்னும் அதிகமாகப் பெருக வாய்ப்பு உண்டு.

அது மட்டுமல்லாது, தம்பதியினர் பயன்படுத்தும் கருத்தடை சாதனங்களான செர்விகல் டயப்ராம் எனப்படும் பொருளும், விந்தணுக்களை அழிக்கவல்ல ஜெல் (spermicidal gel) ஆகியவை தொற்றினைப் பல்கிப் பெருகி, சிறுநீர்ப் பையில் பாதிப்பை ஏற்படுத்த வழிசெய்கின்றன.

இந்தத் தொற்றினால் தற்காலிக அடிவயிற்று வலியும், சிறுநீர் கழிக்கையில் வலியும், முழுவதுமாக வெளியேற்ற இயலாத தன்மையும் அதனால் அடிக்கடி சிறுநீர் கழிக்க வேண்டியிருத்தலும், புதுமணப் பெண்ணுக்கு மனத்தவிப்பை ஏற்படுத்துவது இயற்கையே. எனவே, மருத்துவ ஆலோசனையை நாடுதல் அவசியம். அது மட்டுமன்று. இந்தத் தொற்றினைக் குணப்படுத்தாவிடில், அதன் பின்விளைவுகளாக சிறுநீரகமும், பின்பு பாதிப்புக்கு ஆளாக நேரிடலாம்.

இத்தகைய நிலை மண வாழ்க்கையை மெல்ல மெல்ல சிதைக்கக்கூடுமென்பதால், புதுமணமக்கள், ஒருவரையொருவர் பழி சுமத்திக் கொள்ளாமல், மகப்பேறு மருத்துவரையும், பின்பு அவர் மூலமாக மணவியல் ஆலோசகரையும் அணுகுதல் அவசியம். இதனால் உடலியல் காரணங்களும், மனவியல் காரணங்களும் கண்டறிந்து களையப்பட வாய்ப்புகள் உண்டு.

# பொட்டில் அடித்தாற் போல்...

**இனி உங்களைப் பற்றியும் உங்கள் பிரச்சனைகளுக்கு சரியான தீர்வையும் துல்லியமாக அறிந்து கொள்ள இதோ ஓர் உலகத்தரம் வாய்ந்த எளிய வழி...**

நமது சரியான **பிறந்த தேதி** மற்றும் பெயரை மட்டும் கொடுத்தால் போதும், மிகத் துல்லியமாக **நாம் ஏதும் கூறாமலேயே பொட்டில் அடித்தாற் போல்** நம்மைப் பற்றியும் நாம் சந்தித்து வரும் பிரச்சனைகள் பற்றியும் AAN* விஞ்ஞான முறைப்படி நேரில் பார்த்தது போல் கூறி, நிரந்தரத் தீர்வு காண எளிய மற்றும் சிறந்த பரிகார முறைகளைப் பற்றியும், ஆலோசனை வழங்கி வருகிறார் மாமேதை Master of AAN* திரு. **'பக்ஷி' தி. வேணுகோபாலன்** அவர்கள். இவர் இந்தியாவிலேயே முதலாவதாக AAN* முறைப்படி பரிந்துரைக்கப்பட்ட நபர்களுக்கு மட்டுமே சக்தியேற்றி, செறிவூட்டப்பட்ட (Energised & Enriched) உயர்தர (imported) இரத்தினக் கற்களை வழங்கி அவர்களது வாழ்வில் அதிசயிக்கத்தக்க நிகழ்வுகளை நிகழ்த்தியும் வருகிறார். 15 வருடங்களுக்கும் மேலாக அனுபவம் மிக்க இவர் புதுதில்லியில் உள்ள Institute of Numerology (R&D)வில் *சீனியர்* மெம்பராகவும் உள்ளார்.

இந்த அற்புதமான கலையைப் பரிசோதிக்க விரும்பும் ஜோதிடர்கள் மற்றும் எண் கணித நிபுணர்கள் மறைமுகமாக அல்லாமல் நேரிடையாகவே முன்பதிவு செய்து வரலாம் என்று சவால் விடுகிறார் திரு. **'பக்ஷி' தி. வேணுகோபாலன்.** மேலும் உங்களுக்கு அதிர்ஷ்டத்தையும் அமைப்பையும் உருவாக்கி எந்தத் தொழில், என்ன வியாபாரம் செய்தால், குறுகிய காலத்தில் பெரு வெற்றி பெறலாம் என்பதையும், அரசியலில் வெற்றி, **இராகு - கேது தோஷங்களால் ஏற்படும் திருமணத் தடைகளை ஏற்ற பரிகாரங்கள் மூலம் துரித நிவர்த்தி செய்வது,** குழந்தை பிறப்பு, வெளிநாட்டில் வேலை வாய்ப்பு, உங்களைச் சார்ந்த ஆண் - பெண்ணின் ஒழுக்கம் போன்ற பல்வேறு சந்தேகங்களுக்கும், அத்துடன் ஒவ்வொரு இரத்தின மணியும் எவ்விதமான_Energies (either Projective + or Receptive - Measured in Electron Volts- 'eV') வெளியிடுகிறது (அ) உள்ளிழுக்கிறது என்பதையும், மேலும் இவற்றை நாம் எப்படி ஒருங்கிணைத்துப் பயன்படுத்த வேண்டும் என்பதையும் (in order to regain the equilibrium position in our body Electro - Magnetic field - AURA) இவரது AAN* முறையில் மட்டுமே மிகத் தெளிவாக அறிய முடிகிறது.

(எ-கா) ஒரு செறிவூட்டப்பட்ட சுத்தமான வைரம் 5.5 'eV' Projective Wave Energy வெளியிடுகிறது.

**Courtesy:** Gemmological Association of Great Britain.

இவரது தொடர்பு முகவரி:(பாண்டிச்சேரி)


'பக்ஷி' **தி. வேணுகோபாலன் Master of AAN* & Aura Viewer**
**(Senior Member, Institute of Numerology (R&D) Nangal Raya, New Delhi - 110 004)**
**ஆலோசனைக்காக : 6, வ.உ.சி வீதி, காமராஜ் நகர், (வேல். சொக்கநாதன் திருமண மண்டபம் மற்றும் வெஸ்லி பள்ளி அருகில்) பாண்டிச்சேரி - 605 011.**
**Phone: 0413 - 2211667 Cell: 98423 - 66855 'AAN* - ADVANCED AURIC NUMEROLOGY'**
**Consulting Hours : 9.00 a.m to 1.00 p.m & 3.00 p.m. to 8.00 p.m**


**Do you know what is NAME?**

N = Natal's
A = Abstract
M = Maintained by
E = Eternal

**Space Sponsored by Institute of Numerology (R&D) New Delhi**

---

*Exclusive Handloom Sarees Manufacturers*

நம் பாரம்பரியம் நமது சேலைகளில்

# தனலக்ஷ்மி சாரீஸ்

42 ஆண்டுக்கால வாடிக்கையாளர் சேவையில்

# 10%

# மார்ச் 25 முதல் ஏப்ரல் 14 வரை

உயர்தர
- காட்டன் / கைத்தறி சேலைகள்
- பேன்சி ரக சேலைகள்
- சுடிதார் ரெடிமேட் மெட்டீரியல்
- பெட்டிகோட், நைட்டீஸ்

அனைத்து மாநில சேலை ரகங்கள்...

3, கோபாலகிருஷ்ண ரோடு, தி.நகர், சென்னை - 17 (பாண்டி பஜாரிலிருந்து டாக்டர் நாயர் ரோடுக்கு திரும்பியவுடன் இரண்டாவது இடதுபுற சாலை)
**Bus No - 9, 10, 47A, 47D Resi: 2815 7311 Shop: 2815 1327**

**Sundays open, Major Credit Cards Accepted**

*சரியான விலை... உயர்ந்த தரம்... பணிவான சேவை*






திருமணம் நிச்சயம் செய்கையில், பத்தோடு ஒன்று பதினொன்று என கருதாமல், முதல் பொருத்தமாகக் கருத வேண்டியது மணமக்களின் இரத்த க்ருப் மற்றும் Rh வகையுமே ஆகும்! ஏனெனில் 'மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன் நன்கலம் நன்மக்கள்பேறு' எனும் வள்ளுவர் வாக்குக்கொப்ப குழந்தைபேற்றினை நிலைக்கச் செய்யப் போவது மேற்கூறிய இரண்டு காரணிகளுமே. இவை இரண்டில் Rh வகை வயிற்றிலிருக்கும் குழந்தைக்கு அதிக பாதிப்பை ஏற்படுத்தும் வல்லமையுள்ளது. இன்றைய முன்னேறிய மருத்துவ உலகில், இத்தகைய பாதிப்பை கண்டறிந்து சரிசெய்யும் வழிவகை உண்டு என்றும், இவற்றைப் பற்றிய விவரங்களையும் நாம் அறிந்து கொள்ளுதல் நல்லது அல்லவா?



# மணப்பொருத்தங்களில் முக்கியப் பொருத்தம்..




**Rh வகை பொருத்தமின்மை :**

Rh factor என்பது Rh பாஸிடிவ் மற்றும் Rh நெகடிவ் என்று இரண்டு வகைப்படும். தாய் Rh பாஸிடிவ் ஆக இருப்பின், தந்தை Rh நெகடிவ் ஆக இருந்தாலும், கருவிலுள்ள குழந்தைக்கு எந்த பாதிப்பும் ஏற்படாது.

மணமகள் Rh நெகடிவ் இரத்த வகையுள்ளவளாகவும், மணமகன் Rh பாஸிடிவ் இரத்த வகையுள்ளவராகவும் இருப்பின், அவர்களுக்குப் பிறக்கப் போகும் குழந்தை Rh பாஸிடிவ் அல்லது Rh நெகடிவ்வாக இருக்கக்கூடும்.

தாயும், குழந்தையும் Rh நெகடிவ் வகையாக இருப்பின் கருவிலுள்ள குழந்தைக்கு எந்தப் பாதிப்பும் ஏற்படாது.

ஆனால், குழந்தை தந்தையின் Rh பாஸிடிவ் வகையைக் கொண்டதாக இருப்பின் தாயின் இரத்த அணுக்கள், கருவிலுள்ள



குழந்தையின் Rh நெகடிவ் இரத்த அணுக்களுக்கு எதிராக ஆன்டிபயாடிக்ஸ் எனப்படும் எதிர்மறைப் பொருளை இரத்த ஓட்டத்தில் செலுத்தி விடும். இந்த ஆன்டிபயாடிக்ஸ் கருவிலுள்ள குழந்தையின் இரத்த அணுக்களை சிறிது, சிறிதாகச் சிதைத்துக் கொண்டே வரும் வல்லமையுள்ளது.

| Rh ஜாதகப் பொருத்தம் | | | |
|---|---|---|---|
| Rh Incompatability | | | |
| மணமகள் | மணமகள் | கருவுறுகையில் குழந்தை | குழந்தைக்குப் பாதிப்பு |
| Rh நெகடிவ் | Rh பாஸிடிவ் | Rh பாஸிடிவ் (அ) Rh நெகடிவ் | எந்த வகை பாதிப்பும் இல்லை. |
| Rh பாஸிடிவ் | Rh நெகடிவ் | Rh நெகடிவ் | எந்த வகை பாதிப்பும் இல்லை. |
| Rh பாஸிடிவ் | Rh நெகடிவ் | Rh பாஸிடிவ் | அதீத பாதிப்பு |

தாயின் Rh நெகடிவ் இரத்தத்தில், எதிர்மறையான Rh ஆன்டிபயாடிக்ஸ்களை உண்டாக்கி, அவை கருவிலுள்ள குழந்தையின் (Rh பாஸிடிவ்) இரத்த அணுக்களைச் சிதைத்து, அதீத இரத்த சோகையை ஏற்படுத்தி, குழந்தையின் உடலினைப் பாதிக்கும். சில வேளைகளில் அதன் அளவைப் பொறுத்து வயிற்றிலே மரணமடையக்கூடும். முதல் குழந்தையை விட, அடுத்து பிறப்பவையும் Rh பாஸிடிவ்வாக இருப்பின், தகுந்த தடுப்பு மருந்து ஊசி போட்டுக் கொள்ளாவிடில் பாதிப்பின் அளவு மிக, மிக அதிகமாக இருக்கும்.

| ABO Incompatability : இரத்த க்ரூப் பொருத்தமின்மை | | | |
|---|---|---|---|
| மணமகள் | மணமகள் | கருவுறுகையில் குழந்தை | குழந்தைக்குப் பாதிப்பு |
| A குரூப் (அ) AB குரூப் | 'O' இரத்த க்ரூப் | A அல்லது AB க்ரூப் | இரத்த அணுக்களை சிதைக்கும் ஆன்டிபயாடிக்ஸ் தாயின் உடலில் உண்டாவதால் இரத்தசோகை |

இந்த வேறுபாடுகள் இருப்பினும், இன்றைய மருத்துவ முறைகளில், குழந்தையை பாதுகாக்கத் தகுந்த இரத்தப் பரிசோதனை முறைகளும், கருவுற்ற காலத்திலே தடுக்கக்கூடிய ஊசி மருந்துகளும் இருக்கின்றன. எனவே, தகுந்த காலகட்டங்களில், மகப்பேறு மருத்துவரின் ஆலோசனைகளின்படி, பரிசோதனைகளும் வைத்தியமும் செய்து கொள்வது அவசியம்.

**- டாக்டர் அரசி**




குமுதம் பக்தி

ஏப்ரல் 1, 2005

ஸ்பெஷல்

# மாதம் இருமுறை

## 1 மற்றும் 15 தேதிகளில்...



## பரிகாரங்களுடன் முழுமையான தமிழ்ப் புத்தாண்டு ராசி பலன்கள் தனிப் புத்தகம் இணைப்பு






தமிழில் முதல்முறையாக
ஆயுளும் ஆரோக்யமும் தரும்
இந்திராக்ஷி ஸ்தோத்ரம் மினி புத்தகம்

நோய் தீர்க்கும் தன்வந்திரி பகவான்
பாக்கெட் சைஸ் படம் அன்பளிப்பு

# புதிய தொடர்கதை ஆரம்பம்



உலகத்தில் எல்லாவற்றுக்கும் எல்லை இருக்கிறது. துரதிர்ஷ்டத்துக்கு மட்டும் எல்லையே இல்லை. அந்தக் கணத்தில் சிவசங்கருக்கு அப்படித்தான் தோன்றியது. அதீந்திரன் என்பவர் வந்திருப்பதாக ஹாரு சொன்னவுடன் ஒருகணம் திகைத்துப் போய் நின்றவர், அடுத்தகணம் ஹாருவிடம், "நல்லது. வராந்தாவில் அவர்களை உட்கார வை" என்றார்.

அக்கம்பக்கத்து ஏழு கிராமங்களில் வசித்த மக்களுக்கு ஒருகாலத்தில் குருவாக இருந்தவருடைய வீடு அது. இன்றைய வராந்தா என்பது ஒருகாலத்தில் பெரிய வராந்தாவாக இருந்த இடத்தின் ஒரு பகுதி. பழைய காலத்தில் ஹோலி, துர்கா பூஜை, எல்லாமே மிகப் பெரும் விழாவாகத்தான் அங்கு நடைபெற்று வந்தன. கிராமத்து ஜமீன்தார்கள் கூட இந்த வீட்டு குருவுக்கு சிஷ்யர்களாக இருந்த காலம் அது. அதனால் இவ்வளவு என்று சொல்ல முடியாத அளவுக்கு, குறைவில்லாமல் செல்வம் ஏராளமாக இருந்தது. ஆனால் யார் குரு

வாக இருந்தார், எப்போது என்கிற விவரமெல்லாம் மற்றவர்கள் சொல்லித்தான் சிவசங்கருக்குத் தெரியும்.

இவர் காலத்திலும் விருந்தினர்களும், அதிர்ஷ்டமில்லாதவர்களும், சிஷ்யர்கள் வம்சத்திலிருந்தும் யாராவது திடீர் திடீரென்று சொல்லாமல், கொள்ளாமல் வந்து சேருவார்கள்.

வந்தவரை வாழவைக்கும் 'குரு' இல்லமாகத்தான் இருந்தது. ஆனால் எப்பொழுது விதியின் திராப்பசி அந்த வீட்டில் கோரத்தாண்டவமாடியதோ அன்றிலிருந்து குருவின் வீட்டுக் கதவு வெளிமனிதர்களுக்கு மூடப்பட்டு விட்டது!

ஆனால், இன்று திரும்பவும் திறக்கும்படியாகி விட்டது. வெளி மனிதர் வரவுக்கு சம்மதித்து உட்கார வைக்கும்படி ஆயிற்று. வெகு நாட்களுக்கு முன்பு அன்புடன், ஆதரவுடன் விருந்தினர்களை எங்கே உட்கார வைத்தார்களோ அங்கேயே உட்கார வைக்கும்படியாகி விட்டது.

ஹாரு திரும்பி வந்து, "உட்கார வச்சிட்டேன், உங்களைத்தான் சீக்கிரமா வரச் சொல்றாங்க" என்று குரல் கொடுத்தான்.

சிவசங்கர் தலையால் ஆமோதித்து, "வருகிறேன் என்று சொல்" என்றார்.

ஹாரு போய் விட்ட பிறகும், சிவசங்கர் தவிப்புடன் இங்குமங்குமாக உலாவிக் கொண்டிருந்தார். பிறகு மனதைத் திடப்படுத்திக் கொண்டு தாழ்வாரத்திலிருந்து இறங்கி சமையலறைப் பக்கம் வந்து நின்றார்.

அங்கு, நாராயணனின் பூஜைக்காக மடியாக நைவேத்தியம் தயார் செய்து கொண்டிருந்தாள் பூர்ணிமா.

சிவசங்கர், "பூர்ணிமா" என்று கூப்பிட்டார்.

கையிலிருந்த வேலையை அப்படியே வைத்து விட்டு, அறையை விட்டு வெளியில் வந்தாள் பூர்ணிமா.

## சொர்க்கத்தில்...

நாம் நினைப்பது போலெல்லாம்
நடந்திடாதாம் திருமணங்கள்
இன்பமயமான சொர்க்கத்தில்
இறைவனால்தான் அவை
நிச்சயிக்கப்படுகிறதாம்;
இதன் உண்மை விளக்கம்
நடந்த பிறகே புரிகிறது.
நம்மில் பலருக்கு;
நிச்சயித்த இடமும்
நடந்த இடமும்
வேறு வேறென்று!

- என். சுந்தரராமன்

தயக்கத்துடன், "அப்பா! கூப்பிட்டீர்களா?" என்று கேட்டாள்.

"ஆமாம். கூப்பிட்டேன்" தொண்டையைச் சரிசெய்து கொண்டு, "கல்கத்தாவிலிருந்து அதீந்திரன் வந்திருக்கிறார் என்று சொல்வதற்காகக் கூப்பிட்டேன்."

"யார் வந்திருக்கிறார்கள்?!"

அதற்கு மேலே பேசவே முடியவில்லை பூர்ணிமாவால். நம்ப முடியாத ஒரு பயங்கரத்தின் முன்னால், சலனமில்லாத ஆத்ம சமர்ப்பணம் செய்யும் விதமாக பேசாமல் நின்றாள். அவளுடைய மனம், இந்திரியங்கள் அவள் வசத்தில் இல்லை. புரிந்து கொள்ளும் சக்தியும் மறைந்து போய் விட்டது.

"அதீந்திரன்... அதீந்திரன்..."

"எந்த கல்கத்தா?"

"எந்த அதீந்திரன்?"

"தடுமாறாதே... தடுமாறுவதற்கோ, தவிப்பதற்கோ எதுவுமில்லை."

சிவசங்கர் உறுதியான, ஆழமான குரலில், பெண்ணுக்கு, ஆதரவுக்கான சக்தியைக் கொடுத்தார். "எதற்காக வந்திருக்கிறார் என்பது இன்னமும் எனக்குத் தெரியாது... நான் இன்னும் அவரைப் பார்க்கவில்லை... போய்ப் பார்க்கிறேன்..., உனக்குச் செய்தியைச் சொல்ல வந்தேன்... சாந்தமான மனதுடன், தவிப்பில்லாமல், தடுமாற்றமில்லாமல், மனதைத் திடப்படுத்திக் கொள்... நீயும் பார்க்க விரும்புகிறாயா என்பதையும் தீர்மானித்துக் கொள்... ஆலோவிடம் இந்த விஷயத்தைச் சொல்லப் போகிறாயா இல்லையா என்பதையும் தீர்மானித்துக் கொள்..."

"அப்பா!"

சிவசங்கர் இந்த ஆவேசக் குரலை எதிர்பார்த்துத் தயாராக இருந்ததால் திடுக்கிட்டுப் போகவில்லை. அமைதியான, மிருதுவான குரலில், "சொல்லும்மா" என்றார்.

"நான் என்ன செய்ய வேண்டும், எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை எனக்குச் சொல்லுங்கள்..."

"நான் சொல்ல வேண்டுமா? ஆனால் அம்மா... இங்கே நான் சொல்ல வேண்டும் என்பதற்கான அவசியமே இல்லையே. இங்கே உபதேசத்திற்கு இடமில்லை, ஆலோசனைக்கு இடமில்லை.. இது உன் சொந்த விவகாரம்... உன் உள் மனது எப்படி என்ன சொல்கிறதோ அது போல செய்... நீ என்ன தீர்மானம் செய்தாலும் நான் அதை முழு மனதுடன் ஏற்றுக் கொண்டு உனக்கு ஆதரவாக இருப்பேன் என்பதை மட்டும் தெரிந்து கொள்... என் இஷ்டம், இஷ்டமில்லை என்பதை நினைத்து, உன் மனதிற்குள் எந்தவிதமான விபரீத முடிவுக்கும் வந்து விடாதே."

"எனக்கு எதுவுமே புரியவில்லை அப்பா."

## வாங்கவும், கொடுக்கவும் வேண்டாமே!

ஒரு சமயம் ஒரு பெண் மகாஸ்வாமிகளுக்கு எதிரே இரு கைகளையும் கூப்பிக் கண்ணில் தாரை தாரையாக நீர் பெருக நின்றிருந்தாள். பெரியவர், அவளைப் பார்த்து சிறிது நேர மௌனத்திற்குப் பிறகு, "எல்லாம் நல்லபடியாக நடக்கும்! கவலைப்படாதே!" என்றார். அந்தப் பெண் கண்களைத் துடைத்துக் கொண்டு முகமலர்ச்சியுடன் நமஸ்கரித்து விட்டுச் சென்றாள். அங்கே இருந்தவர்கள் மனதில் 'அந்தப் பெண் வாயைத் திறந்து எதுவும் சொல்லவில்லை. இவர் எப்படியோ புரிந்து கொண்டு ஏதோ சொல்கிறாரே. என்னவாக இருக்கும்?' என்பதுதான் கேள்வி.

பெரியவரே அதற்கும் பதில் சொன்னார் : "அதுவா! வரதட்சிணை தர முடியாமல் கல்யாணம் தட்டிப் போகிறது இந்தப் பெண்ணுக்கு. கல்யாணம் என்றால் வெட்கப்பட்டுப் பெண்கள் ஓடுவார்கள். இப்போது கல்யாணம் ஆகவில்லையே என்று, தானே வேண்டுகிற நிலைக்குச் சமுதாயத்தை நாம் கொண்டு வந்து விட்டோம். இது கொடுமையல்லவா! இனி கல்யாணப் பத்திரிகையில், "காஞ்சி காமகோடி பீடாதிபதி சங்கராசாரியாரின் அனுக்ரஹத்தை முன்னிட்டு" என்று போடுவதாக இருந்தால் அவர்கள் வரதட்சிணை வாங்கவும், கொடுக்கவும் கூடாது" என்று கட்டளையிடும் குரலில் கூறினார். செய்வோமா?



"ஒன்றும் புரியவில்லையா?"

சிவசங்கர் நீண்ட பெருமூச்சு விட்டார். ஒன்றும் புரியவில்லை என்று சொல்வது பலகீனத்தின் அறிகுறி. மன சஞ்சலத்தின் அடையாளம். இல்லாவிட்டால் செய்தியைக் கேட்டதுமே, உடனேயே மனதில் ஆத்திரம் வர வேண்டாமா? கடுமையாக நடந்து கொள்வதுதானே சரி. என்ன செய்ய வேண்டும்? எது செய்தால் தனக்கு அல்லது அவருக்கு கௌரவம் என்பது பூர்ணிமாவுக்குத் தெரிந்திருக்க வேண்டுமே.

ஆனால் அப்படி நடக்கவில்லையே...

'என்னதான் இருந்தாலும் பெண் தானே? அதுவும் சின்ன வயது' என்று சிவசங்கர் மனதிற்குள் நினைத்து கொண்டார்.

பெண்ணின் தயக்கம், சஞ்சலம் இவற்றால் அடிபட்டவர் போலானார் சிவசங்கர். ஆனாலும் அவரால் பெண்ணை வெறுக்க முடியவில்லை. பதிலாக இரக்கம் தான் தோன்றியது. கருணையும், அன்பும் தோன்றியது. சகல சுகங்களிலிருந்தும் வஞ்சிக்கப்பட்ட பெண் குழந்தை இவள்..!

அன்பும், மென்மையும் நிறைந்த குரலில், "புரிந்து கொள்ள முயற்சி செய்யம்மா. உன் மனமே உனக்கு எல்லாவற்றையும் புரியவைக்கும். நீ என்ன விரும்புகிறாயோ அது மட்டும்தான் முக்கியம்" என்றார்.

"அப்பா! ஆனால் அதனால் பின்னால் ஏதாவது விபரீதம் ஏற்பட்டால்? கௌரவத்துடன் இருக்க முடியவில்லை என்றால்? ஒருவேளை தவறு செய்து விட்டால்..."

சிவசங்கரன் சற்றே சிரித்தார். "அப்படியென்றால் அந்தத் தவற்றுக்குப் பயிற்சி கொடுத்தாக வேண்டும்..." 'வாழ்க்கையின் ஆரம்பக் கட்டத்தில் நீ செய்தாயே தவறு அது போலவா...?' என்று கேள்வி உதட்டு வரை வந்து விட்டது. சட்டென்று சமாளித்துக் கொண்டார்.

பூர்ணிமாவும் சமாளித்துக் கொண்டாள். அதனாலேயே சற்றே உறுதியுடன்,

## பித்தம் தெளிய :



தேவையான பொருட்கள் :
தனியா - 1 கைப்பிடி,
இஞ்சி - பெரிய துண்டு,
மிளகு - ½ டீஸ்பூன்,
சீரகம் - ½ டீஸ்பூன்,
எலுமிச்சம் பழம் - 4,
சர்க்கரை - தேவையான அளவு

செய்முறை :
தனியாவை முதல் நாள் இரவு ஊற வைக்க வேண்டும். மறுநாள் காலையில் தனியாவுடன், இஞ்சி, மிளகு, சீரகம் எல்லாவற்றையும் சேர்த்து நீர் விட்டு மிக்ஸியில் நன்றாக அரைக்கவும். நைசாக அரைத்துக் கொண்டு, 1 தம்ளர் நீர் சேர்த்து டீ வடிகட்டியில் வடிகட்டவும். கொஞ்சம் அரைத்த நீர் திக்காக இருக்கட்டும். அந்தத் தனியா நீரை இலேசாகச் சூடுபண்ணவும். பிறகு வேண்டிய சர்க்கரையையும் போட்டு, எலுமிச்சம்பழச் சாறும் பிழிந்து கலந்து விட்டு கால் தம்ளர் அளவு ஒவ்வொருவரும் சாப்பிடலாம். காலையில் வெறும் வயிற்றில்தான் சாப்பிட வேண்டும். 15 நிமிடங்கள் கழித்து காப்பி சாப்பிடலாம். இதை மூன்று நாளைக்கு சேர்ந்தாற்போல சாப்பிட்டு வந்தால் பித்தத்தினால் வயிற்றுப் பிரட்டல், வாயில் நீர் ஊறுதல் எல்லாம் குறைந்து விடும். சாப்பிடுவதற்கும் ருசியாக இருக்கும். எங்கள் வீட்டில் மாதம் ஒருமுறை செய்து சாப்பிடுவோம்.

- எஸ். சரோஜா.

''என்ன விஷயம் இருக்கட்டும்... ஆலோவின் விஷயத்தைப் பற்றி சொல்லி விட்டுப் போங்கள்'' என்றாள்.

''அதுவும் முடியாது பூர்ணிமா... ஆலோ உன் குழந்தை. அவளுடைய வாழ்க்கையை நீதான் தீர்மானிக்க வேண்டும். அவள் பெரியவளாகும் வரை நீதான் வழிகாட்டியாக வேண்டும். அதுவுமில்லாமல் என் மனது மிகவும் கடினமானது. என் கடுமையான வழியில் அழைத்துச் செல்ல விரும்பினால், எதிர்காலத்தில் அவள் உன்னை மன்னிப்பாளா என்று யாரால் சொல்ல முடியும்? தெய்வத்தின் அனுக்கிரஹத்தினால் குழந்தை ஸ்கூலுக்குப் போயிருக்கிறாள். நீ நன்றாக யோசித்து பதில் சொல்ல நிறைய நேரமிருக்கிறது.''

சிவசங்கர் வாசல் பக்கம் போனார். அவருடைய உணர்ச்சியே இல்லாத முகத்தைப் பார்த்த போது, இதுவரையில் எதுவுமே நினைக்காத பூர்ணிமா, இன்று முதல் முறையாக, தன் தந்தை மிகவும் கர்வம் பிடித்தவர் என்று மனதில் நினைத்தாள்.

ஆனால் முன்பெல்லாம் அப்பா இப்படி இல்லையே. அது வெகுநாட்களுக்கு முன்பு!

என்றைக்குப் பூர்ணிமா, தன் தலைவிதியின் மீது சொல்ல முடியாத பயங்கரமான இடியின் அடியைத் தாங்கும்படி ஆயிற்றோ, வாழ்க்கையின் கல்வி, கேள்விகளை விட்டு விட்டு, மிக மிக பலவீனமான ஒரு சூழ்நிலையில் அவர் முன் நின்றாளோ, அன்று சிவசங்கர் அவள் செல்ல வேண்டிய பாதையைக் காண்பித்தார்.

அன்று என்ன பூர்ணிமா சின்னவளா?

திடீரென்று பூர்ணிமா மிகுந்த கர்வத்துடன், ஒரு வேகத்துடனும் எழுந்தாள். அவள் உடலும், உள்ளமும் துடித்தது.

ஆமாம், சின்னவளாகவும் இருந்தாள். தனியாகவும் இருந்தாள். ஆச்சர்யம்தான். அப்போதுதான் எத்தனை சிறியவளாக இருந்தோம் என்பதை அவள் இன்று வரை நினைத்துப் பார்க்கவேயில்லையே.

அதோ... ஆலோ, சிரித்து விளையாடி, ஸ்கூலுக்குப் போய், ஸ்கூலிலிருந்து திரும்பி வந்து தன்னையே மறந்து, குழந்தை போல சுற்றிக் கொண்டிருக்கிறாள்.

பதினாறு வயதாகிறது ஆலோவுக்கு.

அவளை விட அன்று பூர்ணிமா சின்னவளாகத்தானே இருந்தாள். பதினைந்து வயது முடிந்திருக்கவில்லை.

அந்தப் பயங்கரமான, இடி, மின்னலுடன் கூடிய அந்த தினம் வரும் வரை, அவளும் ஆலோவைப் போலத்தான் சிரித்து விளையாடி குழந்தை போல சுற்றிக் கொண்டிருந்தாள்.

திடீரென்று ஏற்பட்ட ஓர் உந்துதல் காரணமாக, நிகழ்காலத்தையே மறந்த நிலையில், கடந்த காலத்தின், மனோரம்மியமான ஒளியின் முன், பளீரென்று ஒரு பதினைந்து வயதுப் பெண் குழந்தை அவள் கண் முன்னால் வந்து நின்றாள். திரைப்படத்தில், நடக்கும் வாழ்க்கை நாடகம் போல, அவள் கண் முன்னால் ஒன்றுக்குள் ஒன்றாய், படங்கள், காட்சிகள் வெகு வேகமாக ஓடின. பயங்கரமாக இருந்தது!

(நிலவு வளரும்)



முருங்கைக்காயை வாங்கியதும் அப்படியே 'ஃப்ரிஜ்ஜில்' வைக்காமல் உடனே நறுக்கி பாலிதீன் பையில் போட்டு வைத்தால் ஒரு வாரம் வரை வாடாது. தேவையானபோது அலம்பி உபயோகப்படுத்தலாம்.

- சுபா சந்துரு.

ஓம் நமசிவாய

"ஜோதிட ரத்னா"

# டாக்டர் இலா.அம். கருணாகரன்



எதிர்கால பலன்கள்







# ஸ்ரீ சுகர் அகத்தியர்

## நாடி ஜோதிட நிலையம்

பழங்காலத்தில் வாழ்ந்த சப்தரிஷிகள், பதினெட்டு சித்தர்கள் வான் இயல், மருத்துவம், ஜோதிடம் ஆகியவற்றில் உள்ள இரகசியங்களை வாழையடி வாழையாக வரும் மனித சமூகம் தெரிந்து கொள்வதற்காக வேண்டி, ஓலைச் சுவடிகளில் எழுதி வைத்துள்ளனர். அவ்வாறு எழுதப்பெற்றஓலைச் சுவடிகள் மூலம் கை பெருவிரல் ரேகையைக் கொண்டும், ஜாதகத்தைக் கொண்டும், பிறப்பு முதல் ஆயுள் வரையிலான கல்வி, தொழில், வியாபாரம், உத்தியோகம், கலைப்பணி, பொதுப்பணி, திருமணம், திருமணத்தைப் பற்றிய விவரங்கள், குழந்தைகள், சொத்துக்கள் அடையும் காலங்களையும், கடன், வழக்கு, வியாதி, நட்டம், விரோதி, கண்டம் ஆகிய தீமைகளையும் அவற்றின் நிவர்த்திகளையும் போகர், சிவவாக்கியர், வசிஷ்டர் போன்றமகரிஷிகளால் எழுதப்பெற்றஓலைச் சுவடிகள் மூலம் படித்து எழுதியும் தருகிறோம்.

பழைய எண்: 13/ புது எண்: 31,
மன்னார் (ரெட்டி) தெரு,
(கிருஷ்ணவேணி தியேட்டர் அருகில்), தி.நகர்,
சென்னை–600 017. தென்னிந்தியா.
ஃபோன்: 2436 0244, 5539 8367.

No: C1, Flat No: 123, 12th floor,
Shree Shubh Karma Co-operative Housing Society Ltd.,
SSS Nagar, Koliwada, Sion East, Mumbai-400 037.
Cell : 09884016622



"ஜோதிட ரத்னா"
டாக்டர் இலா.அம். கருணாகரன்

மண்ணில் நல்ல வண்ணம் வாழ எங்களை நாடி வாருங்கள்; நன்மைகள் பெறுவீர்.

# என் செல்லமே





• சத்யா,
• சங்கமித்ரா



• தாத்தா :
ஆர். கணபதிராமன்,
பாட்டி :
ஜி. மோஹனா







• சி. ராதிகா, சி. நந்தினி



• டி.ஆர். பரிமளரங்கன்,
• பி. ராதாபாய்





பெயர் குறிப்பிடவில்லை



• கே. ராமமூர்த்தி
• யமுனா ராமமூர்த்தி







[illegible] குமார்

• ஐஸ்வர்யா, • ஸாம்பவி



# மங்கையர் மலர் & OKJ

SINCE 1933

ORIGINAL KERALA JEWELLERS

74, USMAN ROAD

இணைந்து வழங்கும்

# மணி மங்கை



1991-ம் ஆண்டு மார்ச் மாதம் 'மங்கையர் மலர்' என்ற மலர் வனத்தில் ஓர் அருமையான குறிஞ்சி மலர் மலர்ந்திருந்தது. அதுதான் திரை கடல் தாண்டிய திருவையாறு என்ற கீதா சந்திரசேகர் எழுதிய அனுபவக் கட்டுரை. அதில் அவர் சிறு வயதில் ஆர்வமிருந்தும் இசை பயிலாததைப் பற்றியும், பின்பு வாழ்வின் நடுப் பகுதியில் ஓர் அரிய வாய்ப்புக் கிடைத்து பாடியதைப் படித்ததும் என்னுள் ஓர் உத்வேகம் பிறந்தது. என் மனதில் நான் பெற முடியாத இசையறிவை என் மகள் பெற, அவளை வழி நடத்த, "திசைகாட்டி வரிகளாக" அமைந்தது ஆண்டவன் செயல்.

சென்ற மாதம் பரிசு பெற்ற திருமதி சாந்தி வேணுகோபால் **25,000/-** ரூபாய்க்கான நகை செட்டை **OKJ** நகைக் கடைக்குச் சென்று தேர்ந்தெடுத்தார். அதன் உரிமையாளரின் மகன் இம்மானுவேல் பாபு அவருக்குப் பரிசளித்து, பாராட்டையும் தெரிவித்துக் கொண்டார்.

என் வாழ்க்கையில் பெற முடியாத இசை ஞானத்தை என் மகன் பெற்று அத் துறையில் தேர்ச்சி பெற வேண்டும் என்ற எண்ணம் என் மனதில் ஆழப் பதிந்தது. அவன் சங்கீதத்தில் மிகவும் ஆர்வம் கொண்டிருந்தான். வீணை பயில வேண்டும் என்ற எண்ணமும் உடன் எழுந்தது. அதை நிறைவேற்ற சரியான வழி காட்டலும் தூண்டுகோலுமாக அமைந்த மங்கையர் மலரை என்ன

**ரூ.25,000/-**

**மதிப்புள்ள தங்க நகை பரிசு பெறும் கட்டுரை**



மங்கையர் சக்தி மகத்தான சக்தி

மங்கையர் மலர் வெள்ளிவிழா

வென்று சொல்ல! அதன் பிறகு என் மகளை நல்ல குருவிடம் பயிற்சியைத் துவங்க வைத்தேன். ஆரம்பப் பள்ளி, உயர்நிலைப் பள்ளி தரத்தில் நடத்தும் யூத் பெஸ்டிவல் பரிசுகள் பெற்றபின் கல்லூரி தரத்திலும் பரிசுகள் பெற்றாள். சி.சி.ஆர்.டி. ஸ்காலர்ஷிப்பும் பெற்றிருக்கிறாள். ஸ்ரீஸ்வாதித் திருநாள் இசைக் கல்லூரியில் வீணையை முக்கியப் பாடமாக எடுத்து பயின்று 'கான பூஷணம் பட்டம்' 'கேரள சங்கீத நாடக அகாடமி' சான்றிதழும் பெற்றிருக்கிறாள்.

இங்கு கேரளாவில் (திருவனந்தபுரத்தில்) நடக்கும் ஸ்ரீ தியாகராஜ ஆராதனை விழாவிலும் பங்குகொண்டு பஞ்சரத்ன கீர்த்தனைகளை பாடியும் உடன் வீணையில் வாசித்தும் இருக்கிறாள். இன்று நான் பஞ்சரத்ன கீர்த்தனைகளை சிறிதளவாவது பாடுகிறேன் என்றால் அது என் மகள், வீட்டில் பயிற்சி செய்யும் போது கேட்டுப் பயின்றதுதான். திருமணமாகி அக்கரைச் சீமையிலும் தான் பயின்ற இசையை நம் கலாசார முறையில் மற்றவர்களுக்கு பயிற்றுவித்தும், சத்குரு ஆராதனையில் கலந்து கொண்டும் இருக்கிறாள்.



மேற்கூறிய சம்பவங்கள் நடந்தது என்றால் திரைகடல் தாண்டிய திருவையாறு என்ற திசைகாட்டிய வரிகளால் தான்.

மனிதப் பிரயத்தனத்தில் மங்கையர் மலரின் சக்தியே மாபெரும் மகத்தான, சாதனை சக்தி.

- எஸ்.ஆர். பிரேமாவதி, திருவனந்தபுரம்.





ISO 9001 2000
CERTIFIED COMPANY

# "அஸ்க்கு, புஸ்க்கு"



**SOWBAGHYA**®
*The Grinder People*

புசு புசுன்னு இட்லி வேணுமா ? இருக்கவே இருக்கு சௌபாக்யாவின் சக்தி டேபிள் டாப் வெட் கிரைண்டர். உலகத்தர தொழில்நுட்பம், உபயோகிப்பது மிக மிக எளிது. பார்க்கவும் ரொம்ப ஸ்மார்ட். இந்த புசு புசு இட்லியை யாராவது கேட்டா சொல்லத் தோணும் "அஸ்க்கு புஸ்க்கு".

**Sakthi**





தேங்காய் துருவலாம்



ஜூஸ் பிழியலாம்



கோதுமை / மைதா மாவு பிசையலாம்



காய்கறியும் நறுக்கலாம்

**110 volts & 60 Hz available for USA & Canada**

எண்ணற்ற மாடல்கள்...
பல அளவுகள்...பல வண்ணங்கள்...

## சௌபாக்யா

**Chennai**
32/A, North Usman Road, T.Nagar, Chennai - 17.
Ph: 91-44-28343547, 28342908, Fax: 91-44-52023926.
5, Hasthinapuram Main Road, Chrompet, Ph: 2223 4420
E-mail: grind@sowbaghya.com website: www.sowbaghya.com

**Erode:**
314, Perunthurai Road,
Erode - 638 011.
Ph: 91-424-2260245, 2269965

**Bangalore:**
162, Veerapillai Street,
Bangalore - 560 011.
Ph: 91-80-25320627

**Dubai:**
Hadi Enterprises,
P.B. No. 5833 Dubai UAE
Ph: 00 97 1434 70310

**Sri Lanka:**
Good Value Distributors
(Easwaran Brothers)
Colombo, Sri Lanka

**Singapore:**
Anacona Pte. Ltd
128, Dunlop Street,
Singapore - 209 447

**USA:**
Diamond Trading Inc.,
120, Stryker Lane, Suite 109,
Hills Brow, New Jersey.

மங்கையர் மலர் ஆச்சி சாம்பார் பொடி

# இணைந்து வழங்கிய திருச்சியில் பூங்கொத்து!!

காலை எட்டு மணி முதல் ஒன்பது வரைக்கும்தான் வாசகியர்களின் வருகைப் பதிவு என்று அறிவிப்பு செய்யப்பட்டிருந்தது. ஆனால், காலை ஏழு பத்திலிருந்தே வாசகியர் கூட்டம் வந்து குவியத் தொடங்கி



• டாக்டர் மீனா, ஆசிரியர், ஆச்சி மசாலா உரிமையாளர்கள் குத்து விளக்கு ஏற்றுகிறார்கள்

விட்டது. முதல் ஆளாக நின்றிருந்த மணப்பாறையிலிருந்து வந்திருந்த பெண்மணி, "அதிகாலை அஞ்சு மணிக்கே வீட்டிலேருந்து கிளம்பி வந்து விட்டேன்!" என்று பெருமை பொங்கக் கூறினார்.

எங்கே இந்த ஆச்சர்யம் என்கிறீர்களா? எல்லாம் திருச்சி மாநகரில் பிப்ரவரி 27-ம் தேதி கர்ப்பரட்சகி மஹாலில் நடைபெற்ற மங்கையர் மலர் வெள்ளி விழா தொடக்க நிகழ்ச்சியில்தாங்க!

பூங்கொத்து இளையோர் திருவிழாவிற்கு மங்கையர் மலர் வாசகியர் கூட்டம் கூட்டமாக வந்து மண்டபத்தையே திணறடித்து விட்டனர்.



• பாரதி பாஸ்கரின் 'கனல்' பேச்சு!

விழா அழைப்பில் குறிப்பிட்டதிலிருந்து கால் மணி நேரத்துக்கு முன்பாகவே நிகழ்ச்சிகள் தொடங்கி விட்டன. ஆசிரியர் ரேவதி சங்கரனின் வரவேற்புரையில் வாசகியர் அனைவரும் உச்சிகுளிர்ந்து போயினர். கூடியிருந்த இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட வாசகியரின் மனங்களிலும் முகத்திலும் அந்த நிறைவானது பிரதிபலித்துக் கொண்டேயிருந்தது.

மகளிர் விழிப்புணர்வு உரை வீச்சாளர் பாரதி பாஸ்கர் அவர்களின் கருத்தாலோசனைகள் நிறைந்த சிறப்புரையின் வார்த்தை வடிவமைப்பில் மங்கையர் அனைவரும் மனசுக்குள் உறுதிபூண்டனர். நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக பெண்கள் மீதாக மீடியாக்கள் திணித்து வருகின்ற ஆபாசங்களிலிருந்து, பெண்கள்

அனைவரும் தங்களை விடுவித்துக் கொள்ளல் அவசியம் என்பதை அவரது உரை ஆணித்தரமாக எடுத்துக் கூறியது.

மங்கையர் அனைவரும் சக்திப் பிழம்பாக மாறும் போது அவர்களைச் சுடுகின்ற தீமைகள் இல்லாது போய் விடும். மங்கையர் சக்தி முன்பாக அவை நில்லாது போய்விடும் எனக் கூறிய போது, ஒட்டுமொத்த மங்கையர் கூட்டத்தின் தொடர் கரவொலியினால் அரங்




# இளையோர் திருவிழா

* 'இளைய சக்தி'யினரின் எழுச்சி நடனம்

கமே ஒரு கணம் அதிர்ந்து போனது. அதனைத் தொடர்ந்து வாசகியரின் அசத்தல் வினாக்களுக்கு அசந்து போகாது, மிகத் தெளிவான பதில்களை அள்ளி வீசினார் பாரதி பாஸ்கர்.

வண்ணமிகு வார்த்தைப் பூக்களை மாலைகளாக்கி நிகழ்ச்சித் தொகுப்பாளராக அவ்வப்போது மேடையேறிக் கொண்டிருந்தார் புதுக்கோட்டை பாரதி.

வாசகியரின் கேள்வி - பாரதி




* மேடையில் சிறப்பு விருந்தினர்கள்

பாஸ்கரின் பதில் நிகழ்வினைத் தொடர்ந்து அமர்க்களமாக அரங்கேறியது 'சவாலே சமாளி' நிகழ்ச்சி. இதில் ஆறு குழுவினர் (ஒரு குழுவுக்கு 4 பெண்களாக) பங்கேற்றிருந்தனர். ஒவ்வொரு குழுவினரும் 18 - 25 வயதுக்குரிய இளம் சக்திகள் எதிர்கொள்ளும் பிரச்னைகள், சவால்களை மையமாக வைத்து நாடக வடிவில் தீர்ப்பு வழங்கினர்.

1. காதல் திருமணமா? பெற்றோர் பார்த்து வைக்கும் திருமணமா?

2. பெண்கள் தங்கள் வாழ்வில் திருமணம் ஆகி செட்டில் ஆவதா? படித்துக் கொண்டிருக்கும்போதே செட்டில் ஆவதா?

3.பெண்கள் ஈவ்டீசிங்கிலிருந்து தங்களைத் காத்துக் கொள்வது எப்படி?

4. கல்லூரியில் படிக்கும் பெண்களுக்கு கைச் செலவுக்கு காசு அவசியமா?

5. கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கும்போதே திருமணம் ஆகிவிடும் பெண்கள் சந்திக்கும் பிரச்னைகள் (இந்தக் குழுவினர்க்குத்தான் முதல் பரிசு!)

6. பத்தாம் வகுப்பு மற்றும்

* 'சவாலே சமாளி' நிகழ்ச்சியில்...





• ஆச்சி விளம்பரப் பாடல்களுக்கு பரிசு வழங்கும் திருமதி தெல்மா ஐசக்

ப்ளஸ் டு மாணவியர் உயர் கல்வி பயில முயலும் போது ஏற்படும் பிரச்னைகள்... சவாலே சமானி நிகழ்ச்சியினைத் தொடர்ந்து ஆச்சி மசாலாவின் விளம்பரதாரர் நிகழ்ச்சி அரங்கேறியது. ஆச்சி மசாலாவுக்கான விளம்பரப் பாடல்களை எழுதி அனுப்பும்படி, அரங்கினில் அமர்ந்திருந்த மங்கையரிடம் முன்னரே தனித் தாள்கள் தரப்பட்டிருந்தன. வாசகியர் ஆசுகவி போலத் தோன்றி திரையிசை மெட்டு களில் பாடல்களைப் புனைந்து தள்ளி விட்டனர். ஆச்சி மசாலா உரிமையாளர் கள் பத்மாசிங் ஐசக் மற்றும் தெல்மா ஐசக் அவர்களும் மிகுந்த மனநிறைவுடன் தங்கள் நிறுவனம் சார்ந்த திடீர் விளம்பரப் பாடல்களை ரசித்துக் கேட்டு, பாடியவர்களுக்குப் பரிசும் வழங்கினர்.

நண்பகல் நெருங்கும் நேரம். பசி வயிற்றைக் கிள்ள, குறிப்புணர்ந்து, கோவை யூ.கே. கேட்டர்ஸ் உன்னி கிருஷ்ணனின் ஏற்பாட்டில் மதிய உணவு அனைவர்க்கும் அன்புடன் தரப்பட்டது. மதிய உணவு இடைவேளைக்குப் பின்னர் மீண்டும் தூள் பரத்தத் தொடங்கி விட்டன மங்கையர் மலர் வெள்ளி விழா நிகழ்ச்சிகள்.

மங்கையர் சக்தி பாடல்

பல்லவி

உன்னால் முடியும்! என்னால் முடியும்!
நம்மால் எதுவும் முடியும்! முடியும்!
மங்கையர் நம்மால் எதுவும் முடியும்!

சரணம்

மங்கையர் சக்தி மகத்தான சக்தி
என்றே சொல்வோம்!
அன்பு வட்டத்தில் கைகள்
இணைத்தே உலகை வெல்வோம்!
அன்பு சமத்துவம் நீதி நேர்மை
தன்னம்பிக்கை துணையாய்க்
கொள்வோம்
மங்கையர் நம்மால் எதுவும் முடியும்
மங்கையர் மலரால் இதயங்கள் இணையும்
மங்கையர் நம்மால் எதுவும்
முடியும்! முடியும்!

• 7 மணிக்கே ஆஜரான வாசகிகள்...



தாய் - மகன் கலக்கல் போட்டி. அதற்குத் தலைப்பு என்ன தெரியுமா? **உனக்கு 18 எனக்கு 38.** இதிலும் ஆறு அம்மாக்கள் மற்றும் அவர்களது ஆறு மகன்கள். மேடையில் எதிரெதிர் அணிகளில் தாய்மார்கள் ஒரு வரிசை. மகன்கள் ஒரு வரிசை. நடுவே

• 'சவாலே சமாளி' நிகழ்ச்சியில் பங்கு பெற்றவர்கள்...



# மங்களம் உங்களுடையதாகட்டும்



## Shri Kanda

Luxury 2 & 3 Bedroom Apartments at
C 72, 10 D Cross, Thillai Nagar, Tiruchirappalli-18
Price Rs. 15 to 20 Lakhs - Possession Sept. 2005

- Lift facility • Ceramic Flooring • Teak Wood Frames
- Panelled Doors • Granite Platform • Modulars Switches
- Quality Bath Fittings • Flame Retardent Wires

## Shri Vijaya Rengam

**2 & 3 BEDROOM LUXURY APARTMENTS**
**Possession March 2005**
**Price - Rs. 7.5 to 17.0 lakhs**

- Children's Park
- Free Covered 2 Wheeler Parking
- Payable Covered 4 Wheeler Parking
- Departmental Store
- Rain water Harvesting





## MANGALA NAGAR

Near Uttamar Kovil Railway Station,
Bikshandar Koil Village, Trichi-621 216

2 Bed Room BUDGET Apartments
Rs. 2.75 - 5.25 lakhs

Site open on Sundays

Approved by leading Financial Institutions




# MANGHALAM ESTATES

Shri Vijaya Rengam, 24, Veereswaram Approach Road, Royar Thope,
Srirangam, Trichy- 620 006. ☎ 0431-2433909, 2433876, 98430-12675

Visit: www.manghalamestates.com

e-mail: manghalamestates@eth.net



• மலர் கூட்டம்!



• திருச்சி மேயர் சாருபாலா தொண்டைமான் பரிசுகளை வழங்குகிறார்..

ஆசிரியர் ரேவதி சங்கரன்! கலக்கல் போட்டியில் வார்த்தைகள் முற்றிப் போய் மேடையிலேயே அம்மாவுக்கும் மகளுக்கும் பிணக்குகள் வந்து விட்டால் தீர்த்து வைக்க வேண்டாமா? அம்மாக்கள் தொடர்ந்து தொலைக்காட்சித் தொடர்கள் பார்ப்பது தவறு என்று 'உனக்கு 18 குழு' வாதங்களை எடுத்து வைத்தது. தொடர்கள் பார்ப்பதினால் வீட்டு வேலைகள் எதிலும் எவ்வித இடையூறும் இல்லை என்று எனக்கு 38 குழு நியாயப்படுத்தியது. உடை, உணவு விஷயங்களில் பெண்கள் தங்கள் சிநேகிதிகளை ஒரு மாடலாக எடுத்துக் கொள்ளலாமா என்று அம்மாக்களும் மகள்களும் அருமையாக வாதிட்டனர். குழந்தைகளுக்கு எது தேவையோ அதனையே சரியான முறையில் ஒரு தாயானவள் மிகுந்த பொறுப்புடனும் கண்டிப்பும் அதே நேரத்தில் கனிவு கலந்தும் செய்து தர வேண்டும் எனக் கூறி தாய் - மகள் கலக்கல் போட்டியை முத்தாய்ப்பாக முடித்து வைத்தார் ஆசிரியர்.

சுவை மிகுந்த தேநீர் இடைவேளைக்குப் பின்னர், சக்தி எனும் தலைப்பில் கல்லூரி மாணவிகள் பங்கேற்ற நடனப் போட்டி. போட்டியின் நடுவர்களாக என். வெங்கட்ராமன் சுகந்தி பிரேமானந்த் ஆகிய இருவரும் அமர்ந் இருந்தனர். சக்தி வடிவான 'காளி'யை

| போட்டிகள் | பரிசு பெற்றவர்கள் |
|---|---|
| மங்கையர் சக்தி கல்லூரி நடன நிகழ்ச்சி | இந்திரா காந்தி கல்லூரி 1. டி.விஜி, ஜி. சாரதா பி. ஸ்ரீதேவி, பி. செல்வி. ஆர். சரிதா, ஆர். காயத்ரி |
| உனக்கு 18, எனக்கு 38 | சிறந்த அம்மா : சாந்தி காமகோடி சிறந்த மகள் : மதுராதா |
| சவாலே சமாளி | விமலா கோபாலன், சுஜாதா மூர்த்தி, சாந்தா, சரோஜா |
| இதழில் அறிவிக்கப்பட்ட கட்டுரைப் போட்டிகள் | பரிசு பெற்றவர்கள் |
| நான் சந்தித்த மிகப் பெரிய சவால் | 1. கே. தனலட்சுமி, தஞ்சாவூர் 2. எஸ். சங்கீதா, மலைக்கோயில் 3. பி.ஜெகதீஸ்வரி, திருச்சி-16 |
| அம்மா - பெண் கலக்கல் போட்டி | பெ. அமுதா, எம். சாந்தா, சித்ரா ஸ்ரீபதி, தி. சுதா, வி.எஸ். கௌரி பா. மலர்விழி, ராதிகா குருச் சரண், சாந்தி, எஸ். வசந்தி. |

• 'எனக்கு 18 உனக்கு 38' நிகழ்ச்சியில்...



திருச்சி வெள்ளி விழாவில் வெற்றிக்கு உறுதுணையாக இருந்த விளம்பரதாரர்களுக்கும், வாசகிகளுக்கு பரிசுகளை அள்ளி வழங்கிய நிறுவனத்தார்களுக்கும் எங்களது உளம்கனிந்த நன்றி உரித்தாகுக.

- மங்கல் & மங்கல், திருச்சி.
- கல்யாணி கவரிங், திருச்சி.
- GRB's உதயம் நெய், ஹோசூர்.
- லக்ஷ்மி முத்து மாளிகை, சென்னை.
- உம்மிடி பங்காரு நகைக்கடை, சென்னை.
- போத்தீஸ், சென்னை.
- மஹா ப்யூட்டி பார்லர், சென்னை.
- ஏஞ்சல்ஸ் காஸ்மெடிக்ஸ், சென்னை.

**நன்றி, நன்றி, நன்றி : ஆச்சி மசாலா சாம்பார்ப் பொடி.**

கண்முன்னே நிறுத்தி பரிசினைத் தட்டிச் சென்றனர் இந்திரா காந்தி கல்லூரி மாணவியர்.

அடுத்ததாக, மங்கையர் மலர் வெள்ளி விழா செய்தியான 'மங்கையர் சக்தி, மகத்தான சக்தி'யை மையமாக வைத்து ஆசிரியர் ரேவதி சங்கரன் இயற்றிய பாடலை, மேடையில் அவர்தம் இனிமையான குரலில் வாசகர்களுக்குச் சொல்லித் தர வாசகியர் அனைவரும் ஒரே குரலில் பாட, அரங்கம் முழுவதும் பெண்கள் சக்தியின் குரல் ஓங்கி ஒலித்தது!

அதன் பிறகு வாசகியர் மத்தியில் இருந்து மங்கையர் மலர் இதழ் குறித்து கருத்துகள் பெறப்பட்டன. எங்களுக்கு நல்ல ஒரு தோழி என்றும் எங்களுக்கு ஒரு வழிகாட்டி என்றும் பலரும் சிலாகித்துப் பேசினர். வாசகியர் கருத்துகளை செவிமடுத்துப் பெற்றுக் கொண்டார் ஆசிரியர்.

இதனைத் தொடர்ந்து பல் சுவை நிகழ்ச்சியாக ஜி. இந்துமதியின் பரதநாட்டியமும், கலைமாமணி ஸ்ரீரங்கம் ரேவதி முத்துஸ்வாமி குழுவினரின் வீதி நாடகமும் நடந்தேறியது.

சிறப்பு விருந்தினராக திருமதி இந்திரா காந்தி கல்லூரி முதல்வர் முனைவர் கே. மீனா அவர்கள் கலந்து கொண்டார். நிறைவுரை ஆற்ற வந்திருந்தவர் திருச்சி மாநகர மேயர் சாருபாலா தொண்டைமான். "இன்று பெண்கள் பல துறைகளிலும் முன்னேறியுள்ளனர். கல்வி, வேலை வாய்ப்பு பெண்களை உயர்வடையச் செய்திருக்கிறது. ஆனால், பெண்கள் தங்களுக்குக் கிடைத்திருக்கும் சுதந்திரத்தை தவறாகப் பயன்படுத்தி விடக் கூடாது!" என்று கூறினார்.

பரிசு பெற்ற வாசகியர் மற்றும் போட்டியில் கலந்து கொண்ட அனைத்து வாசகியரும் மேயர் சாருபாலா தொண்டைமான் கையால் பரிசும் பாராட்டுப் பத்திரமும் மகிழ்வுடன் பெற்றுக் கொண்டனர். விழாவுக்கு வருகை தந்திருந்த மங்கையர் அனைவரும் ஆச்சி மசாலாப் பொடி பாக்கெட்டுகளையும், மில்கா வழங்கிய வொண்டர் கேக்குகளையும் சுவைத்துக் கொண்டே மனநிறைவுடன் வீடு போய்ச் சேர்ந்தனர்!

தொகுப்பு : **ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

படங்கள் : **எஸ்.ஜி. ராஜன்**


• நடன நிகழ்ச்சி...


• **வாசகியர்கள் வெள்ளம்!**




ஒரு திருமணத்தில் நம் அனைவரது கவனமும் சென்று போய் விழுவது மணமகன், மணமகளிடம்தான். அன்று காமிரா பார்வை, வீடியோ பார்வை, உற்றார் உறவினர்களின் திருஷ்டிப் பார்வை என்று அனைத்து வகை பார்வையினாலும் குளிப்பாட்டப்பட்டு விடுவார்கள். பொதுவாக மணமக்களுக்கு கல்யாணக் களை கூடி தனி அழகு கொடுத்திருந்தாலும், போட்டோவிலும், வீடியோவிலும் பளிச் பளிச்சென்று விழ செயற்கை அழகின் உதவியும் தேவைப்படுகிறதல்லவா? மேலும் தற்கால யுவன், யுவதிகள் போட்டி போட்டுக் கொண்டு ப்யூட்டி பார்லர் நோக்கி படையெடுத்து வரும் இவ்வேளையில் இதோ அவர்களுக்கு நம்மாலான உதவி (1)

சென்னை வேளச்சேரியில் ஆண்களுக்கென்று ப்யூட்டி ஹவுஸ் நடத்தி வரும் சந்திரனைப் பிடித்து மணமகனுக்கான ப்யூட்டி டிப்ஸ்களை அள்ளி வழங்குமாறு சொன்னோம்.

1. திருமணத்திற்கு குறைந்தது ஒரு மாதத்திற்கு முன்பே அழகு பராமரிப்பைத் தொடங்கி விட வேண்டும்.

2. முகத்தில் உள்ள கருப்புப் புள்ளிகளை நீக்கி, கண்ணிற்கு அடியில் உள்ள கருவளையங்களைப் போக்க உதவுவது ஃபேஷியல். வெயிலினால் வறண்ட தோல்களுக்கு புத்துணர்வைத் தரவல்லது.

3. முப்பது வயதுக்கு மேற்பட்டவர்கள் மாதம் ஒரு முறை ஃபேஷியலைத் தொடர்ந்து செய்து கொள்வதால் முகம் பளிச்சென்று காட்சியளிக்கும்.



# மணமக்களுக்கு இனிய யோசனைகள்!



• சந்திரன்

4. வெயிலில் இரண்டு சக்கர வாகனங்களில் பயணம் செய்வோர் இரண்டு மணி நேரத்திற்கு ஒருமுறை முகத்தை நன்கு அலம்பிக் கொள்வதால் முகத்தில் கிரீஸ் படிவதைத் தவிர்க்கலாம். முகத்தை வெறும் தண்ணீரால் அலம்பிக் கொண்டு ஐஸ்ஸினால் முகம் முழுவதும் தேய்த்து விடவும். (சளித் தொல்லை உள்ளவர்கள் ஐஸைத் தவிர்க்கவும்.)

5. **கரு வளையம் போக :** வெள்ளரிக் காய் + ஒரு முட்டையின் வெள்ளைக் கரு + 1 டீஸ்பூன் லெமன் ஜூஸ் + 1 டீஸ்பூன் பால் ஏடு இவற்றை நன்கு குழைத்து முகத்தில் தடவி பத்து நிமிடம் கழித்து கழுவ வேண்டும். வாரம்

இருமுறை இப்படிச் செய்வதால் நல்ல பலன் கிடைக்கும்.

**6. முகப்பரு நீங்க:**

தக்காளிச் சாற்றை தினமும் முகத்தில் தடவி ஒரு மணி நேரம் கழித்து கழுவி விட வேண்டும். பருவினால் ஏற்பட்ட தழும்புகள் மறையும்.

**7. முகப் பளபளா :**

பாதாம், ரோஸ் வாட்டர், கிளிசரின், எலுமிச்சை ஜூஸ் இவற்றைச் சமமாக எடுத்து குழைத்து முகத்தில் தடவி இரவு முழுவதும் ஊறவிட்டு காலையில் முதலில் மிதமான சூடான நீரில் கழுவி பிறகு குளிர்ந்த நீரில் அலம்ப முகம் பொலிவு பெறும்.

**8. தோல் மினுமினுப்பு :** ஒரு முட்டையின் மஞ்சள் கரு + 1 டீஸ்பூன் தேன் + ஒரு துளி மஞ்சள் பவுடர் கலந்து தோலில் தடவி அரை மணி நேரம் ஊறிய பிறகு குளிக்கவும். இதை மொத்தமாகக் கலந்து ஃப்ரிட்ஜில் வைத்தால் 20 நாட்கள் வரை பயன்படுத்தலாம்.

9. மூக்கைச் சுற்றியுள்ள கறுப்புப் புள்ளிகளை நீக்க கண்டிப்பாக ப்ளீச் செய்து கொள்ள வேண்டும். மூக்கில் வெளியில் தெரியும் அதிகப்படி முடிகளை திருமணத்தன்றோ முதல் நாளோ கண்டிப்பாக ட்ரிம் செய்து கொள்ள வேண்டும்.

10. கரடுமுரடாக வளர்ந்திருக்கும்








8. நேர்த்தியை அதிகமாக எதிர்பார்ப்பவர்கள், அதற்கு வேண்டிய அளவு எடையும், கூலியும் கொடுக்கவும் வேண்டும்.

9. நகைகளைப் பாலீஷ் போடுவதாக வீடு தேடி வருபவர்களிடம் நகைகளைக் கொடுத்தால், தங்கம் எடை குறைந்து ஏமாற வாய்ப்புண்டு.

10. தங்க வளையல்கள் அணியும் பொழுது கண்ணாடி வளையல்களைத் தொடர்ந்து அணிவதைத் தவிர்க்கவும். ஏனெனில் கண்ணாடி தங்கத்தில் தேய்மானத்தை உண்டுபண்ணும்.

11. வெள்ளி சேர்த்து செய்யப்படும் நகைகள், பார்வைக்குப் பளிச்சென்று இருந்தாலும், பாரம்பர்ய முறையில் செம்பு சேர்த்துச் செய்யப்படும் நகைகள்தான் அதிக நாள் நீடிக்கும்.

12. தங்க நகைகளுடன் வெள்ளி நகைகளோ, வெள்ளிக் கம்பிகளோ சேர்ந்தால், தங்க நகைகள் கறுக்கும்.






புருவ முடிகளையும் அழகாக ட்ரிம் செய்து கொள்வதால் தப்பில்லை.

11. மிதமான வெந்நீரில் எலுமிச்சை ஜூஸ் அல்லது எலுமிச்சைப் பழத் துண்டுகளைப் போட்டு அதில் கை நகங்கள் மற்றும் கால் நகங்களை சிறிது நேரம் ஊறவிட வேண்டும். நகங்களில் உள்ள அழுக்குகள் அறவே நீங்கி விடும். நகங்களில் உள்ள மஞ்சள் கறைகளை டூத் பேஸ்ட் கொண்டு பிரஷ் செய்தும் போக்கலாம். ஒருவனை அவன் கால், கை நகங்களைக் கொண்டே கணிக்கலாம் என்று பெரியோர்கள் சொல்வார்கள். நகங்களின் அழகும் முக்கியமே!

12. மெனிக்யூர், பெடிக்யூர் கூட செய்து கொள்ளலாம். கால் பாதங்களில் நம் உடலில் உள்ள அனைத்து நரம்பு மண்டலங்களும் இணைகின்றன. இங்கு தரப்படும் மஸாஜானது உடலில் ரத்த நாளங்களின் ஓட்டத்தைச் சீர்படுத்தி முகத்தில் ஒரு தேஜஸையும், உடலில் மினுமினுப்பையும் தருகிறது.

13. மேலும் கை, கால்களின் அழகு பராமரிப்பானது கல்யாணத்தன்று வேட்டி கட்டும் பொழுது அழகாக விளங்கவும், புகைப்படத்தில் பளிச்சென்று இருக்கவும் வழிசெய்கிறது.

14. வெயிலினால் மற்றும் சுற்றுப்புறச் சூழலினால் தலைமுடி களையிழந்து, நிறமிழந்து காணப்படும். இதைத் தவிர்க்க தினமும் காலையில் நன்கு எண்ணெய் தடவி மயிர்க்கால்களில் எண்ணெய் படும்படி அழுத்தித் தேய்த்து மஸாஜ் செய்து விட வேண்டும்.

15. கல்யாணத்திற்கு ஒரு வாரத்திற்கு முன்பு தலைமுடி வெட்டிக் கொள்ள வேண்டும். ஏனெனில் புதிய ஹேர் ஸ்டைல் அந்த ஒரு வாரத்திற்குள் நன்கு செட்டாகி விடும். அந்த ஹேர் ஸ்டைல் பிடிக்கவில்லையென்றாலும் வேறு ஏதாவது மாற்றிக் கொள்ள ஒரு வார நேரமிருக்கிறதே!

16. பொடுகுத் தொல்லை



# அழகான வடிவம்... அருமைய

# அனைத்துப்




இடம் : 17 அளகேசன் சாலை, அவினாசிலிங்கம்
ஷரமிக் வித்யா பீடம் அருகில், கோயம்புத்தூர் 641 043

மூன்று மற்றும் இரண்டு பெட்ரூம் அப்பார்ட்மென்டுகள்

8 இரண்டு பெட்ரூம் அப்பார்ட்மென்டுகள்
32 மூன்று பெட்ரூம் அப்பார்ட்மென்டுகள்

இணையற்ற வசு

- ஸ்ரீவத்ஸா ரியல் எஸ்டேட்ஸ் பிரைவேட் லிமிடெட் என்ற பெயரின் நம்பிக்எ
வடிவமைத்து டிசைன் செய்தது • கிளோஸ்ட் சர்க்யூ

உங்களுக்கே சொந்தமான கனவு இல்லத்தில் குடியேற அழைக்கிறோம்.

மேலும் விவரங்களுக்கு தொடர்பு கொள்ளுங்கள்:



ஸ்ரீவத்ஸா ரியல் எஸ்டேட்ஸ் (பி) லிட்.

## ...ன வசதிகள்... அதிக சிக்கனம்...
## ...நிறைந்தது!



**விசேஷ வசதிகள்:**

நீச்சல் குளம், கிளப் ஹவுஸ், குழந்தைகள் விளையாடும் பகுதி, கிளோஸ்ட் சர்க்யூட் டிவி, இன்டர்காம், காம்பவுண்டு மதில் சுவர், பைப்புகளின் மூலம் கியாஸ் விநியோகம் (Optional), ஜிம்னாசியம், லவுன்ஜ், வெய்ட்டிங்ரூம் ஆகிய வசதிகள்.

Anugrah Madison 3082 R

**களை அளிக்கிறது:**

முத்திரை • முன்னணி கட்டடக்கலை வல்லுனர்களான சங்கர் - அசோசியேட்ஸ்
டிவி, இன்டர்காம் வசதிகளால் அதிக பாதுகாப்பு பெற்றது.

***Visit us at: www.sreevatsaonline.com / www.sreevatsa.com***

கோவை: 8/2, மேட்டுப்பாளையம் சாலை, கோயம்புத்தூர் 641 043, இந்தியா. போன்: 91-422-243 7422 / 244 1481 / 243 2184 / 243 2042 பேக்ஸ்: 91-422-243 0899, *Email: sreevatsa@touchtelindia.net* சென்னை: 7, காமராஜ் பார்க் தெரு, சென்னை 600 013, இந்தியா. போன்: 91-44-2595 3149 / 2596 0270 / 2595 7953 / 2596 1029-31 பேக்ஸ்: 91-44-2595 0055 / 2596 5032 / 2522 4087 *Email:Sreevatsa@vsnl.com*



உள்ளவர்கள் அதற்குரிய கட்டுப்படுத்தும் வழிமுறைகளை மேற்கொள்ள வேண்டும். முட்டையின் வெள்ளைக் கரு + தயிர் கலந்து தலையில் தேய்த்துக் குளித்து வர உடல்சூடு தணியும். முடிக்கு நல்ல கண்டிஷனர்.

17. முடி நிறமிழந்து, இள நரை உள்ளவர்கள் ஹெர்பல் டை போட்டுக் கொள்ளலாம். கல்யாணத்திற்கு பதினைந்து நாட்களுக்கு முன்பு போட்டுக் கொள்ள வேண்டும். வீட்டில் பயன் படுத்தினால் கண்ணில் படாமல் பார்த்துப் போட வேண்டும்.

18. வெயிலில் அலைபவராக இருந்தால் வெயில் படும் இடங்களில் சன் க்ரீம் லோஷனைத் தடவிக் கொண்டு செல்லவும்.

19. முடிக்கு செயற்கை நிறங்களான சிகப்பு, மெரூன் போன்ற டைகளை இந்த நேரத்தில் போடுவதைத் தவிர்க்கவும். ஏனெனில் புகைப்படத்தில் சாயம் ஏற்றப்பட்ட முடித் தோற்றம் நன்றாக விழாது.

20. ரிசப்ஷனுக்கு அணியப் போகும் உடையை மணப்பெண்ணின் உடைகளுக்கு மேட்சான நிறத்தில் தேர்ந்தெடுத்து அணிய வேண்டும்.

## மணமகளுக்கு ரேவ்ஸ் தரும் டிப்ஸ் :

**1. மூக்குத்தி சேவை**

திருமணத்திற்கு ஒரு மாதம் முன்னதாகவே மூக்குக் குத்திக் கொண்டால் புண் ஆறி இருக்கும். மூக்கின் இதழ் வளைந்து முடியும் இடத்தில் ஒரு பால் பாயிண்ட் பேனாவால் புள்ளி வைத்து அதனைக் கண்ணாடியில் நன்றாகக் கவனித்துச் சரியான இடத்தில் அமைந்திருக்கிறதா என்று கவனிக்கவும். முதலில் போடும் மூக்குத்தி தங்கத்தால் ஆனதாக இருத்தல் நல்லது. (கல் நகை வேண்டாம்). அதில் குங்குமமும், தேங்காய் எண்ணெயும் குழைத்த கலவையைத் தடவி வைத்தால் புண் எளிதில் ஆறும். அவ்வப்போது மூக்குத்தியைச் சுழற்றி விட்டுக் கொள்ளுதல் நல்லது. அப்படியே விட்டால் காய் காய்த்தது போல் ஆகி விடும்.

2. பன்னீர், கிளிசரின், எலுமிச்சைச் சாறு இந்த மூன்றையும் சம அளவில் கலந்து ஒரு பாட்டிலில் போட்டு 'ப்ரிஜ்'ஜில் வைத்துக் கொள்ளவும். வீட்டிலிருக்கும் போதெல்லாம் இந்தக் கலவையை முகத்திலும், கழுத்திலும் 'சதும்பத்' தடவி வைக்கவும். கிளிசரின் மருந்துக் கடைகளில் கிடைக்கும்.

3. பன்னீர் - பன்னீர் என்ற பெயரில் கடைகளில் கிடைப்பது 'எஸன்ஸ்' கலந்த தண்ணீர்!

**பன்னீர் வீட்டிலேயே செய்வது எப்படி?**

இரண்டு தம்ளர் உதிர்த்த 'ரோஸ்' நிற ரோஜா இதழ்கள். (சிவப்பு ரோஜா அல்ல) 5 தம்ளர் தண்ணீரை ஒரு பாத்திரத்தில் கொதிக்க விடவும். நன்றாகக் கொதிக்கும் போது ரோஜா இதழ்களைப் போட்டு அடுப்பை அணைத்து விட்டு பாத்திரத்தை மூடி விடவும். சுமார் 2, 3 மணி நேரத்திற்குப் பிறகு வடிகட்டி பாட்டிலில் ஊற்றி வைக்கவும். இதுதான் உண்மையான பன்னீர்.

4. ப்யூட்டி பார்லருக்கு ஒரு வாரத்திற்கு முன்னதாகவே சென்று ப்ளீச்சிங், த்ரெட்டிங், புருவங்கள் அழகுபடுத்துவதை செய்து கொள்வது விகாரமாகத் தெரியாமல் தவிர்க்கும்.

**5. ரிசப்ஷனுக்கு தலை அலங்காரம் :**

மாப்பிள்ளை உயரமாக இருந்து, பெண் குள்ளமாக இருந்தால் மணப் பெண் தலையைத் தூக்கி வாராமல், வகிடு எடுத்து வாரி அலங்காரம் செய்ய வேண்டும்.

6. முகம் பொலிவுடன் விளங்க தினமும் தயிர் + சிறிது கஸ்தூரி மஞ்சள் பொடி, பயத்த மாவு கலந்து முகத்தில் தடவி நன்கு ஊறிய பிறகு





# பாதுகாப்பான லேசர் சிகிச்சை

US - FDA வால் அங்கீகரிக்கப்பட்டது. பக்க விளைவுகள் இல்லை! வலி இல்லை! தழும்பு இல்லை! தேவையற்ற முடிக்கு நிரந்தர தீர்வு



BEFORE

அமெரிக்காவின் தலைசிறந்த தோல் நிபுணர்களால் உபயோகப் படுத்தப்படும்



AFTER

லேசர் இந்தியாவில் 10,000க்கும் மேற்பட்டோரின் பிரச்னையைத் தீர்த்துள்ளது.



BEFORE



AFTER

முடி உதிர்தலுக்கு லேசர் சிகிச்சை மூலம் நிரந்தர தீர்வு



PRE-TX

LYRA LASER சருமத்தில் COLLAGEN நிகழ்த்தி சருமத்தை மெருகூட்டுவதால்



POST - TX

பளபளப்பாகவும் பொலிவுடனமும் தோற்றமளிக்கச் செய்கிறது.



**Follicle Laser**

என்.16, ஜெகந்நாதன் தெரு,
(லிஸ்ட்டர் லாப் எதிரில்),
(ஹோட்டல் கன்பத் எதிரில்)
நுங்கம்பாக்கம், சென்னை - 34.
போன்: 28216316, 6332

## சிறப்பு சலுகை 30%

தைராய்டு மற்றும் ஹார்மோன் குறைபாடு உள்ளவர்களுக்கு டாக்டர்களின் மேற்பார்வையில் சிறப்பு சிகிச்சை.

---

உங்கள் பட்டுப் புடவை

# என்றும் புதுப் பொலிவுடன்

**பழசெல்லாம் புதுசாகும்**
**புதுசெல்லாம் மேலும் மெருகேறும்**

## பட்டுப்புடவைகள் நிறம் மங்கி விட்டதா? கறைகள் படிந்து விட்டதா?

## கவலை வேண்டாம்

நிறம் மங்கிய, கறைகள் படிந்த பழைய பட்டுப் புடவைகள், காட்டன் நைலான் புடவைகள் மற்றும் ஜீன்ஸ், கர்ட்டன்ஸ் ஆகியவற்றை சிறந்த தரத்துடன் சாயம் தோய்த்து புத்தம் புது பொலிவுடன் புதியவைகளாக மாற்றித் தருகிறோம்.

- டையிங் ✦ ப்ளாக் பிரிண்டிங்
- ஹேண்ட் எம்பிராய்டரி ✦ ஸ்டிச்சிங்
- ஸ்பெஷல் ட்ரை கிளீனிங் & ஸ்டீம் பிரஸ்ஸிங்
- ஜரி பாலிஷிங் ✦ டார்னிங்

சுடிதார், ப்ளவுஸ் ஒரே நாளில் தைத்துக் கொடுக்கப்படும்.

## ஸ்ரீ ராம்லோக் & கோ

73, ரங்கநாதன் தெரு. (அம்பிகா அப்பளம் பின்புறம்) தி.நகர், சென்னை - 600 017.
போன் : 24345697, 24353063

Branch :

- 2, Co-operative Colony, Alwarpet, Chamiers Road, (Next to Park Sheraton), Chennai - 18 Ph : 5211 1541
- 47C, I Floor, Velachery Main Road, Chennai-42 (Next to Velachery Police Station), Ph : 55272390
- 138-3, Geethanjali Colony, 17th Main Road, (100 Feet Ring Rd) Anna Nagar West, Chennai - 40. (Opp. to Yes Yes Royal Mahal) Ph : 26161500

13. ஸ்வர்ணா,காஞ்சனா, தங்கம், பொன், கனகம் மற்றும் பல பெயர்களால் அழைக்கப்படுவது இந்த உலோகமாகும். இந்தப் பெயர்கள் தேவதைகளின் பெயராகிப் பின் மனிதர்களுக்கும் பெயராகி உள்ளன. இந்தச் சிறப்பு வேறு, எந்த உலோகத்திற்கும் இல்லை.

14. பாலீஷ் செய்வதற்கு, நம்பிக்கையான கடைகளுக்குச் செல்ல வேண்டும். தெருவில் வருவோரிடம் கொடுத்தால் தங்கத்தை இழக்க வேண்டி வரும்.

15. சர்வதேசத் தங்க விலைக்கு ரூபாய் மதிப்பில் எடுத்து அதனுடன் சுங்க வரி, வணிக வரி, இன்ஷூரன்ஸ் ஆகியவற்றைக் கூட்டிச் சென்னை தங்கம் மற்றும் வைர நகை வியாபாரிகள் சங்கம் போன்றவை அந்தந்த ஊர்களில் விலையை நிர்ணயிக்கின்றன. இந்த விலைக்குத்தான் வியாபாரிகள் தங்கத்தை இறக்குமதி செய்யவோ, வாங்கவோ முடியும்.

குளிர்ந்த தண்ணீர் விட்டுக் கழுவ வேண்டும்.

7. கண்ணாடி வளையல்களை அணியும் பொழுது கையில் கோல்டு க்ரீம் தடவிக் கொண்டு வளையல்களை அணியும் போது கீறல்கள் விழாமல் தடுக்கும்.

8. கால், கை நகங்களைச் சீர்படுத்திக் காலில் உள்ள வெடிப்புகளுக்கு லோஷன் தடவி, நகப் பூச்சுப் பூசி அழகாக வைத்துக் கொண்டால் காலில் மெட்டி அணியும் தருணத்தில் கேமிரா கண்கள் பளிச்சிட கூடியிருப்போரின் கண்களும் விரியும்.

9. காலை முகூர்த்தத்தின் பொழுது, ஆழ்ந்த நிறமுள்ள 'ஐ' ஷேடோஸ், செயற்கை இமைகள் இவற்றைத் தவிர்க்கவும்.

10. மூக்குக் கண்ணாடி அணிபவர்கள், காலையில் கண்ணிற்கு அணியும் காண்டாக் லென்ஸில் அதிக கவனமுடன் இருக்க வேண்டும்.

11. காதில் கனமான ஜிமிக்கி, தொங்கட்டான்கள் அணியும் பொழுது காது மடலில் வலிக்காமல் இருப்பதற்கு மாட்டலையும் தோட்டுக்குப் பின்னால் பட்டன்களையும் அணியவும்.

12. கூடியவரை கனமான மலர்களைத் தலையில் அணிவதைத் தவிர்க்கவும். இல்லையெனில் குடும்ப பாரம் சுமப்பதற்கு முன்பே பூ பாரம் அழுத்துவதாக முகத்தில் தெரியவரும்!

13. முகத்தில் அலைபாயும் தலை முடிகளை (சுருள் கற்றைகளை) ஜெல் பயன்படுத்தி வாரி விடவும். ஜெல்லை சிறிது தண்ணீர் கலந்து பயன்படுத்துவது நல்லது.

14. உதடுகளுக்கு முதலில் லிப் பென்சிலினால் அவுட்லைன் வரைந்து கொண்டு அதன் உள்ளே இளம் வண்ணங்களில் லிப்ஸ்டிக் போட்டுக் கொள்வது நல்லது.

15. மை அல்லது ஐ லைனர் போட்டால் அதன் மேலே லேசாகப் பவுடர் ஒத்திக் கொண்டால், மை கரைந்து வழிவதைத் தவிர்க்கலாம். ஐ லைனர் - தண்ணீர் பட்டால் கசியாததாகப் பயன்படுத்த வேண்டும். (வாட்டர் ஃப்ரூப்)

16. மணமேடைக்கு வரும் முன் உள்ளாடைகள் பாவாடையின் விளிம்பு, 'பிரா ஸ்டிராப்' வெளியே எட்டிப் பார்க்காமல் இருக்கிறதா என்று கவனிக்க வேண்டும்.

17. மிதமான இனிய மணமுள்ள 'ஸெண்ட்' பயன்படுத்துவது சூழ்நிலையை இதமாக்கும். ரொம்ப ஸ்ட்ராங்கான சென்ட் பயன்படுத்தி மாப்பிள்ளைக்கு இப்பொழுதே தலைவலியை உண்டு பண்ணாதீர்கள்.

18. காலில் கொலுசு அணியும் பொழுது திருகாணி



யில் நூல் சுற்றி அணிவதால் தொலைந்து போக வாய்ப்பில்லை.

19. மெட்டியை முதலிலேயே சரியான அளவு பார்த்து வாங்கவும். திருமண தினத்தன்று கால் விரலில் சிறிது கோல்ட் க்ரீம் தடவினால் மணப்பெண்ணும் மணமகனும் புகைப்படத்தில் முகம் சுளிக்காமல் விழுவார்கள்.

20. வெள்ளை மல் துணி வாங்கி பெரிய சதுரமாக வெட்டி தண்ணீரில் நனைத்து, துவைத்துக் காய வைத்துக் கொள்ள வேண்டும். திருமணத்தன்று அந்தத் துணியில் சிறு துளி யூடி கோலன் போட்டு கையில் வைத்துக் கொண் டால் முகத்தில் வேர்வை படியும் பொழுது அப்படியே தேய்க்காமல் ஒற்றி எடுத்தால் மேக்-அப் கலையாமல் இருக்கும்.



## இருவருக்கும் பொதுவாக...

1. உலகிலேயே உங்களை விட அதிர்ஷ்டசாலியோ, அழகானவர்களோ இல்லை என்று எண்ணத்தால் உங்கள் மனதை நிரப்பிக் கொள்ளுங்கள். தன்னம்பிக்கை துளிர்க்கும்.

2. அன்றைய தினம் முழுதும் உங்கள் முகத்தில் சிரிப்பைத் தவிர வேறு எதையும் காட்ட வேண்டாம்.

3. மணமகன், மணமகள் இருவரும் தங்கள் உற்றார், உறவினர்களைப் பற்றி பரஸ்பரம் அறிமுகப்படுத்திக் கொள்ளும் பொழுது முகத்தில் புன்னகையையும், கைகூப்புதலையும் இயற்கையாக அழகாகச் செய்யுங்கள்.

4. வேட்டி கட்டி பழக்கமில்லாத மணமகன் இடுப்பில் வேட்டி கட்டிக் கொண்டு பெல்ட் அணிந்து கொள்ளலாம். மணமகள் புடைவை அணிந்து கொள்ளும் பொழுது தலைப்பில் மறக்காமல் 'பின்' செய்து கொள்ளவும்.

5. காலம் முழுவதும் பேசி, கொஞ்சி, குலாவி மகிழப் போறீங்க. இந்த நாளில் எல்லோருடைய பார்வையும் உங்கள் மீது தான் என்பதை மறக்காதீர்கள்.

## திருமணத்தில்...

1. வீடியோ, புகைப்படம் எடுத்து கல்யாண நினைவுகளை பதிப்பித்துக் கொள்கிறோம் இல்லையா? கூடவே திருமணத்தில் மறக்க முடியாத தருணங் கள், பாட்டுக்களை சி.டியாக வும் காப்பி செய்து வைத்துக் கொள்ளவும்.

2. ரிசப்ஷனுக்கு கச்சேரியும், லைட் ம்யூசிக் கும்தானா? மணப்பெண், மணமகனின் சிறு வயது ஆடியோ, வீடியோ புகைப்படங்களின் அணிவகுப்பை ஸ்லைட் ஷோவாக அரங்கேற்றலாமே!

3. ஒரு டேபிளில் உங்கள் குடும்பப் புகைப்படங்கள், நினைவு களை கடை பரப்பி விருந்தினர்களுக்கு காட்சியளிக்கலாம்.

4. மணமகன், மணமகள் தோழியர், தோழர்கள், குடும்ப நண்பர்கள், உறவுகளை அழைத்து கவிதை அல்லது இனிமையான நினைவுகளை பகிர்ந்து கொள்ளச் செய்யலாமே.

5. வந்திருக்கும் விருந்தினர்களிடம் ஐந்து வருடத்திற்கு பிறகு மணமக்கள் எப்படி இருப்பார்கள் (குழந்தைகள், உடல் எடை, வேலை சம்பந்தமான..) என்பதைக் கணித்து எழுதச் சொல்லி அதை ஒரு பெட்டியில் போட்டு சீல் வைத்து விடுங்கள். (ஐந்து வருடங்கள் கழித்து இந்தத் தம்பதி அதைப் பிரித்துப் பார்த்து மகிழலாமே!)

தொகுப்பு : **சாந்தி ரங்கராஜன்**



# மீலாது நபி

இப்பூவுலகின் புனிதராம் முஹம்மது நபி(ஸல்) அவர்கள் அவதரித்த தினமே மீலாது நபி விழாவாக கொண்டாடப்படுகிறது. ரபியுல் அவ்வல் (இஸ்லாமிய ஆண்டின் மூன்றாவது மாதம்) பன்னிரண்டாம் நாள் வள்ளல் நபி பிறந்தார். (இறையருளால் அவர் மறைந்த நாளும் அதுவே!) நபிகள் நாயகத்தின் நற்பண்புகளை சொல்லிக் கொண்டே போனால் ஒரு யுகம் போதாது. அவர்களின் வாழ்வியல் நெறிகளிலிருந்து சில துளிகள் :

மூடப்பழக்க வழக்கங்களிலும், சண்டை சச்சரவிலும், வேடிக்கை, விளையாட்டுகளிலும் மூழ்கிக் கிடந்த மக்களிடையே ஏக தெய்வ வணக்கத்தையும், சகோதரத்துவத்தையும், சன்மார்க்கத்தையும் நிறுவினார்கள். அதன் காரணமாக பல வழிகளிலும் வந்த சோதனைகளையும் வென்றார்கள்.

மனத்தூய்மை, கண்ணியம், சுயநல மறுப்பு, நீதி, வீரம், உண்மை, உலகத்தோடிருந்தும் உலகத்தில் பற்றில்லாத எளிய வாழ்க்கை, அல்லாஹ்வின் மீது உறுதியான நம்பிக்கை ஆகிய குணநலன்கள் அனைத்தும் பெருமானார் அவர்களிடம் ஒருங்கே நிரம்பி இருந்தன.

பெருமானார் (ஸல்) அவர்களின் வாளின் பிடியில் என்ன எழுதியிருந்தது தெரியுமா?

1. உங்களுக்குத் தீங்கிழைப்போரையும் மன்னியுங்கள். 2. உங்களை வெறுத்து ஒதுக்குபவருடனும் சேர்ந்து இருங்கள், 3. உங்களுக்குத் தீங்கிழைத்தோருக்கும் நன்மையே செய்யுங்கள், 4. உங்களுக்கு விரோதமாக இருப்பினும் நன்மையே பேசுங்கள்.

அண்ணல் முஹம்மது மறைந்திடினும், அன்னார் உரைத்த பொன் மொழிகள் என்றும் நமக்கு வழிகாட்டும்.

**- தஸ்மிலா அஸ்கர்.**



### முகமது நபி (ஸல்) அவர்களின் பொன் மொழிகள்

இளமையை உன் -
முதுமைக்கு முன்னும்
ஆரோக்கியத்தை உன் -
நோய்க்கு முன்னும்
செல்வத்தை உன் -
வறுமைக்கு முன்னும்
ஓய்வை உன் _
அலுவலுக்கு முன்னும்
வாழ்க்கையை உன் -
மரணத்திற்கு முன்னும்
பெரும் பாக்கியமாக
எண்ணிக் கொள்.

**- பெனாஸிர் ஆமினா.**



• எஸ். சரஸ்வதி

'கல்யாணம் பண்ணிப் பார்', 'வீட்டைக் கட்டிப் பார்' என்பார்கள். இரண்டுமே பணபலத்தையும், உடல் பலத்தையும் சோதனைக் குள்ளாக்கி விடும் என்பதுதான் உண்மை. நடுத்தரக் குடும்பங்கள் தம் பொருளாதார நிலைமையை மறந்து, நாலாபக்கங்களிலும் கடனை வாங்கி, ஊர் முழுக்க வட்டிக்குக் கடன் வாங்கி ஜமாய்த்து



• தமிழ்ச் செல்வி

**எஸ். சரஸ்வதி :** சிக்கனமாக நிச்சயமாகப் பண்ண முடியும். கல்யாணத்தில், முதலில் மாப்பிள்ளை அழைப்பிலிருந்தே எப்படியெல்லாம் பணம் விரயமாகிறது பாருங்கள்.

மாப்பிள்ளை அழைப்பு டிரஸ் என்கிற பெயரில் கோட்டு, சூட்டு என்று ஆரம்பிக்கிறது. நம் நாட்டு சீதோஷ்ண நிலைக்கு கோட்டையும், சூட்டையும் தினப்படி ஆபீசுக்குப் போட்டுக் கொண்டு போக முடிகிறதா? பெண் வீட்டார் ஆயிரக்கணக்கில் பணத்தைக் கொட்டிப் பட்டுப் புடைவைகள் வாங்குவதும், மாப்பிள்ளைப் பையனுக்கு பட்டு வேஷ்டி, மற்றும் தேவைக்கு அதிகமாக ஜரிகை வேட்டிகள் வாங்குவதும், அதிகப்படியாகத்தான் தோன்றுகிறது. அதைத் தவிர்த்து எத்தனையோ ஃபாஷனில் ஜரிகைப் புடைவைகள் வந்துள்ளன.

வாங்கும் துணிமணிகளைத் தேவைக்கு உபயோகப்படுத்துகிறாற்போல் வாங்கினால் போதுமானது. அது மட்டுமல்ல கட்டில், படுக்கை என்று வாங்கிக் கொண்டு, அதைப் போட்டுக் கொள்ள இடம் இல்லாமல், சாமான்களுக்காக பெரிய வீடு மாறும் சில குடும்பங்களைப் பார்த்திருக்கிறேன்.

பணத்தை மிச்சப்படுத்தி பாங்கில் போட்டு வைத்தால் பிற்காலத்தில் தம்பதிகளுக்கே உபயோகப்படும் இல்லையா?

**ஏ. தமிழ்ச் செல்வி :**

முதலில் இரு வீட்டாரும், கல்யாணம் எப்படிச் செய்யலாம் என்பதை மனம் விட்டுப் பேசிக் கொள்ள வேண்டும். கல்யாணத்தை முன்னிட்டு செய்யப்படும் செலவுகள் அனைத்தும் மணமக்களை மனதில் கொண்டேதான் செய்யப்படுகின்றன. அதனால் எதிர்காலத்தில் அவர்களுக்கு உபயோகப்படும் வகையில் திட்டமிட்டுச் செலவழிக்க வேண்டும்.

# ஆடம்பரச்





உதாரணமாக டிபன் அயிட்டங்களில் ஸ்வீட்டில் நான்கு வகைகள், அதைத் தவிர இட்லி, பொங்கல், ஊத்தப்பம், பூரி என்று இதுபோன்ற நான்கு வகைகள் என்று போட்டால் எப்படிச் சாப்பிட முடியும்?

மிக நெருங்கிய உறவினரை வைத்து கோயிலில் திருமணத்தை முடித்துக் கொண்டு, மாலையில் ரிசப்ஷன் மட்டும் கொடுக்கலாம். எங்கள் வீட்டில் நடந்த ஒரு திருமணத்தில் மேற்சொன்னவாறு செலவைக் குறுக்கி அந்த பணத்தை மணமக்களிடமே கொடுத்து,

**விட்டு, கல்யாணம் முடிந்தவுடன் தலையில் துண்டைப் போட்டுக் கொள்வதினால் என்ன பயன்? விரலுக்கேற்ற வீக்கமும், சிக்கனமும் இருந்தால் பணத்தை விரயப்படுத்தாமல் பயனுள்ளதாய் செய்து கொள்ளலாமே! இதுபற்றி சிலரிடம் அபிப்பிராயம் கேட்டோம்.**

சேமித்து வைக்கும்படி கூறி பேங்கில் போட்டோம். ஆடம்பரச் செலவு செய்து, ஒருவருக்கும் உபயோகப்படாமல் வீணாக்குவதை விட தேவைகளைக் குறுக்கி, வாழ்வைப் பெருக்கி வளமாக இருக்கலாமே!

**லக்ஷ்மி நந்தகோபால் :**

எங்கள் இல்லத்தில் நடந்த திருமணத்தில், கல்யாணத்திற்கு உடன் பிறந்தவர்களுக்கு துணிமணிகள் வேண்டாம் என்று கூறி, யாருமே வாங்கிக் கொள்ளவில்லை. ஒவ்வொருவரும் அவர்களால் எந்த ஏரியாவில் செலவைக் குறைக்க முடியும் என்று யோசித்துத் தானே குறைத்துக் கொள்ள வேண்டும். சிறு துளி பெருவெள்ளம் அல்லவா? இந்தச் சமயத்தில் ஒரு சிறு நெருடலையும் கூறத்தான் வேண்டியிருக்கிறது. ஊர் விட்டு ஊர் வந்து கல்யாணம் செய்து கொண்டு செல்பவர்களுக்கு அந்தக் காலத்தில் கட்டுசாதக் கூடை கொடுக்கப்பட்டது. ஆனால், சம்பிரதாயம் என்கிற பெயரில் உள்ளூர்காரர்களுக்கும் கட்டி கொடுக்கப்படுகிறதே! வேடிக்கைதான். இன்னும் நடுத்தர அல்லது கீழ் இருக்கும் வர்க்கமும்தான் ரொம்பவே

* லக்ஷ்மி நந்தகோபால்

* காயத்ரி

கள். அப்படியிருக்கும் பொழுது பெண்ணைப் பெற்றவர் வளர்த்து, படிக்க வைத்து, செலவு செய்து கல்யாணமும் செய்து கொடுத்து விட்டு கடனில் இருப்பதால், யாருக்கு என்ன லாபம்? தேவையோ, தேவையில்லையோ பெட்டி நிறைய பாத்திர பண்டம். கேட்கிறோமோ, கேட்கவில்லையோ ஆயிரக் கணக்கில் கொட்டிக் கொடுத்து பாட்டு கச்சேரி! உடுத்துகிறோமோ இல்லையோ முழ உயர ஜரிகைப் பட்டுப் புடைவைகள், இவையெல்லாம் குறையணும், குறையணும், குறையணும்!

பேட்டி : **மாலதி சந்திரசேகரன்**

# செலவுகள் தேவையா?

எதிர்பார்க்கிறார்கள் என்று தோன்றுகிறது.

**பி.டி. காயத்ரி :**

ஐதீகமும், வைதீகமும் அவசியம் தேவைதான். இல்லையென்று கூறவில்லை. அதற்காக தங்கமும், வைரமுமாகத்தான் இழைக்க வேண்டும் என்கிற அவசியமில்லையே. ஆடம்பரம் என்கிற பெயரில் கல்யாணத்தன்று 'தாம், தூம்' செய்தால் எதிர்காலத்தில் தம்பதியினரின் தேவைக்கு யார் உதவப் போகிறார்கள்? இப்பொழுதெல்லாம் அநேகம் பெண்கள் ஐந்து லகரம் வரை சம்பளம் வாங்குகிறார்



# கல்யாணமாம் கல்யாணம்



இந்தக் காலத்துப் பசங்களுக்கு ஒரு மண்ணும் தெரியறது இல்ல! 'விளையாடல்' சாமான்கள் வாங்கிண்டு வந்து தட்டுல 'வை'ன்னு சொன்னேன்! அதான்!!

என்னதான் மாடர்ன்னா இருந்தாலும் அம்மிக்கு பதில் 'மிக்ஸி'யைத்தான் மிதிப்பேன்னு பொண்ணு சொல்றது நல்லா இல்ல!



முகூர்த்தம் முடிஞ்சவுடனே அமெரிக்கா போற 'ப்ளேனை' பிடிச்சாகணுமாம்! அதான்!



சாப்பாட்டுக்கே ரெண்டு லட்சம் ஆச்சுன்னு சொன்னா அந்த மாமி, நிஜமாவா?

எதுவா இருந்தாலும் கேட்டுச் சாப்பிடுங்கோ மாமி.



படம், கருத்து : ஸ்ரீகாந்த்

# SENIOR CITIZEN'S HOME AT KODAIKANAL

## For Those who want to Live and Blend with Nature for a Healthy Increased Span of Life

**Location :** Perumalmalai, Kodaikanal Hills, Altitude 1500 mtrs.

**Facilities : Only twin Sharing.** 8 Rooms.

- ★ Double Bedded Room, with Toilet, Hot Water, Phone, TV, Etc.,
- ★ Round the Clock Security
- ★ Healthy Vegetarian balanced diet from home grown vegetables.
- ★ Meditation & Recreation Hall
- ★ In house First-aid Facility & Tieup with a Hospital.
- ★ Well stocked Library
- ★ Optional sight seeing tours.

**FREE FROM HEAVEN**

- ★ Gentle cool breeze to caress you while walking
- ★ Pure unpolluted oxygen let out by the forest to fill your lungs & rejuvenate you
- ★ Aroma of Coffee and Wild Flowers which make you say "AH"
- ★ Lullaby of different birds playing music to your taste.
- ★ Lush forest greenery and mountain springs a feast to behold.
- ★ Couples preferred, If Single choose your mate.

Contact : Liason Officer, **K. GIRIDHARI LAL**

75, Angalamman Koil Street, (Lala Lane) Near Vysial Street, Coimbatore - 641 001.

---

ஸ்ரீரஸ்து சுபமஸ்து ஸ்ரீ வெங்கடேச ப்ரசன்ன

**ஜெகத்குரு ஸ்ரீ ஆசார்ய சுவாமிகள் ஆசியுடனும் ஆக்ஞையின்படியும் கீழ்கண்ட யாத்திரைகளை அறிவிக்கிறோம்.**

1. 30.04.2005 முதல் 08.05.2005 வரை 2 புண்ய நதிகள், 2 ஜோதிர்லிங்கங்கள் மற்றும் ஜெய்பூர் புஷ்கர் யாத்திரை.
2. 13.05.2005 முதல் 08.06.2005 வரை டெல்லி, பத்ரி, கேதார், ஆக்ரா மதுரா காசி அலகாபாத் அயோத்யா கயா யாத்திரை.
3. 13.05.2005 முதல் 27.-5.2005 வரை ஆக்ரா, மதுரா, டெல்லி, பத்ரி கேதார் யாத்திரை.
4. 23.05.2005 முதல் 08.06.2005 வரை டெல்லி, காசி, அலகாபாத், கயா, அயோத்யா, சித்ரகூடம், நைமசாரணியம், கயா உள்ளிட்ட காசி யாத்திரை.

குறிப்பு: - 1) எங்களுக்கு ஏஜெண்டுகள், கிளை அலுவலகங்கள் கிடையாது. 2) 60 நாட்கள் முன்னதாக டிக்கெட் ரிசர்வ் செய்ய வேண்டி இருப்பதால் அதற்கும் முன்னதாக ரிசர்வ் செய்து கொள்வது நல்லது. 3) சூப்பர் டீலக்ஸ் 2X2 பஸ்ஸில் செல்லும்போது எங்களிடம் ரிசர்வ் செய்துள்ள வரிசைப்படி சீட்டுகள் ஒதுக்கப்படும். 4) எங்கள் சார்ஜுகளில் ரயில், பஸ் சார்ஜுகள், ஆகாரம், தங்கும் ரூம் வாடகை, ஊர் சுற்றிப் பார்க்கும் செலவுகள் அனைத்தும் அடக்கம். 5) பெண்கள், ஆண்கள் 60 வயது முடிந்தவர்கள் அதற்கான அத்தாட்சியை உடன் கொண்டு வர வேண்டும்.

மேலும் விவரங்களுக்கு **ஸ்ரீ மஹாலக்ஷ்மி யாத்ரா சர்வீஸ்** (Regd)

1, யூசுப் லேன், அருணாசல ஆசாரி தெரு, சேப்பாக்கம், சென்னை - 600 005

தொலைபேசி : ஆபீஸ் : 044 - 28516845, வீடு : 044-28516957

---

ஸ்ரீ ரஸ்து, சுபமஸ்து, ஸ்ரீ வெங்கடேசப்ரசன்ன:- ஜெகத் குரு ஸ்ரீ ஆசார்ய சுவாமிகள் ஆசியுடன் ஆரம்பிக்கப்பட்ட **ஸ்ரீதரம்வாரி ரிட்டையர்டு ஜெண்டில்மேன் க்வார்ட்டர்ஸ் (முதியோர் இல்லம்)** தற்போது தயார் நிலையில் உள்ளது. ஒரு ப்ளாக்கில் இருவர் தாராளமாக இருக்கலாம். நபர் 1க்கு ரூ **50,000/-** அட்வான்ஸ் தர வேணும். ( இது திருப்பி தரக் கூடியது) மாதம் 1க்கு ரூ.**4000/-** இது வாடகை, ஆகார வசதி ஆகியவற்றுக்காகும். இது ஸ்ரீபெரும்புதூருக்கும், வல்லக்கோட்டைக்கும் நடுவில் உள்ளது. சுத்தமான ஆகாரம், இனிப்பான சுத்த ஜலம் ஆக அருமையாக உள்ளது

**SRIDHARAMVARI**
RETIRED GENTELMANS QUARTERS
Plot No. 338 to 345, Thirumala Nagar, Pondur Village, Sriperumbudur - 602 105 Ph: 044-55261345

விருப்பம் உள்ளவர்கள் உடன் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி

**S.V.D. AYYER** Founder Managing Trustee
SREEDHARAMVARI TRUST
No. 1. Essouf Lane, Arunachalam Achari Street, Chepauk, Chennai -600 005

விழா மங்கைக்காக வாசகிகள் அனுப்பியுள்ள குவியலிலிருந்து தேர்ந்தெடுக்கும் போது ஓர் இனிய விஷயம் தெரியவந்தது. தேர்ந்தெடுக்கப்பட்ட மங்கையின் வெற்றிக்குப் பின்னால் அவர் மணாளரும் இருக்கிறார் என்பதும், பிரசுரிக்கப்படும் இந்த இதழ் திருமணச் சிறப்பிதழாக மலர்கிறது என்பதும்! அடாடா! இரட்டைச் சிறப்பிதழோடு இரட்டிப்பு மகிழ்ச்சி!

# விழா மங்கையும், மணாளரும்!



முந்நூறு (12 X 25) மலர்களைக் கொண்டு தமிழ் நல்லுலக மங்கையர் வெள்ளி இழைகளால் தொடுத்த மாலையில் (கணவன் - மனைவியாகிய) எங்கள் எளிய பங்கின் நினைவலைகள்.

கட்டுரைகள் : 26 (எழுதியவர் - ஷ - ஷண்முக சுந்தரம், ச - சரோஜினி)

1990 - பிப். - பெண்கள் மேலாண்மைப் பயிற்சி (ஷ)

1992 - பிப். - மூன்று நூற்றாண்டுகளுக்குப் பயன்படும் காலண்டர் - (ஷ)

1993 - நவ. - ரயிலில் பிடிவாதக் காரனைப் பணிய வைத்த அனுபவம் - (ச)

1994- சுற்றுலா அனுபவக் கட்டுரைக்காக - சித்ரா பௌர்மணியன்று வி.ஜி.பி. தங்கக் கடற்கரையில் விருந்துடன் நடந்த விழாவில் சுவர்க் கடியாரம் (இன்றும் கூடத்தை அலங்கரிக்கிறது) மற்றும் ஓராண்டு வரை வி.ஜி.பி. கோல்டன் பீச்சுக்கு விரும்பியபோதெல்லாம் செல்ல இலவச பாஸ் பரிசு கிடைத்தது.

1995 - ஏப். - பெண் சிசுக் கொலை - ஆய்வுக் கட்டுரை (ஷ)

முதியோருக்குப் பகலில் மட்டும் தங்குவதற்கு காப்பகம் (ஷ)

டிச. - 'பேரன்களை இப்படி வளர்க்கிறேன்' (ச)

டிச. - பணியிடங்களில் பெண்களுக்குத் தொல்லைகள் (ச)

96 ஏப். - விடுமுறையில் சிறார்க்கு ஒரு புதிய விளையாட்டு (ஷ)

96 - இளநீர் எனும் அமுதம், சத்துகள், பலன்கள் (ஷ)

96 - உடல் இளைக்க அதீத ஆர்வத்தால் ஏற்படும் பாதிப்புகள் (ஷ)

96 - குழந்தையை உருவாக்குவதில் எல்.கே.ஜி. (ஷ)

96 - ஆசிரியையின் மகத்தான பங்கு

96 - கர்நாடகத்தில் 'ஓம்' பீச் சிறப்பு - (ஷ)

98 - டிச. புற்றுநோயால் பாதிக்கப்பட்டு அலுவலகத்தோடு போராடி உரிமைகளை நிலைநாட்டிய அமெரிக்கப் பெண்ணின் வரலாறு (ஷ)

98 - ஆந்திராவின் அரக்குப் பள்ளத்



தாக்கு - ஏழைகளின் டார்ஜிலிங் (ஷ)

99 - நவ. ஆசிய நாடுகளில் 5 நாள் தீபாவளி (ஷ)

2000 - டீ.வி.யின் புதுவில்லன்கள் (ச)

2001 - 'செம்மண்ணும் மழை நீரும் போல' -லண்டன் சுரங்க ரயிலில் தமிழ்ப் பாடல் - (ஷ)

2001 - நவ. சுஷ்மா ஸ்வராஜ் ஆண்டு தோறும் கர்நாடகத்துக்கு வந்து நோன்பு எடுத்தல் (ஷ)

2002 - மார்ச். திருமணங்களைப் பதிவு செய்வதன் அவசியம், அனுகூலங்கள். (ஷ)

2002 - அக். அயல்துறை அதிகாரி நிருபமா ராய்யின் வாழ்க்கை வரலாறு - சாதனை (ஷ)

2003 - ஜன. தியானத்தின் போது எண்ணச் சிதறல்களைத் தவிர்ப்பது எப்படி? (ஷ)

2003 - பிப். குண்டான குழந்தை பெறுவதால் தாய்க்குச் சர்க்கரை நோய் - தவிர்க்க முன் சிகிச்சைகள் (ஷ)

2003 - மார்ச். செஸ் வீராங்கனை கோனேரு ஹம்பியின் சாதனைப் பட்டியல் (ஷ)

2004 - ஜன. - டாக்டர்கள் கைவிட்ட பெண் குழந்தையைப் போராடி மீட்டு ஆளாக்கிய தாய் (ஷ)

பிப். ஏர் ஹோஸ்டஸ் பணி - தேர்வு முறை - பணியில் அனுகூலங்கள், பிரச்னைகள் (ஷ)

ஆக. பாதை வகுத்த பாவையர் நால்வர். முதல் பெண் டாக்டர், அயலகத் தூதர், பத்திரிகை புகைப்படக் கலைஞர், விமானி - சவால்களும் சாதனைகளும்.

**சிறு கட்டுரைகள், குறிப்புகள்; துணுக்குகள்**

மருத்துவம், ஆரோக்கியம் பற்றி சுமார் 15 வாழ்வியல் யோசனைகள் - 12

விஞ்ஞானம் - 5

ஆன்மிகம், பொன் மொழிகள் -6

பல்சுவைக் குறிப்புகள், துணுக்குகள் - 16

எங்களுக்கு முறையே 75, 68 வயது ஆன நிலையில் பொன் விழா நோக்கி பீடுநடை போடும் 'மங்கையர் மலரின்' வளர்ச்சியில் எங்கள் ஆர்வமும், அந்தப் பொருளடக்கத்தில் எங்கள் அணில் பங்கும் இன்று போல் தொடரும் என்று நம்புகிறோம்.

**- அ. ஷண்முகசுந்தரம், எஸ். சரோஜினி.**



# இம்மாத இல்லத்தரசி

**சமையல் கூப்பன்**

| | |
|---|---|
| பொருள் : பழங்களாலான சிற்றுண்டி | கடைசி தேதி : 15.04.2005 |

என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இதனுடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

# மூட்டு வலியா!



# இனி கவலை வேண்டாம்

மூட்டு வலி என்பது மூட்டுக்களில் ஏற்படும் பாதிப்பை குறிக்கின்றது. இதனை கீழ்வாயு என்றும் அழைப்பார்கள். வாதம், பித்தம், கபம் போன்றவைகள் கூடுவதாலும், குறைவதாலும் இந்நோய் உண்டாகிறது.

**மூட்டு வலி பல வகைப்படும் அவைகள் :**

**வாதமூட்டு வலி :** வாயுப் பொருட்களை அதிகம் உண்பதால் உண்டாகிறது. வாயுப் பொருட்கள், பயிறு வகைகள், பருப்பு வகைகள், கிழங்கு வகைகள் முதலியன. **பித்தமூட்டு வலி :** பித்தத்தை அதிகப்படுத்தும் உணவுப் பொருட்களை அதிகம் உண்பதால் உண்டாகிறது. டீ, காபி, மது, காரமான உணவு வகைகள் முதலியன. **கப மூட்டு வலி :** கபகுற்றம் மிகுதியான உணவுப் பொருட்கள் அதிகம் உண்பதால் கப மூட்டுவலி உண்டாகிறது. இனிப்பு பண்டங்கள், தயிர், இறைச்சி, நெய், எண்ணெய் பண்டங்கள் முதலியன. **இதய கீழ் வாயு :** இதயத்தை நோய் கிருமிகள் தாக்குவதால் இதய மூட்டு வலி உண்டாகிறது. இதனால் ஜுரம், முழங்கால் மூட்டுகளில் வீக்கம், வலி, சூடு போன்றன தோன்றும். சோதனை செய்து பார்க்கும்போது இதயத்தில் பாதிப்பு ஏற்பட்டிருக்கும். **மேக கீழ் வாயு :** விலை மாதர் உறவால் நோய் கிருமிகள் உடலில் பரவி மூட்டுக்களில் பாதிக்கின்றது. இதனால் மூட்டுக்களில் சீழ் பிடித்தல், வீக்கம், வலி, குத்தல், குடைச்சல் போன்றன இருக்கும். **மூட்டு வலியின் அறிகுறிகள் :** மூட்டுக்களில் வலி, குத்தல், குடைச்சல், வீக்கம், நடக்க இயலாமை, சுரம் போன்றவை காணப்படும். மேலும் எலும்பு தேய்மானம், சீழ் பிடித்தல் போன்றனவும் உண்டாகும்.

**மூட்டுக்களை பாதுகாக்கும் முறைகள் :** எண்ணெய் தேய்த்துக் குளிப்பதால் மூட்டுக்களில் எண்ணெய் சென்று நன்றாக செயல்படவும், மிருது படவும் செய்கின்றது.

**உடற்பயிற்சி :** நடத்தல், உட்கார்ந்து எழுதல், குனிந்து நிமிர்தல், கை, கால் விரல்களை, நீட்டி மடக்குதல், நின்றஇடத்தில் குதித்தல், ஓடுதல், நீந்துதல், மூச்சுப் பயிற்சி போன்றவைகள் சைக்கிள் ஓட்டுதல் முதலியன மூட்டுக்களை பலம் பெறசெய்கின்றன. ஆகவே இதனை தினம் காலை, மாலை, சுமார் 20 நிமிடம் மெதுவாக செய்தல் நல்லது. சூரிய ஒளி தினமும் உடலில் படும்படி 10 நிமிடம் நிற்கவும். மேற்கூறிய முறைகளை பின்பற்றினால் எல்லாரக மூட்டு வலிகளில் இருந்தும் குணம் பெறலாம்.

குறிப்பு : சென்னை, வேலூர், காஞ்சிபுரம், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, பெங்களூர், ஓசூர், சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், தர்மபுரி, திருப்பூர், உடுமலைபேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், விருதுநகர், கரூர் போன்றநகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம் - விபரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்.

தகவல் : டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 28 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்றபுத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.100/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்றபுத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.100/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.100/-ம் தலைமை முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.




*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்*

**Dr.M.குருபரன் & Dr.M.சபாபதி, Dr.M.சிவசக்தி, S/o Dr.C.K.மாணிக்கவாசகம்**

தலைமை முகவரி : அஞ்சல் பெட்டி 30, எண்.1, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்),
திருப்பத்தூர் (வ.ஆ.மா.) - 635 601 ✆ : 04179-220469, 222769 Cell : 9443438670

சென்னை முகவரி : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்)
கெல்லீஸ், சென்னை - 10. ✆ : 044-26424285, 26427638 Cell : 9444161670

டெல்லி கிளை : Mrs.Valli, 6/34, W.E.A., Karolbagh, New Delhi - 5. ✆ : 011-25736220 Cell : 9868026743

**மூன்று முகவரிகளிலும் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1, மாலை 5 to 7**

| | | |
|---|---|---|
| **7 & 8** ந் தேதி - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR), ✆ : 24011589, 24033879 | **9** ந் தேதி - பெங்களூர் : காலை 11 to மாலை 1 மணி வரை. Hotel Ajantha, 22A, Mahatma Gandhi Road, Bangalore - 560 001. ✆ : 25584321 | **20 & 21** ந் தேதி - புதுடெல்லி : காலை 9 to இரவு 8 மணி வரை 6/34, W.E.A., Karolbagh, New Delhi - 5. ✆ : 011 - 25736220, Cell : 9818209458 |

# பல்லாங்குழி!

ஏழுபது சோழிகளுடன், பதினாலு குழிகளில் விளையாடும் பல்லாங்குழிக்கு, கொஞ்சம் கவனம் இருந்தால் போதும். பெண்கள் பூப்படைந்த சமயம், பொழுதுபோக்காக பக்கத்து வீட்டுச் சிறுமிகளுடன் விளையாடுவர். திருமண வீட்டில் மாலையில் நடைபெறும் நலுங்கில், பெண்ணும், மாப்பிள்ளையும் பல்லாங்குழி ஆடுவதும் உண்டு. பெண்ணுக்குச் சீர் வரிசையில் பல்லாங்குழியும் முக்கியமான ஒன்று. வசதிக்கேற்ப, மாக்கல் பல்லாங்குழி, மரப்பல்லாங்குழி, வெண்கலப் பல்லாங்குழி... (ஏன் என் பெரிய மாமியாருக்கு வெள்ளிப் பல்லாங்குழியே தந்தார்களாம் அவர்கள் அன்னை) என பலவிதங்களில் மட்டுமல்ல.. பல வடிவங்களிலும் இருக்கும்.

திறந்த பல்லாங்குழி, மூடு பல்லாங்குழி என்று இரு வகையாகக் கிடைக்கும். திறந்த பல்லாங்குழியில் ஜெயித்த சோழிகளை நடுவில் உள்ள குழியில் சேமிக்கலாம்.

மூடு பல்லாங்குழி பெட்டி போன்று இருக்கும். மீன், பறவை வடிவங்களில் கூட இருக்கும். பக்கத்திற்கு ஏழு வீதம், அடியிலும், மூடியிலும் சேர்ந்து பதினான்கு குழிகள் இருக்கும். சோழிகளுக்குப் பதில், குன்றிமணி, புளியங்கொட்டை கொண்டும் விளையாடலாம்.

இனிமேல் பல்வேறு பல்லாங்குழி விளையாட்டுக்கள் எப்படி எனப் பார்க்கலாம்.

**தடவும் பாண்டி**

இருவர் எதிர் எதிர் திசையில் உட்கார்ந்து, குழிக்கு ஐந்து சோழி வீதம் போட்டு,

ஒவ்வொருவருக்கும் ஏழு குழி என வைத்துக் கொள்ள வேண்டும். அவரவர் குழியை, அவரே பிரிக்க வேண்டும். முதலில், ஒரு குழியைப் பிரித்து, அடுத்த குழியிலிருந்து ஒவ்வொரு சோழியாகப் போட்டு வர வேண்டும். முடிந்தவுடன் அடுத்த குழியைப் பிரித்து அதே மாதிரி போட்டு வர வேண்டும். இப்படியே விளையாடி வரும் போது, கையில் உள்ள சோழிகள் காலியானவுடன், பிரிக்க வேண்டும். காலியாக உள்ள குழியைத் 'தக்கம்' என்று கூறி, அதில் அடையாளமாக ஏதேனும் சிறு பொருளைப் போட்டு, விளையாட்டில் அதைச் சேர்த்துக் கொள்ளாது, மீண்டும் ஆரம்பிக்க வேண்டும். இப்படியே, பல ஆட்டங்கள் ஆடி, ஒருவரே, அத்தனை சோழிகளையும் பெறுவது வரை விளையாட வேண்டும்.

சில சமயம் ஆறு குழிகள் தக்கமாகி, கையிலும் ஐந்துக்குக் குறைவான சோழிகள் இருந்தால், ஒருவருமே, குழிக்கு ஒரு சோழி எனப் போட்டு விளையாட வேண்டும்.

## உடனடி தாயக்கட்டம்!

**வி**டுமுறையில் தாயக்கட்டை விளையாடுவோம். இப்போது தரை (ஃப்ளோர்) மொசைக், மார்பிள் என்று போட்டு விடுகிறோம். கட்டம் எப்படிப் போடுவது? விழிக்க வேண்டாம். சின்ன அட்டைப் பெட்டியை எடுத்து அதன் நாலு மூலைகளையும் பிரிக்கவும். நாலு பக்கமும் நாலு கட்டமும், நடுவில் காய் வைக்கும் சதுரமும் போல அட்டைப் பெட்டியை பிரித்தால் வந்து விடும். கலர் ஸ்கெட்ச் பேனாவால் வரையவும். விளையாடி விட்டு நான்காய் மடித்து, அலமாரியில் வைத்து விடலாம். எப்போது வேண்டுமானாலும் எடுத்து விளையாடி விட்டு, அப்படியே மடித்து வைத்து விடலாம். ஒவ்வொரு முறையும் வரையும் வேலை மிச்சம். பார்க்கவும் அழகாய் இருக்கும்.

**- ஸ்வேதா, சேலம் - 8.**

### முக்குப் பாண்டி

**மு**க்குப் பாண்டியிலும், முன் மாதிரியே, ஐந்து வீதம் நிரப்பி, பிரித்து விளையாடி வரும் பொழுது, கையிலுள்ள கடைசிச் சோழியை எந்தக் குழியில் போடுகிறோமோ, அதைப் பிரித்து ஆட வேண்டும். எப்பொழுது, பிரிக்க வேண்டிய குழி காலியாக உள்ளதோ, அதில் கையிலுள்ள ஒரு சோழியைப் போட்டு அடுத்தவருக்கு, விளையாட விட்டு விட வேண்டும்.

வேண்டிய குழியும் காலியாக இருந்தால் அதைத் தடவி அடுத்து உள்ள குழியிலும், அதற்கு எதிரே உள்ள குழியிலும் உள்ள சோழிகளை எடுத்துக் கொள்ள, அடுத்தவர் விளையாட ஆரம்பிக்க வேண்டும். இப்படியே, எல்லாக் குழிகளும் காலியாகும் வரை ஆட வேண்டும். தடவிய பின், அடுத்த குழியில் சோழி இல்லாவிட்டால், ஏமாற்றமே மிஞ்சும். குழிகளில், ஒரு சோழி மட்டும் இருக்கும் சமயங்களில், அதை மட்டும், எடுத்து விளையாட்டை முடிக்கலாம். இப்படியே, முதல் ஆட்டம் முடிந்தவுடன், அவரவர் குழிகளில் ஜெயித்த சோழிகளைப் போட

இப்படியே விளையாடி வர, நான்கு மூலையிலுள்ள குழிகளிலும் மூன்று சோழிகள் விழுந்து விட்டால், அவை பருவமடைந்து விட்டதாகப் பொருள். மேலும், அதில் சோழிகள் போட வேண்டாம். எப்பொழுது கையிலுள்ள கடைசிச் சோழி பருவமடைந்த குழியில் விழுகிறதோ, அதைக் குழியின் மேல்புறம் வைத்து, விளையாடும் நபர் நிச்சயிக்கப் பட்டு விட்டதாக அர்த்தம். ஒவ்வொருவரும் எத்தனை முக்குகளை நிச்சயித்துள்

# 'பார்த்திப' புத்தாண்டுக்கு





# அர்த்தமுள்ள அன்புப் பரிசு!

ஸ்ரீராம் சிட்ஸ் முப்பது ஆண்டுகளாக சந்தாதாரர்களுக்கு பலவிதமான பரிசுகளை வழங்கி வந்துள்ளது. ஆனால், பார்த்திப சித்திரை சீட்டு விழா முதல் இந்தப் பரிசுகள் நிறுத்தப் படுகின்றன.

**அர்த்தமுள்ள அன்புப் பரிசு!**

அற்புதமான ஆயுள் காப்பீட்டுப் பரிசை எங்கள் அன்பின் அடையாளமாகப் பெறுங்கள்! இந்த சித்திரைச் சீட்டு விழாவின் போது புதிய சீட்டில் சேரும் சந்தாதாரர்களுக்கு ஆயுள் இன்சூரன்ஸ் காப்பீடு மற்றும் விபத்து இன்சூரன்ஸ் காப்பீடு பாலிசிகளைப் பரிசாக வழங்குகிறோம்.

**நெருக்கடியைச் சமாளிக்க காப்பீடு**

பல குடும்பங்களில் சில சமயங்களில் எதிர்பாராத துயரச் சம்பவங்கள் நிகழ்ந்து விடுகின்றன. குடும்பத்தின் தலைவர் அகால மரணம் அடைந்தால், அல்லது விபத்தினால் அவர் நிரந்தரமாக ஊனம் அடைந்தால், பெரும் பொருளாதார நெருக்கடி ஏற்படுகிறது. இத்தகைய நெருக்கடிகள் நீங்கினால், உதவுவதற்காகவே இந்த இன்சூரன்ஸ் காப்பீடு பரிசு.

**தக்க சமயத்தில் தரும் உதவி**

கடந்த இரண்டு ஆண்டுகளில் பல குடும்பங்களில் துயரச் சம்பவங்கள் நேரிட்டபோது, பாதிக்கப்பட்ட குடும்பங்களுக்கு உரிய இன்சூரன்ஸ் தொகையைப் பெற்றுத் தந்து உதவியது ஸ்ரீராம் குரூப்.

**ஸ்ரீராம் சிட்ஸ் சிறப்புகள்:**

• 30 ஆண்டுகளாக பல லட்சம் குடும்பங்களின் வளமைக்கு வழிகாட்டி • நேரடியாகவும், மறைமுகமாகவும் ஏராளமானவர்க்கு வேலை வாய்ப்பு • இதுவரை ரூ.14,000 கோடிக்கு மேல் சீட்டுத் தொகை பட்டுவாடா • சீட்டுத் தொகையாக தினந்தோறும் சுமார் ரூ.10 கோடி பட்டுவாடா • தமிழ்நாடு, கர்நாடகா, ஆந்திரா, மகாராஷ்டிரா மாநிலங்களில் 465க்கும் மேற்பட்ட கிளைகள்.

**ஆயுள் & விபத்து**
**இன்சூரன்ஸ் காப்பீடு* இலவசம்!**

* ரூ.2,00,000 அல்லது அதற்கு மேல் மதிப்புள்ள சீட்டில் சேரும் சந்தாதாரர்களுக்கு, ரூ.1,00,000 ஆயுள் இன்சூரன்ஸ் மற்றும் ரூ.1,00,000 நபர் விபத்து இன்சூரன்ஸ் காப்பீடு முற்றிலும் இலவசம்.
* ரூ.75,000 முதல் ரூ.1,50,000 வரை மதிப்புள்ள சீட்டில் சேரும் சந்தாதாரர்களுக்கு, ரூ.50,000 ஆயுள் இன்சூரன்ஸ் மற்றும் ரூ.1,00,000 நபர் விபத்து இன்சூரன்ஸ் காப்பீடு முற்றிலும் இலவசம்.
* ரூ.50,000 மதிப்புள்ள சீட்டில் சேரும் சந்தாதாரர்கள், ரூ.50 செலுத்தி, ரூ.50,000 ஆயுள் இன்சூரன்ஸ் மற்றும் ரூ.1,00,000 நபர் விபத்து இன்சூரன்ஸ் காப்பீடு பெறலாம்.
* ரூ.15,000 முதல் ரூ.30,000 வரை சீட்டில் சேரும் சந்தாதாரர்களுக்கு, ரூ.1,00,000 நபர் விபத்து இன்சூரன்ஸ் காப்பீடு இலவசம்.

*18 முதல் 54 வயதுக்கு உட்பட்டவர்களுக்கு மட்டும்.

**55 வயது முதல் 75 வயது வரை:**

* ரூ.1,00,000 மதிப்புள்ள நபர் விபத்து இன்சூரன்ஸ் காப்பீடு.
* குழந்தைகள் கல்வி போனஸ்: சந்தாதாரர் விபத்தில் மரணம் அடைந்தால், 19 வயதுக்கு உட்பட்ட குழந்தைகளுக்கு - ஒரு குழந்தைக்கு ரூ.5,000 வீதம், அதிகபட்சம் இரண்டு குழந்தைகளுக்கு - காப்பீட்டுத் தொகையில் 10%-க்கு மிகாமல் கல்விச் செலவு போனஸ்.
* விபத்தின் விளைவாக ஏற்படும் மருத்துவமனைச் செலவு ரூ.25,000.
* ரூ.1,00,000 மற்றும் அதற்கு மேற்பட்ட மதிப்புள்ள சீட்டில் சேரும் சந்தாதாரர்களுக்கு மேற்கண்ட இன்சூரன்ஸ் காப்பீடு இலவசம்!
* ரூ.50,000 மதிப்புள்ள சீட்டில் சேரும் சந்தாதாரர்கள் ரூ.50 செலுத்தி, மேற்கண்ட இன்சூரன்ஸ் காப்பீடு பெறலாம்.

*நிபந்தனைகளுக்கு உட்பட்டது.
*இன்சூரன்ஸ் காப்பீடு 1 ஆண்டுக்கு மட்டும் செல்லுபடியாகும்.

பார்த்திப சித்திரை
சீட்டு விழா • 1-14 ஏப்ரல் 05





**ஸ்ரீராம் சிட்ஸ்**
தமிழ்நாடு (பி) லிமிடெட்

கிரீம்ஸ் துகார், 149 கிரீம்ஸ் சாலை, சென்னை 600 006. போன்: 52236000

ளாரோ, அவற்றில் விழுபவை அவருக்கே சொந்தம். இரண்டு குழிக்கு மேல் தக்கம் வந்தால், முக்குக் குழியில் மட்டும் சோழி போட்டு மற்ற குழிகளில் அடையாளம் போட வேண்டும்.

## முத்து எடுத்தல்

குழிக்கு ஐந்து வீதம் சோழிகளைப் போட்டு, முதலில் ஏதேனும் ஒரு குழியைப் பிரித்து, ஆடுபவர் ஒரு சோழியை எடுத்துக் கொண்டு மீதியைப் போட்டு வர வேண்டும். கடைசிச் சோழி போட்ட குழியைப் பிரித்து, ஒரு சோழியை எடுத்து, மீதியைப் போட்டு விளையாட வேண்டும். கடைசிச் சோழி போடும் குழி காலியாக இருந்தால், கையிலுள்ளதை அதில் போட்டு விட, அடுத்தவர் ஆட ஆரம்பிப்பார்.

குழிக்குப் பன்னிரண்டு சோழிகள் போட்டு ஆடுவதும், காலியான குழியில் ஆறு சோழி வந்ததும் 'பசு' என்று எடுத்து வைத்துக் கொள்வதும், இருவர் காசி பொத்தினால் 'இலவான்' என்று சோழிகளைப் பிரித்துக் கொள்வதும் உண்டு.

இப்படியாகப் பல் வகை பல்லாங்குழி விளையாட்டு விளையாடும் வேளை, சோழிகள் விழும் ஒலி சங்கீதமாக இருக்கும் செவிகளுக்கு...

- கோமதி நமச்சிவாயம்
(அன்பு வட்டம் எண் 186)
படங்கள் : ஸ்ரீஹரி




# அம்மா சொல்லுங்களேன்!

**வி. கௌரி, சென்னை.**

தலையில் பொடுகு இருக்கிறது. எந்த வைத்தியமும் பலிக்கவில்லை. நல்ல வழி சொல்லுங்களேன்...

தேங்காய் எண்ணெயுடன் எலுமிச்சைச் சாறு சேர்த்து நன்றாகத் தலையில், மயிர்க்கால்களில் தடவிய பின் சியக்காய்ப் பொடி தேய்த்துக் குளிக்கவும். தலை சருமம் உலர்வதால்தான் பொடுகு ஏற்படுகிறது. உங்களுக்கென்று தனியாக ஒரு சீப்பைப் பயன்படுத்தவும். மரச்சீப்பு, கொம்பு சீப்பினால் வாரிப் பின்னிய காலத்தில் பொடுகு இருந்ததில்லை.



**பரிமளா சௌந்தர் ராஜன், மயிலாடுதுறை.**

வெந்தயம், நன்னாரி வேர் இவற்றின் மகத்துவம் என்ன?

வெந்தயத்தின் கசப்புச் சுவை வயிற்றுக்கு நல்லது. முதல் நாள் இரவு ஒரு சின்னக் கிண்ணத்தில் மோரில் வெந்தயம் 1 ஸ்பூன் ஊறவைத்து, அதை அடுத்த நாள் காலையில் சாப்பிட்டால் உடல் சூடு தணியும், ரத்த அழுத்தம், நீரிழிவு நோய்களைத் தணிக்கும்.

நன்னாரி - இந்த வேரைப் பற்றிச் சொல்லுவார்கள் : நிலத்தில் விளைந்தால் நன்னாரி - மலையில் விளைந்தால் மாகாளி என்று. இரண்டுமே ரத்தத்தைச் சுத்தமாக்கும். நன்னாரி வேர் எலுமிச்சைச் சாற்றுடன் சாப்பிடுவது குளிர்ச்சி. கோடைக்கு ஏற்ற பானம் நன்னாரி எலுமிச்சை சர்பத். ஐஸ் போட்டு எதையும் குடிக்காமல் இருப்பது நல்லது.

**ரேகா நரசிம்மன், பம்மல்.**

குழந்தைகள் வயிற்றில் பூச்சி இருந்தால் அதற்கு வைத்தியம் என்ன?

வேப்பிலைக் கொழுந்துடன் சிறிது உப்பைச் சேர்த்து மையாக அரைத்து சுண்டைக்காய் அளவு உருண்டைகளாக்கி இரண்டு உருண்டைகளை (ஒரு குழந்தைக்கு) வெறும் வயிற்றில் சாப்பிடச் செய்யவும். பூச்சிகள் செத்து வெளியில் வந்து விடும்.

மாங்கொட்டையை (நாட்டு மருந்துக் கடைகளில் கிடைக்கும்) நன்றாகப் பொடி



## பெரியோரைப் பேணுதல் சிறியோர் கடனே!



'மதம், மொழி, இனம் அனைத்தையும் கடந்து வயதில் முதிர்ந்த பெரியோர்களை வந்தனம் செய்வது இறைவனுக்குச் செய்யும் மகத்தான வேள்வியாகும்' என்ற ஸ்ரீ சத்யசாயி பாபாவின் மொழிகளைச் சிரமேற் கொண்டு கடந்த மாதம் 20ம் தேதியன்று சென்னையில் 'சுந்தரத்'தில் நடந்தது சுந்தரமான விழா ஒன்று.

சென்னைப் பெருநகரில் வாழும் எண்பது வயதுக்கு மேற்பட்ட 150 தம்பதியர்களை ஸ்ரீசத்யசாயி சேவா சமிதியினர் தேர்வு செய்தனர். ஒரு வாரம் முன்னதாகவே அவர்களுக்குத் தாம்பூலத்தோடு புத்தாடைகளும் தந்து வணங்கி 20ம் தேதி சுந்தரத்துக்கு வருகை தர வேண்டும் என அன்போடு அழைத்தனர்.



இதில் இஸ்லாமியத் தம்பதியர்களும், கிறிஸ்தவத் தம்பதியினரும் கலந்து கொண்டனர். பகவான் ஸ்ரீ ஸத்யஸாயி நாதரின் எண்பதாவது பிறந்த நாள் ஆண்டில், பெரியோர்கள் போற்றப்பட்டது இளைய தலைமுறையின் நல்வாழ்வுக்கு உத்திரவாத மளிப்பதாகும்.

**எஸ். ஹரிகிருஷ்ணன்**




செய்து, ஒரு ஸ்பூன் தேனில் அரை ஸ்பூன் பொடியைக் கலந்து காலையும், மாலையுமாக இரண்டு நாட்கள் தரவும். விடுமுறை நாட்களில் தரவும்.

**ஆர். விஜயலட்சுமி, ஆதம்பாக்கம்.**

ஒற்றைத் தலைவலி இருக்கிறது. தலைவலி வரும்போது மாத்திரை சாப்பிட்டால் நின்று விடுகிறது. கண் பார்வை சரியாக உள்ளது.

துளசி கைப்பிடி, 2 கிராம்பு, சுக்கு சிறிது இவற்றை நன்றாக இழைத்துச் சூடாக்கி நெற்றியில் பற்றுப் போட்டால் தலைவலி போகும். குங்குமப்பூவுடன், மஞ்சள் கிழங்கைச் சந்தனக் கல்லில் இழைத்து விளக்குச் சுடரில் சுடவைத்தும் நெற்றியில் தடவ குணம் தெரியும்.

பசி எடுப்பதில்லை. சாப்பிட்டால் ஜீரணம் ஆவதில்லை. கை வைத்தியம் ஏதேனும் சொல்லுங்கள்.

ஒருமுறை பேதிக்குச் சாப்பிடுங்கள். சுடுக்காய்க் கஷாயம் சாப்பிட்டால் வயிறு சுத்தமாகி விடும்.

பசி எடுப்பதற்கு : இஞ்சியைத் தோல் சீவி விட்டு சிறிதளவு ஓமத்துடன் நன்றாக அரைத்து வடிகட்டி அதில் சிறிது சர்க்கரை சேர்த்துக் குடிக்கவும். 'கபகப' வென்று பசி எடுக்கும்.

**ஜீரணமாவதற்கு** : சாப்பிட்ட பிறகு இஞ்சி முரப்பா 2, 3 வில்லைகள் சாப்பிட்டால் ஜீரணமாகும். உணவருந்திய பின் வெந்நீர் குடிப்பது ஜீரணத்துக்கு உதவும்.

# இந்த மாதம் எப்படி

ஸ்வாமி கண்ணன் பட்டாச்சார்யா

ஏப்ரல் 2005



## மேஷ ராசி :

*அஸ்வினி, பரணி, கிருத்திகை 1- ஆம் பாதம்.*

உங்கள் இராசிநாதன் செவ்வாய் உச்சம் பெற்று ஜீவனஸ்தானத்தில் சஞ்சாரம் செய்வதால், எதிர்பாராத உத்தியோக லாபம் ஏற்படும் யோகம் உண்டாகும். நீண்ட காலமாக வராமல் இருந்த பணம் உங்களுக்கு வந்து சேரும். பூமி சம்பந்தப்பட்ட பிரச்னைகள் நல்ல முறையில் முடிவுக்கு வரும். உத்தியோகஸ்தர்கள், உயர் அதிகாரிகளின் ஆதரவுடன் சம்பள உயர்வு, இடமாற்றம் போன்ற நன்மைகளைப் பெற முடியும்.

வியாபாரம் சிறப்பாக நடைபெற்று எதிர்பார்க்கும் லாபம் பெற முடியும். ஆனாலும், பணம் சம்பந்தப்பட்ட இடங்களில் நம்பிக்கைக்குரியவர்களை அமர்த்துவது நன்மை தரும்.

குடும்பத்தில் சுபகாரிய நிகழ்ச்சிகள் நடைபெறும். கணவன் - மனைவி ஒற்றுமை நிலவும். பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் புதிய ஆடை, அணிமணிகள் கிடைத்து மகிழ்ச்சி அடைவார்கள். நண்பர்கள், உறவினர்கள் உதவியாக இருப்பார்கள்.

நீங்கள் ஞாயிற்றுக் கிழமைகளில் 'ஆதித்ய ஹிருதயம்' பாராயணம் செய்து சூரியனை வழிபடுவது நன்மையை அதிகரிக்கச் செய்யும்.



## ரிஷப ராசி :

*கிருத்திகை 2, 3, 4 ஆம் பாதங்கள், ரோகிணி, மிருக சீரிஷம் 1, 2 ஆம் பாதங்கள்.*

உங்கள் இராசியாதிபதியான சுக்கிரன் உச்சம் பெற்று சஞ்சரிப்பது நன்மை செய்யக்கூடிய அம்சம் என்றாலும், மாதப் பிற்பகுதியில் உங்கள் செயல்களில் அதிக கவனமாக இருப்பது நல்லது.




| | | | |
|---|---|---|---|
| சூரியன் ராகு சுக்கிரன் | | | சனி |
| புதன் (வ) | 9.4.2005 - மீனம் - புதன்<br>12.4.2005 - மேஷ - சுக்கிரன்<br>14.4.2005 - மேஷ - சூரியன்<br>22.4.2005 - கும்பம் - செவ்வாய் | | |
| செவ்வாய் | | | |
| | | | குரு கேது |

உத்தியோகஸ்தர்கள் தங்கள் பொறுப்புகளில் எச்சரிக்கையாக இருப்பது அவசியம். சிலருக்கு விரும்பிய இடங்களுக்கு இடமாற்றம் ஏற்படக்கூடும்.

பணியாளர்களிடம் சுமுகமாக நடந்து கொள்வது பிரச்னைகளைத் தவிர்க்கும். வியாபாரம் சுமாராக நடைபெற்றாலும் எதிர்பார்க்கும் லாபம் கிடைக்கத் தடையிராது.

மாணவமணிகள் படிப்பில் அதிக அக்கறையோடு இருப்பது அவசியம். குடும்பத்தில் சிறு சிறு பிரச்னைகள் இருந்தாலும் குடும்பம் நன்றாக நடந்து வரும். வயதான முதியவர்களுக்கு உடல்நலக் குறைவு ஏற்பட்டு மருத்துவச் செலவுகள் இருக்கும்.

நீங்கள் சனிக்கிழமைகளில் சனீஸ்வர பகவானுக்கு எள் அன்னம் நிவேதனம் செய்து, வழங்குவது நன்மை தரும்.



## மிதுன ராசி :

மிருகசீரிஷம் 3, 4 ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1,2,3 ஆம் பாதங்கள்.

உங்கள் இராசிநாதன் புதன் ஒன்பதாமிடத்தில் வக்கிரம் பெற்று சஞ்சரிப்பது, சற்று தொல்லைதரக்கூடிய அம்சமாக இருந்தாலும், இதர கிரகங்களின் சஞ்சாரம் ஓரளவு நன்மை செய்யக்கூடிய அளவில் அமைந்துள்ளன. எந்தப்

தேன்குழல் முதலிய எண்ணெய்ப் பட்சணம் செய்யும் போதும், வடாம் இடும் போதும் சொப்பின் உள்பகுதியில் சிறிது எண்ணெய் தடவி விட்டு, பின் மாவை இட்டுப் பிழிய சொப்பில் சிறிதும் ஒட்டாது.

- விஜயா சுந்தர்ராஜன்.



பிரச்னையிலும் பொறுமையாகவும், நிதானமாகவும் நடந்து கொள்வது நன்மை தரும். கொடுக்கல் வாங்கலில், சொன்ன வார்த்தையைக் காப்பாற்றுவது கடின மாகத் தோன்றும்.

உத்தியோகஸ்தர்கள், தங்கள் அலுவல கப் பணிகளில் கவனமாக நடந்து கொள் வது அவசியம். வியாபாரிகளுக்கு எதிர் பார்த்த அளவில் வியாபாரம் நடக்காதது குறையாகவே தெரியும்.

சுபகாரிய முயற்சிகள் தள்ளிப் போகும். குடும்பத்தில் மருத்துவச் செலவு கள் ஏற்படலாம். உறவினர்கள் வருகை மகிழ்ச்சி தந்தாலும் செலவுகளும் இருக் கும்.

நீங்கள் சனிக்கிழமைகளில் நவக்கிரகங் களைச் சுற்றி வருவதும், சனி பகவானுக்கு கருங்குவளை மலர்களால் அர்ச்சனை செய்வதும் நன்மை தரும்.

## கடக ராசி :



புனர்பூசம் 4 -ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.

உங்கள் இராசிக்கு ஜீவனாதிபதி செவ்வாய் உச்சம் பெற்று சஞ்சரிப்பதால், உங்களுக்கு இந்த மாதம் சில திருப்பங்களைச் சந்திக்கும் வாய்ப்பு ஏற்படலாம். உத்தியோகஸ்தர்கள், சற்று முயற்சியுடன் செயல்பட்டால், ஊதிய உயர்வு, இடமாற்றம் போன்ற நன்மை களைப் பெறக்கூடும். வேலைப் பளு இருந் தாலும், உயர் அதிகாரிகளின் ஆதரவு அப்போது கிடைக்கும்.

தொழிற்பிரிவினர் முன்னேற்றமான நிலையைக் காண முயற்சியுடன் உழைக்க வேண்டியிருக்கும். வியாபாரிகள் மாதமுற்பகுதியில் வியாபாரத்தில் சிறிது தொய்வு இருந்தாலும், பிற்பகுதியில் சுமா ரான முன்னேற்றம் காணப்படும். வாடிக்கையாளர்களிடம் சுமுகமாக நடந்து கொள்வது நன்மை தரும்.

தடைப்பட்ட திருமணங்கள் சம்பந்த மான பேச்சுகள், சுறுசுறுப்படையும். மனைவி வழி உறவுகளால் சிலருக்கு நன்மை ஏற்படலாம். குடும்பத்தில் மருத்து வச் செலவுகளுக்கு இடமுண்டு.

நீங்கள் வியாழக்கிழமைகளில் தட்சிணாமூர்த்திக்குக் கொண்டைக் கடலை நிவேதனம் செய்து வணங்கி



தரையில் இரண்டு டைல்ஸ்களுக்கு இடையில் உள்ள கோடு போன்ற பகுதி அழுக்காகி, கறுப்பாகத் தெரியும். அதை உப்புக் காகிதத்தால் நீக்கலாம். உப்புக் காகிதத்தை இரண்டாக மடித்து, கோட்டின் மீது தேய்க்க வேண்டும்.

- சுதா வாசுதேவன்.

வருவது, நன்மைகளைப் பெருக்கும்.



## சிம்ம ராசி :

*மகம், பூரம், உத்திரம் 1-ஆம் பாதம்.*

உங்கள் இராசிநாதன், சுக்கிரனுடன் சேர்ந்து, எட்டாமிடத்தில் சஞ்சாரம் செய்வதால் சில தடங்கல்களுக் கிடையில், நன்மைகள் ஏற்படவும் வாய்ப் புண்டு. உத்தியோகஸ்தர்களுக்கு, இட மாற்றம், பதவி உயர்வு போன்ற சில நன்மைகள் அமைவதற்குச் சிறிது காலம் பொறுமையாக இருக்க வேண்டி இருக் கும். வியாபாரம் ஓரளவு பரபரப்பாக நடைபெறும். என்றாலும், லாபம் குறை வாகவே காணப்படும்.

கலைஞர்கள் ஓரளவு தங்கள் பணி களில் முன்னேற்றம் காண்பார்கள். குடும் பத்தில் பொதுவாக அமைதி நிலவுமாயி னும், அவ்வப்போது சிறு சிறு பிரச்சனை கள் தலைதூக்கும். ஆரோக்கியத்தில் கவன மாக இருக்க வேண்டும். சிலருக்கு குடும் பத்துடன் வெளியூர் சென்று ஆலயதரி சனம் செய்யும் வாய்ப்பு ஏற்படலாம். கடன்கள் தொல்லை கொடுத்தாலும், பாதிப்பு ஏதும் ஏற்படாது.

நீங்கள் ஞாயிற்றுக் கிழமைகளில், 'ஆதித்ய ஹிருதயம்' பாராயணம் செய்து, சூரிய வழிபாடு செய்வது நன்மை தரும்.



## கன்னி ராசி :

*உத்திரம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 ஆம் பாதங்கள்.*

உங்கள் இராசிநாதன் புதன் ஆறாம் இடத்தில் சஞ்சாரம் செய்வதாலும், அஷ்டமாதிபதி வலுவடைந்து இருப்பதா லும், எடுத்த காரியங்களில் சற்று கவன மாக இருப்பது நல்லது. உத்தியோகஸ்தர் கள் பண சம்பந்தமான பொறுப்புகளில் உள்ளவர்கள் கணக்குகளில் எச்சரிக்கை யோடு இருப்பது அவசியம்.

தொழிற்பிரிவினர் உழைப்பிற்கேற்ற வருவாய் பெற்று மகிழ்ச்சி அடைவர். சக தொழிலாளர்களிடம் சுமுகமாக நடந்து கொள்வது நல்லது. வியாபாரம் சுமாராக நடைபெற்றாலும், வழக்கமாகப் பெறும் லாபத்திற்குத் தடையிராது.

சுபகாரிய நிகழ்ச்சிகளுக்கு முயற்சிகள் மேற்கொள்ளப்படும். திருமணம், விருந்து போன்ற நிகழ்ச்சிகளில் பங்குகொள்ளும் வாய்ப்பு சிலருக்கு ஏற்படும். பெண்களுக் கும், குழந்தைகளுக்கும் புதிய ஆடைகள், அணிமணிகள் கிடைத்து மகிழ்ச்சி ஏற்படும்.

நீங்கள், செவ்வாய் அல்லது வெள்ளிக் கிழமைகளில், மாலையில் துர்கா தேவிக்கு நெய்விளக்கு ஏற்றி வழிபடுவது நன்மை களைப் பெருக்கும்.



## துலாம் ராசி :

*சித்திரை 3, 4 - ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1,2,3 - ஆம் பாதங்கள்.*

உங்கள் இராசிக்கு நான்காம் இடத்தில் செவ்வாய் உச்சம் பெற்று இருப்பதும், உங்கள் இராசிநாதன் சுக்கிரன் உச்சம் பெற்று சூரியனுடன் சஞ்சரிப்பதும், நன்மை தரக்கூடிய அம்சம் என்றாலும், சுக்கிரன் ஆறாம் இடத்தில் சஞ்சாரம் செய்வதால், எதிர்பாராத கடன் அல்லது விரயங்கள் ஏற்பட வாய்ப்புண்டு. கடன், மற்றும் கொடுக்கல் வாங்கலில் சற்றுக் கூடுதல் கவனம் செலுத்துவது நல்லது.

உத்தியோகஸ்தர்கள் தங்கள் உயர்





பச்சைப் பட்டாணி என்று பாக்கெட்டில் போட்டு விற்பதை வாங்காதீர்கள். காய்ந்த பட்டாணியை ஊறவைத்து, பச்சைக் கலர் போட்டு ஏமாற்றுகின்றனர். காய்ந்த பச்சைப் பட்டாணி வாங்கி, இரவே ஊறவைத்து, காலையில் நீரை வடித்து, ஒரு டப்பாவில் போட்டு மூடி ப்ரிஜ்ஜில் வைத்து விடுங்கள். ஓரிரு நாட்களில் நன்கு முளையும் விட்டு விடும். பிறகு வேண்டிய போது எடுத்து பயன்படுத்திக் கொள்ளலாம்.

- வி. விஜயாராணி.



அதிகாரிகளிடம் ஒத்துப் போவது அவசியம். வெளியூர்ப் பயணங்களில் தங்கள் பொருள்களைப் பாதுகாப்பாக வைத்துக் கொள்வது அவசியம். தொழிற்பிரிவினர் கடுமையாகப் பணியாற்றினாலும், எதிர் பார்க்கும் ஆதாயம் கிடைப்பது சிரமமாகும். வியாபாரம் சுமாராக நடைபெறும்.

குடும்பத்தில் கடன் பிரச்னை தலை தூக்கினாலும், சாமர்த்தியமாகச் சமாளிக்கப்படும். வயதானவர்களின் மருத்துவச் செலவு தவிர்க்க இயலாது. திருமணமான தம்பதிகளுக்குப் புத்திர சந்தானம் ஏற்படும். தடைப்பட்ட திருமணங்கள் நடைபெற முயற்சிகள் மேற்கொள்ளப்படும்.

நீங்கள் செவ்வாய்க்கிழமைகளில் சண்முகக் கவசம் நூலைப் பாராயணம் செய்வதுடன், சிவப்பு மலர்களால் முருகப் பெருமானை அர்ச்சித்து வழிபட்டு வந்தால் நன்மைகள் பெருகும்.



## விருச்சிக ராசி :

*விசாகம் 4 - ஆம் பாதம், அனுஷம், கேட்டை.*

உங்கள் இராசிநாதன் செவ்வாய் உச்சம் பெற்றும், குருபகவானின் பார்வை பெற்றும் சஞ்சரிப்பது நன்மை தரக்கூடிய அம்சமாகும். உத்தியோகஸ்தர்கள், இடமாற்றம் போன்ற தங்கள் விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ள முடியும்.

தொழிற்பிரிவினர், வேகமான முன்னேற்றம் அடைந்தாலும் தங்கள் பணியாளர்களிடம் சுமுகமாகப் பழகுவது அவசியம். வியாபாரிகளுக்கு வியாபாரம் நன்கு விருத்தியாவதுடன் வாடிக்கையாளர்களிடமும் நல்ல மதிப்பு ஏற்படும்.

பெண்களின் தேவைகள் யாவும் பூர்த்தியாவதால், மகிழ்ச்சிக்குக் குறைவிராது. குடும்பத்தில் கணவன் - மனைவி ஒற்றுமை நன்றாக இருக்கும். வெளியூர்ப் பயணங்கள் ஏற்படலாம். பயணத்தில் உங்கள் உடைமைகளுக்குப் பாதுகாப்பு அவசியம்.

நீங்கள் வெள்ளி அல்லது செவ்வாய்க் கிழமைகளில் லலிதா சகஸ்ரநாம பாராயணம் செய்வது நல்ல பலன் தரும்.



## தனுசு ராசி :

*மூலம், பூராடம், உத்திராடம் 1 - ஆம் பாதம்.*

உங்கள் இராசிக்கு நான்காம் இடத்தில் சுக்கிரன் சஞ்சாரம் செய்வதால், வீடு, நிலம், வாங்குவது விற்பது சம்பந்தப்பட்ட விஷயங்களில் சற்றுக் கூடுதல் கவனத்துடன் இருப்பது நன்மை தரும்.

உத்தியோகஸ்தர்கள், இடமாற்றம், பதவி உயர்வு போன்றவைகளை கடின முயற்சியின் பின் பெறக்கூடும்.

தொழிற்பிரிவினர், வேகமாக முன்னேற்றமடைந்தாலும், தங்கள் தயாரிப்புகளைச் சிறந்த முறையில் கொண்டு வருவதில் கவனமாக இருக்க வேண்டும். மாணவமணிகள் சுறுசுறுப்புடன் கல்வியில் கவனம் செலுத்தி வருவர்.

குடும்பத்தில் கலகலப்பும் மகிழ்ச்சியும், இருந்தாலும் அவ்வப்போது சில பிரச்னைகள் ஏற்பட்டு சமாளிக்கப்படும். கணவன்



- மனைவி ஒற்றுமை இருக்கும்.

நீங்கள் சனிக்கிழமையன்று ஸ்ரீஆஞ்ச நேயருக்கு வடை மாலை சார்த்தி வழிபாடு செய்வது நல்ல பலன்களை அளிக்கும்.



## மகர ராசி :

*உத்திராடம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 - ஆம் பாதங்கள்.*

உங்கள் இராசி கேந்திரத்தில் செவ்வாய் உச்சம் பெற்று சஞ்சரிப்பதால் எதிர்பாராத பூமி சம்பந்தப்பட்ட சிறிய லாபம் தேடி வர சாத்தியமுண்டு. உத்தியோகஸ்தர்கள் உயர் அதிகாரிகளின் ஆதரவுடன் பதவி உயர்வு, இடமாற்றம் போன்றவைகளைப் பெற்று மகிழ்வர். உற்சாகமூட்டும் அதிக வருமானங்களும் பெருகும் வாய்ப்புண்டு. தொழிற்பிரிவினர், கணிசமான லாபம் பெற்று முன்னேற்றப் பாதையில் நடைபோடுவர். சிலருக்குப் புதிய கிளைகள் திறக்கும் வாய்ப்புண்டாகும்.

குடும்பத்தில் கணவன் - மனைவி உறவு அன்பு கொண்டதாக இருக்கும். சிறு சிறு பிரச்னைகள் இருந்தாலும், குடும்பத்தில் அமைதி நிலவும். பெண்கள், குழந்தைகளுக்குப் புதிய அணிமணிகள் கிடைத்து மகிழ்ச்சி ஏற்படும். தடைப்பட்ட திருமணங்கள் இனிதே நடைபெறும். மணமான தம்பதிகளுக்கு மகப்பேறு பாக்கியம் கிடைக்கப் பெற்று மகிழ்ச்சி அடைவர்.

திடீர் தனலாபம் ஏற்படும். நீங்கள் விநாயகப் பெருமானுக்கு அருகம்புல் மாலை சார்த்தி வழிபாடு செய்து வருவது நலன்கள் பெருக வழி ஏற்படும்.



## கும்ப ராசி :

*அவிட்டம் 3, 4 - ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி, 1, 2, 3 - ஆம் பாதங்கள்.*

உங்கள் இராசிக்கு இரண்டாம் இடத்தில் சுக்கிரன் உச்சம் பெற்று சஞ்சாரம் செய்வது, எதிர்பாராத சிறிய லாபத்தைத் தேடித் தரும் அமைப்பாக இருக்கும். உத்தியோகஸ்தர்கள் தாங்கள் விரும்பிய இடத்திற்கு மாற்றம் பெறக்கூடும். ஆனாலும், தங்கள் பொறுப்புகளைக் கவனமுடன், நிறைவேற்றுவது அவசியம். சிலருக்கு எதிர்பாராத முறையில் பதவி உயர்வு கிடைக்கக்கூடும்.

தொழிற்பிரிவினர் படிப்படியாக அளவான முன்னேற்றத்தை அடைந்து மகிழ்ச்சி பெறுவர். வியாபாரம் சிறப்பாக நடைபெற்று, வியாபாரிகள் கணிசமான லாபம் பெறக்கூடும்.

பூர்வீகச் சொத்துக்கள் மூலம் சிலருக்குத் திடீர் தனவரவு ஏற்படலாம். வயதான பெற்றோர்களின் மருத்துவச் செலவு தவிர்க்க முடியாது. பெண்கள், குழந்தைகள் புதிய ஆடை, அணிமணிகள் கிடைக்கப் பெற்று மகிழ்ச்சி அடைவர். வீட்டில் சுபநிகழ்ச்சிகள் நடைபெறும் சந்தர்ப்பம் ஏற்படும்.

நீங்கள் சனிக்கிழமைகளில், சனீஸ்வர பகவானுக்கு கருங்குவளை மலர் சார்த்தி வழிபாடு செய்வது நற்பலன்களைப் பெருக்கும்.



## மீன ராசி :

*பூரட்டாதி 4 - ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.*

உங்கள் இராசி கேந்திரத்தில் அஷ்டமாதிபதி சுக்கிரன் சஞ்சாரம் செய்வதால் ஆரோக்கியத்தில் சற்றுக் கூடுதல் கவனம் இருக்க வேண்டியது அவசியம். அலுவலகத்தில் உயர் அதிகாரிகளின் ஆதரவு இருக்கும். சிலருக்கு விரும்பிய இடமாற்றமோ, பதவி உயர்வோ கிடைப்பதில் சிரமம் இராது. ஆனாலும் பொறுப்புகளின் சுமை இருக்கும்.

தொழிற்பிரிவினர் முன்னேற்றமான நிலையில் மகிழ்ச்சியடைவர். வியாபாரிகள் தங்கள் வியாபாரத்தில் வளர்ச்சியும், வருமானமும் பெற்று மகிழ்ச்சி அடைவர்.

குடும்பத்தில் சிறு சிறு பிரச்னைகள் ஏற்பட்டாலும் அவைகளைப் பெண்களே சாமர்த்தியமாகச் சமாளித்து விடுவார்கள். வயதான பெற்றோர்களின் உடல்நலனில் அக்கறை அவசியம். வெளியூர்ப் பயணம் ஏற்படக்கூடும். அரசாங்கத்தால் அனுகூலம் ஏற்படக்கூடும்.

நீங்கள் சனிக்கிழமைகளில் ஸ்ரீ ஆஞ்சநேயருக்கு வெண்ணெய் சார்த்தி வழிபட்டு வருவதன் மூலம் நலன்கள் பெருகும்.





















# யாருக்கு மாப்பிள்ளை யாரோ?

இன்று மாணவிகளிடையே நிறைய வித்தியாசங்கள். தடுமாற்றம் இல்லாத பேச்சு, நிதானமான பதில்கள், புரிந்து கொள்ளக்கூடிய மனப்பக்குவம், திட்டமிட்டு வாழக்கூடிய திறமைகள் பளிச்சிடுகின்றன. அவ்வகையில் இவர்கள் திருமண வாழ்வை எப்படி எதிர்நோக்குகிறார்கள். இவர்களின் கல்யாண கனவு என்னவாக இருக்கும்? சில கல்லூரி மாணவிகளைப் பிடித்துக் கேட்டோம் :

**என். ப்ரியா :** திருமணத்திற்கு ஜாதகப் பொருத்தம் பார்க்கும் பொழுது மெடிக்கல் ரிப்போர்ட் பார்க்க வேண்டும். காரணம், இன்று எய்ட்ஸ் எல்லா இடங்களிலும் அதிக அளவு பரவி இருக்கிறது. திருமணம் செய்து விட்டு கண்ணீர் விடுவதை விட முதலி லேயே உஷாராக இருப்பது நல்லதுதானே.

**ஈ. ரம்யா :** கணவரை கவனிப்பதை விட வேறு வேலை என்ன எனக்கு

# மூன்று குடியிருப்பு திட்டங்கள்...

## Madhuban

GRANDEUR IN SPACE

## தேனாக இனிக்கும் வாழ்க்கை



தேன் பொழியும் வனம். அதுவே 'மதுபன்' என்பதன் அர்த்தம்! கோவை புலியகுளத்தில் ரெட் ஃபீல்ட்ஸ் அருகே இனிமை நிரம்பிய வாழ்க்கை அனுபவத்தை மதுபன் அபார்ட்மெண்ட் உங்களுக்கு அளிக்கிறது.

**மதுபன் அளிக்கும் வசதிகளில் சில தேன்துளிகள்...**

- மொத்தம் 25 இரண்டு மற்றும் மூன்று பெட்ரூம் Flats
- ஆகாயம் பார்த்த திறந்த வெளி லாபி மற்றும் உள்வர, வெளிச் செல்ல தனித்தனி கேட்டுகள்
- 28 கார்கள் நிறுத்த கவர் செய்யப்பட்ட கார் பார்க்கிங் வசதி மற்றும் விருந்தினர் கார்கள் நிறுத்த தாராள இடவசதி
- நீச்சல்குளம் மற்றும் ஜிம்னாசியம்
- A/C Lounge மற்றும் குழந்தைகள் பூங்கா
- இண்டர்காம் வசதியுடன் 24 மணி நேர பாதுகாப்பு
- சென்ட்ரல் கேஸ் சப்ளை
- இரு தானியங்கி லிஃப்ட்டுகள் மற்றும் தயார் நிலை ஜெனரேட்டர் வசதி
- கார்ப்பரேஷன் வழங்கும் குடிநீர் மற்றும் சுத்திகரிக்கப்பட்ட போர்வெல் தண்ணீர் வசதி
- சோலார் வாட்டர் ஹீட்டர்
- அதிநவீன தீயணைப்பு பாதுகாப்பு வசதி
- தண்ணீர் வீணாவதைத் தவிர்க்கும் Zero Water Wastage Concept
- சிறந்த, தரமான கட்டுமானப் பொருட்கள்
- அழகிய லேண்ட்ஸ்கேப் வடிவமைப்பு



**COVAI**

PROPERTY CENTRE (INDIA) PRIVATE LIMITED

இத்திட்டங்களை நிர்மாணித்து வழங்குவோர் :

**Colonel A.Sridharan, VSM (Retd.),**

Mobile : 098943 17840

C-601, Pioneer Apartments,1075, Avinashi Road, Coimbatore - 641 018.
Ph : 91-422-2216867, 5572625. Fax : 91-422-2216867. Mobile : 098943-17841
www.covaiprop.com E-mail : covaiprop@vsnl.net

# ...இணையற்ற வசதிகள்

Gem

NIRMAALAYAM

# நல்லதோர் வாழ்வின் நந்தவனம்



ஜெம் நிர்மாலயம். நகரின் இதயத்தில் காந்திபுரத்தின் மிக அருகே கணபதியில் உருவாகி வரும் ஒருங்கிணைந்த காலனி குடியிருப்பு திட்டம். அருமையான வசதிகள், பசுமையான சூழல்... நிம்மதியான வாழ்க்கை உங்கள் விருப்பத்திற்கேற்ப !

**சிறப்பு அம்சங்கள்**

•மொத்தம் 145 வீடுகள் •இரு / மூன்று / நான்கு பெட்ரூம் வில்லாக்கள் (1687 முதல் 2965 ச.அடி வரை) •இரு / மூன்று பெட்ரூம் ஃபிளாட்டுகள் (1190 முதல் 1470 ச.அடி வரை) •வாஸ்து சாஸ்திர அடிப்படையிலான கட்டுமான திட்டம் •அத்திக்கடவு திட்ட குடிநீர் வசதி •சுத்திகரிக்கப்பட்ட போர்வெல் தண்ணீர் வசதி •ஒவ்வொரு வில்லாவிலும் சோலார் வாட்டர் ஹீட்டர் •Best of specifications

• காம்பவுண்டு சுவர் மற்றும் பாதுகாப்பு மின் விளக்கு வசதி •கழிவு நீர் வெளியேற்றம் மற்றும் சுத்திகரிப்பு வசதி •மழைநீர் சேமிப்பு வசதி •தார் ரோடுகள் •தெரு விளக்குகள் மற்றும் மரங்களுடன் கூடிய நடைபாதைகள் •12,500 சதுர அடி பரப்பளவில் கிளப் ஹவுஸ், ஜிம்னாசியம் (ஹெல்த் கிளப்) •குழந்தைகளுக்கான பேஸ்கட்பால், வாலிபால் கோர்ட்டுகள் மற்றும் குழந்தைகள் பூங்கா• Flood-lit Tennis Court with artificial turf •முழு காலனிக்கும் லேண்ட்ஸ்கேப் வடிவமைப்பு •இண்டர்காம் வசதியுடன் 24 மணி நேர பாதுகாப்பு • Shopping Complex

எமது இதர திட்டம்
**சௌந்தர்யம்**
சிறுவாணி ரோடு, கோவை
(For people above 50 years of age)
இன்னும் ஒரு சில வீடுகளே உள்ளன

**Consulting Architect for all projects :**
Ms. Mini M. Fowler

**Our Chennai Representative :**
Ms. Gita Ramesh, Ph : 044 - 24463063

**முன்னாள் ராணுவ வீரரின் சேவை நிறுவனம்**

Manipal/CPC/05

### மணமகன் தேவை

**ம**ணமகன் தேவை, மணமகள் தேவை என்ற விளம்பரங்கள், பக்கம் பக்கமாக, அநேகமாக, இன்று எல்லாப் பத்திரிகைகளிலும் வருகின்றன. மணமகனை அவர்களாகவே தேடிக் கொள்ளும் சுதந்திரமும், பெண்களுக்கு இன்று கிடைத்துள்ளது. ஆனால், முதன் முதலில் மணமகன் தேவை என்று விளம்பரம் செய்த பெண் அனுபவித்த வேதனைகள் பற்றித் தெரிந்து கொண்டால் நமக்கும் வேதனைகள் ஏற்படும்.

'எல்லா வகையிலும் பொருத்தமான ஒரு மணமகன் ⇩



இருக்கப் போகிறது? திருமணத்தில் என் பங்கு 100 சதவீதம் இருக்கும்!

**டி. துர்க்கா :** எனக்கு அமையும் கணவர் என்னை விட அழகில் குறைந்தவராக இருக்க வேண்டும். காரணம், அழகாக இருந்தால் நிறையப் பெண்கள் சைட் அடிப்பார்கள் இல்லையா?

**கங்கா :** எனக்கு பெற்றோர்கள் பார்த்துச் செய்யும் திருமணம்தான் பிடிக்கும். ஆணுக்கு அழகு தேவையில்லை. எந்த கெட்டப் பழக்கமும் இருக்கக் கூடாது.

குறிப்பாக மனைவி மீது சந்தேகப் படக் கூடாது. எந்த அளவிற்கு உரிமை கொடுக்க வேண்டுமோ அந்த அளவிற்கு உரிமையைக் கொடுக்க வேண்டும்.

**எஸ். சௌமியா :** எனக்கு வரும் கணவருக்குக் கோபம் இருக்கக் கூடாது. நிதானம், பொறுமை, அமைதி உள்ளவராக இருக்க வேண்டும்.

கல்யாணத்திற்குப் பிறகு காதலித்தால் வாழ்க்கை வளமாகும். அதற்கு முன் நிச்சயம் நம்ப முடியாது.

**நர்மதா :** முதலில் கணவராக வருபவருக்கு தான் என்ற ஈகோ இருக்கக் கூடாது. பொறாமை இருக்கக் கூடாது. மனதை புரிந்து கொள்ளக்கூடிய மனப்பக்குவம் இருக்க வேண்டும்.

படம், சந்திப்பு :
**எஸ். ஷெர்லி பிரமிளா**



⇧ தேவை' என்று ஹெலன் மேரிசன் என்ற இளம்பெண் கி.பி. 1727ல், மான்செஸ்டர் வீக்லி' என்ற ஆங்கிலப் பத்திரிகையில் விளம்பரம் கொடுத்தாள். அந்தக் காலத்தில் அது அதிசயமான செயல். உடனே மக்கள் மத்தியில் பரபரப்பும், எதிர்ப்பும் கிளம்பின. மக்களின் அபிப்ராயப்படி, அரசினால் அவள் கைது செய்யப்பட்டாள். அத்தோடு நின்றார்களா! பிறகு மனநோய் மருத்துவமனைக்கும் அந்தப் பெண்ணை அனுப்பி விட்டார்கள். எவ்வளவு பெரிய அநீதி அவளுக்கு இழைக்கப்பட்டிருக்கிறது. கொடுமை. கொடுமை.

ஆர். ராஜலட்சுமி.

# 'கலகல'வென..

**கை** நிறைய

வளையல் அடுக்க ஆசை. நிறம் நிறமாய் வளையல் அணிய ஆசை. குலுங்கிக் குலுங்கிச் சிரிக்க ஆசை. இப்படிப் பாடத் தோன்றியது அந்த வளையல் கடையில் நுழைந்தவுடன். உங்கள் அத்தனை ஆசைகளும், கனவுகளும் இங்கு மெய்ப்படும் என்று சொல்லாமல் சொல்லி வரவேற்கிறது 'ட்ரீம்ஸ் கம் ட்ரூ'.

அது ஒரு வளையல் கடல். பெண்கள் நம்பிக்கையாய் வந்து செல்ல ஒரு கடை! ஆண்களுக்கு தடா. விதிவிலக்கு கணவன், மனைவி. ஆகவே தள்ளு முள்ளு இல்லை. ஒட்டல், உரசல் இல்லை.

ஆனால் வளையல்களை அலசிப் பார்த்து வாங்கலாம். எதை எடுப்பது, எதை விடுவது? 20 ரூபாயிலிருந்து 2000 ரூபாய் வரை விதவித டிசைன்கள். கண்ணாடி வளையல்களா, கல்லில் வேணுமா, முத்தில் வேணுமா, பெயிண்ட் செய்தவையா இல்லை மெட்டலே போதுமா?

ஹைதராபாத் ஸ்பெஷல் மண் வளையல்களும், குஜராத்தி ஸ்பெஷல் பிளாஸ்டிக் வளையல்களும் ஆளை கட்டிப் போடுகிறது.

அசல் தங்கம்தான். இந்த வளையல்களைப் பார்த்தால் தங்கத்துக்குப் பக்கமே தலை வைத்து படுக்க மாட்டீர்கள். தினப்படிக்கு ஏற்றவை. காரண்டியும் கையோடு தருகிறார்கள்.

கண்ணாடி வளையல்கள் உடைந்தால் அபசகுனம் என்று சொல்வார்கள். ஆனால் எளிதில் உடையாத தரமான கண்ணாடி வளையல்களை நாங்கள் தருகிறோம் என்கிறார் கடலின் உரிமையாளர் ராஷ்மி தாவே. வளையல்களை அணிந்து கழற்றிய பிறகு அவற்றை மெல்லிய பிளாஸ்டிக் கவரில் சுற்றி பெட்டியில் அடுக்கி வைத்தால் நீண்ட நாட்கள் ஜொலிப்பு குறையாமல் இருக்குமாம்.

சரி, சரி வளையல் கடைக்குள் நுழைந்தால் லேசில் வெளிவர முடியுமா?

உடையாத மெட்டல் வளையல் ஒரு பக்கம் என்னைக் கொஞ்சம் பாரேன் என்று முத்தாகவும், கல்லாகவும், நூலாகவும் கலகலவென்று சிரிக்கிறது!

வெள்ளி ஒரு பக்கம் அழகான வேலைப்பாடுடன் அசத்தலான ஜொலிப்பில் மினுமினுக்கிறது.

அப்பப்பா... அந்த சுனாமி கடலிலிருந்து தப்பித்து ஒருவழியாக வெளியில் வந்தோம்.

- **சாந்தி ரங்கராஜன்.**

படங்கள் : **ஸ்ரீஹரி**

# மங்கையர் மலர்

இணைந்து வழங்கிய

# ஸ்ரீ டிராவல்ஸ்

## குளுகுளு போட்டி முடிவுகள்



'குளுகுளு' போட்டி என்று அறிவித்ததுமே 'மளமள'வென்று மங்கையர் அனுப்பிய போட்டித் தாள்கள் எங்களது அலுவலக அறையை நிரப்பி விட்டது. இந்த வெள்ளத்தினூடே மூழ்கி ஆறு முத்துக்களைத் தேர்ந்தெடுக்கும்படி எங்களது நிர்வாக இயக்குனர் திரு. ராஜேந்திரன் அவர்களைக் கேட்டுக் கொண்டோம். அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அதிர்ஷ்டசாலி அறுவருக்கும் எங்களது உளம் நிறைந்த பாராட்டுக்கள்! சுற்றுலாவில் குளிர வாழ்த்துக்கள்.

போட்டியில் பங்கேற்ற ஆயிரக் கணக்கான வாசகிகளுக்கு எங்களது மனம் நிறைந்த நன்றி.

1. ரேவதி ஜெகன்னாதன், புது தில்லி - 19.
2. டாக்டர் ரேகா ஸ்ரீராம ரெட்டி, பெங்களூர் - 11.
3. பி. ஸ்ரீமதி பூங்குன்றன், கோயம்புத்தூர் - 37.
4. என். சந்திரா நரசிம்மலூ சென்னை - 12.
5. கே. வசந்தா சுவாமிநாதன், தஞ்சாவூர் - 1.
6. சாந்தி ரமணன், நீலகிரி - 30.

தேர்ந்தெடுக்கப்பட்ட தம்பதியருக்கு சுற்றுலா பயண விவரங்கள் அலுவலகத்திலிருந்து கடிதம் மூலம் தெரிவிக்கப்படும்.



**மங்கையர் மலர் ஏப்ரல் மாத 'குளுகுளு' போட்டி**

சரியான விடைகளை ✓ செய்து அனுப்பவும்.

1. ஹிமாச்சல் பிரதேசத்தில் உள்ள மலைவாசஸ்தலம்?
அ. பச்மார்ஹி ☐ ஆ. குலுமணாலி ☑
2. குலுமணாலியில் விளையாடப்படும் ஒரு முக்கிய விளையாட்டு?
அ. பனிச்சறுக்கு ☑ ஆ. நீச்சல் ☐
3. தமிழ்நாட்டில் மலைகளின் ராணி? அ. ஊட்டி ☑ ஆ. கொடைக்கானல் ☐
4. ஊட்டியில் உள்ள சரணாலயம்? - அ. முதுமலை ☑ ஆ. டாப்ஸ்லிப் ☐
5. ஏழைகளின் ஊட்டி? அ. ஏலகிரி ☐ ஆ. ஏற்காடு ☑
6. ஏற்காடு எந்த மலையில் உள்ளது?
அ. சேர்வராயன் ☑ ஆ. பழனிமலை ☐
7. கூர்க் என்றதும் நினைவுக்கு வருவது? அ. தேயிலை ☐ ஆ. காபி ☑
8. கொடைக்கானலில் பூக்கும் அரிய மலர்? அ. குறிஞ்சி ☑ ஆ. முசும்பி ☐
9. நைனிடாலில் உள்ள ஏரி? அ. நைனி ஏரி ☑ ஆ. டால் ஏரி ☐
10. பனிப்பாலைவனம் எது? அ. லடாக் ☑ ஆ. மவுண்ட் அபு ☐
11. லடாக்கில் விளையாடப்படும் இரண்டு முக்கிய விளையாட்டுகள் என்ன?
அ. அம்பு எய்தல், போலோ ☑ ஆ. படகு, நீச்சல் ☐
12. அனந்தகிரி மலை எந்த மாநிலத்தில் உள்ளது?
அ. குஜராத் ☐ ஆ. ஆந்திரா ☑
13. தேக்கடியில் அதிகமாகக் காணப்படும் பிராணி?
அ. யானை ☑ ஆ. காண்டாமிருகம் ☐
14. மலைவாசஸ்தலங்களுக்குச் செல்லும் போது அணிய வேண்டிய ஆடை?
அ. பருத்தி ☐ ஆ. கம்பளி ☑
15. மூணாறில் விளையும் முக்கிய பயிர்? அ. காபி ☐ ஆ. தேயிலை ☑

# ‘பைபாஸ்’ அறுவை சிகிச்சைக்கு இனி ‘பை-பை’ தான்!

## Oxymed Hospital

**Chennai's first non-surgical treatment center for heart attack problems.**

மாரடைப்பு, நெஞ்சு வலி போன்ற இதய நோய்களுக்கு ஆஞ்சியோப்ளாஸ்டியும் பைபாஸ் சர்ஜரியும் மட்டுமே தீர்வுகள் என்று நினைக்கிறீர்களா? ஓஸோன் மற்றும் கிலேஷன் சிகிச்சைகள் மூலம் நிவாரணம் பெறுவீர்! இதயம் சம்பந்தமான நோய்களுக்கு இத்தகைய சிகிச்சைகள் குணமளிப்பது நிரூபணம் செய்யப்பட்டு, உலகில் 24 நாடுகளில் பின்பற்றப் படுகின்றன. ஜெர்மனி, அமெரிக்கா, இங்கிலாந்து, ரஷ்யா, ஃபிரான்ஸ், கியூபா, மலேசியா, ஜப்பான் என்றுபல நாடுகளில் பின்பற்றப்படுகிறது. இன்னும் சொல்லப் போனால், 12 கோடிக்கும் மேற்பட்ட ஜெர்மனியர்கள் தங்களுக்கு ஏற்படக் கூடிய இதய நோய்கள், மூட்டு நோய்கள் மற்றும் புற்றுநோய்க்கும் இம்முறைகளையே நம்புகின்றனர். ஜெர்மனியில் மட்டுமே இவ்வகை மருத்துவ சிகிச்சைகள் அளிக்க 7000க்கும் மேற்பட்ட புகழ் பெற்ற மருத்துவர்கள் இருக்கிறார்கள். உங்களுக்கும் இந்த சிகிச்சை முறைகள் பற்றி அறிய ஆவலா? உடனே எங்களைத் தொடர்பு கொள்ளுங்களேன். அறுவை சிகிச்சையில்லை, வலி இல்லை, நீண்ட நாள் மருந்துகள் இல்லை. ஆனால் உங்கள் பிரச்சினைகளுக்கு தீர்வுகள் மட்டும் கட்டாயம் உண்டு!



**Timing: Week days 9 a.m. to 6 p.m. Sunday 10 a.m. to 5 p.m.** *(enquiries only)*

***Anna Nagar:*** *2180, L-Block, 12th Main Road (Behind Nilgiris), Chennai - 600 040.*
***Ph.: 26201147 / 30910237***

***Adyar:*** *5, First Main Road, Kasthurba Nagar, Chennai - 600 020.* ***Ph.: 24452753***



**OXYMED HOSPITAL**
PRIVATE LIMITED
CLOSE TO YOUR HEART



# மதுரையில்

'தோரணப் பந்தலிலே; பாண்டியன் தோகை கயல் விழியின் கல்யாண வைபவமாம்!' என்று பாரில் புகழ் பெற்ற தெய்வீகத் திருமணம் நடைபெற்ற இடம் மதுரை. ஆகவே நமது மணப் பந்தல் விழாவும் மதுரையில் கோலாகலமாகக் கொண்டாடப்படுவது பொருத்தமே!

மதுரை வாசகியரே! உங்கள் ஊரில் வெள்ளி விழா கொண்டாட்டம் அமர்க்களமாக அரங்கேறப் போகிறது. ஒரு கல்யாணம் எப்படி நடக்குமோ அந்த அளவு கலகலப்புக்குக் குறைவின்றி இருக்கும். விதவித ஸ்டால்கள் அமைத்து, அறுசுவை உணவு படைத்து அன்பு வட்டத்தில் உங்களை இணைத்து மகிழப் போகிறோம் வாருங்கள்!

அனைவருக்கும் சொல்லி மகிழுங்கள். ஆனந்தமாய் வந்து கலந்து கொள்ளுங் கள். போட்டியில் பங்குபெறுங்கள், பரிசினைத் தட்டிச் செல்லுங்கள். அக்கம் பக்கம் அனைவரையும் அழைத்து வாருங்கள்!

**நிகழ்ச்சியில்...**

* மதுரை மாவட்ட மகளிருக்கு மட்டுமே முன்னுரிமை.
* சிறு குழந்தைகள், 12 வயதுக்குட்பட்ட சிறுவர்கள், கண்டிப்பாக அரங்கிற்குள் அனுமதிக்கப்பட மாட்டார்கள்.
* நிகழ்ச்சியில் மற்றும் போட்டிகளில் வாசகிகள் அவர்களது சொந்த செலவிலேயே



நாள் : **30.4.2005**

பதிவு நேரம் : **காலை 8 மணி முதல் 9 மணி வரை**

இடம் : **ராஜா முத்தையா மன்றம்,**

**டாக்டர் அம்பேத்கார் ரோடு, மதுரை - 625 020.**

மதுரையில் 30-ம் தேதி காலை 9.30 மணிக்குத் தொடங்கும் நிகழ்ச்சிக்கு இந்தக் கூப்பனுக்கு இருவர் அனுமதிக்கப்படுவர். (ஆர்.)

**மதுரை - மணப்பந்தல் விழா கூப்பன்**



மங்கையர் சத்தி
மகத்தான சக்தி

**மங்கையர் மலர் வெள்ளிவிழா**

# மணப்பந்தல் விழா!

ஏப்ரல்-30

வந்து கலந்து கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறோம்.

* இங்கு கொடுக்கப்பட்டிருக்கும் விழா கூப்பனுக்கு இருவர் அனுமதிக்கப்படுவர்.

* போட்டி முடிவுகள் நிகழ்ச்சியின் இறுதியில்தான் அறிவிக்கப்படும், ஆகவே, நிகழ்ச்சி முடியும் வரை ஒவ்வொருவரும் அரங்கினுள் கட்டாயம் இருக்க வேண்டும்.

**போட்டி - I**

## பட்டிமன்றம் : ஜாதகமா/பாதகமா?

கல்யாணத்திற்காகப் பார்க்கப்படும் ஜாதகம் பற்றிய ஓர் அலசல். எந்தத் தலைப்பில் நீங்கள் வாதிடப் போகிறீர்கள்?

• இந்தப் போட்டியில் கலந்து கொள்ள வயது தடையில்லை.

• நீங்கள் நேர்ந்தெடுக்கும் தலைப்பில் ஐந்து நிமிடம் பேச உங்களைத் தயார்ப் படுத்திக் கொள்ளுங்கள்.

• கொடுக்கப்பட்டிருக்கும் போட்டி- I கூப்பனில் பெயர், விலாசம் எழுதி கூப் பனை மங்கையர் மலர், 47, ஜவாஹர் லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை -32 முகவரிக்கு அனுப்பவும்.

• முதல் நாள் நடைபெறும் தேர்வு நிகழ்ச்சிக்கு தங்களை அழைப்போம். (இதற்குண்டான இடம், நேரம், கடிதம் மூலம் பின்பு தெரிவிக்கப்படும்).

• ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

**போட்டி - II**

## இந்திய மணமகள் !

இது முழுக்க முழுக்க மணமகள் அலங்காரம். ஆம் விழாவன்று மேடையில் நீங்கள் செய்யப் போகிறீர்கள்! எந்த மணமகளுக்கு ஜடை, மேக்-அப், நகை, நடை, உடை, பாவனை எல்லாம் கச்சிதமாக இருக் கிறதோ அவளே இந்திய மணமகளாக மகுடம் சூடப் போகிறாள். இதற்கு நீங்கள் செய்ய வேண்டியவை :

• மதுரை மாவட்ட வாசகிகள், குழு வாக ஐந்து நபர்கள் இதில் கலந்து கொள்ள வேண்டும்.

• அதில் மணப்பெண்ணாக இருப்ப வருக்கு வயது 18-லிருந்து 30க்குள் இருக்க வேண்டும். மற்ற நான்கு பேருக்கும் வயது தடையில்லை.

• கொடுக்கப்பட்டிருக்கும் போட்டி -II கூப்பனில் பெயர், விலாசம் எழுதி கூப் பனை மங்கையர் மலர், 47, ஜவாஹர் லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை -32 முகவரிக்கு அனுப்பவும்.

• முதல் நாள் நடைபெறும் தேர்வு நிகழ்ச்சிக்கு தங்களை அழைப்போம். (இதற்குண்டான இடம், நேரம், கடிதம் மூலம் பின்பு தெரிவிக்கப்படும்).



## போட்டி - I கூப்பன்

பட்டிமன்றம் : ஜாதகமா ☐ பாதகமா? ☐ (✓ செய்யவும்)

பெயர் : ..........

வயது : ..........

முகவரி : ..........

..........

..........

தொலைபேசி எண் : ஈமெயில் :

**கூப்பன் அனுப்ப கடைசி தேதி : 15.4.2005**

• உங்கள் குழுவின் மணப்பெண் அலங்காரம் எந்த இந்திய மாநிலத்தைச் சார்ந்ததாகவும் இருக்கலாம். மணப்பெண் அலங்காரப் பொருட்கள் அத்தனையும் அந்தக் 'குழு'வின் பொறுப்பாகும்.

• விழாவன்று வீட்டிலிருந்தே அலங்காரத்தைச் செய்து கொண்டு வரக் கூடாது. அப்படிச் செய்து வந்தால் நடுவர்களால் மதிப்பெண் குறைக்கப்படும்.

• விழா மேடையில் இந்தப் போட்டிக்கு நேரம் அறிவிக்கப்படும். (குறைந்தது அரை மணி நேரம்). அந்த நேரத்திற்குள் உங்கள் மணப்பெண்ணை தயார்ப்படுத்தி (இதற்கு தனியாக அறை ஒதுக்கித் தரப் படும்). மேடையில் ஏற்ற வேண்டும்.

• மேடையில் மணப்பெண்ணுடன் அந்தந்த உறுப்பினர்களும் நடுவர்களால் கணிக்கப்படுவார்கள். குழு வேலைத் திறன்/நேர்த்தி/புதுமை/மணப்பெண்ணுக்கு நீங்கள் தேர்ந்தெடுத்திருக்கும் மாநிலத்தின் பாரம்பரிய பெருமைகள் இவை அனைத்தும் கருத்தில் கொள்ளப்படும்.

• பட்டிமன்றம் போட்டியில் கலந்து கொள்பவர்களுக்கு இந்தப் போட்டிக்கு அனுமதியில்லை.

10. ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

**பார்வையாளர்களுக்கு : (கல்யாண) கலாட்டா போட்டிகள் அரங்கில் அறிவிக்கப்படும்.**

## போட்டி - II கூப்பன்

இந்திய மணமகள் மாநிலப் பெயர் ..........

பெயர் : வயது :

1. ..........
2. ..........
3. ..........
4. ..........
5. ..........

முகவரி : ..........

..........

..........

..........

..........

தொலைபேசி எண் : ஈ-மெயில் :

**கூப்பன் அனுப்ப கடைசி தேதி : 15.4.2005**






ஒரு பெண் நல்ல திறமைசாலியாக இருப்பாள். படிப்புக்கும் குறைவிருக்காது. நல்லதொரு வேலை அல்லது தொழிலில் ஆர்வத்துடன் நுழைந்து அழுத்தமாக தன் முத்திரையைப் பதிக்கத் தொடங்கியிருப்பாள். இந்த நிலையில் அவள் வாழ்வின் அடுத்த கட்டம் துவங்கும். அதாவது திருமணம்.

''பொண்ணு வேலைக்குப் போகணும்னு அவசியமில்லே'' என்பார்கள் புகுந்த வீட்டினர். அல்லது கணவனுக்கும் இவளுக்கும் வெவ்வேறு நகரங்களில் வேலை என்றால்... என்ன செய்ய, இவள் வேலையைத் தியாகம் செய்யத்தான் வேண்டியிருக்கும்.

ஆக, திருமணம் என்பது தங்கள் துறையில் பெரும் ஈடுபாடு கொண்டிருக்கும் பெண்களுக்கு வலியைத் தரும் விஷயமாகவே பலரது வாழ்வில் இருந்து வருகிறது.

ஆனால் சிலர் மட்டும் திருமணத்துக்குப் பிறகும் தான் ஆர்வம் கொண்ட துறையில் முன்பு போலவே (அல்லது முன்பை விட மேலும் தீவிரமாக) ஈடுபட முடிகிறது. எப்படி இதை சாதித்தார்கள்? அப்படிப்பட்ட சிலரின் அனுபவங்கள் இங்கே -

“நடனம்தான் எங்களைச் சந்திக்க வைத்தது. வாழ்வில் இணைத்து வைத்தது'' என்றார்கள் சாந்தா - தனஞ்ஜயன் தம்பதி. நடன உலகில் மின்னும் தாரகைகளாக வலம்வரும் இவ்விருவரும் திருமண வாழ்விலும் மிகச் சிறந்த தம்பதிகளாக வாழ்ந்து வருகின்றனர்.

''நாங்கள் இருவருமே கேரளாவைச் சேர்ந்தவர்கள். எங்களுடைய குடும்பம்,



வறுமையானது என்றுதான் சொல்ல வேண்டும். இந்தச் சூழலில் என்னால் சாந்தாவை கண்கலங்காமல் வைத்துக் காப்பாற்ற முடியுமா என்று சாந்தாவின் அப்பா கேட்டு உறுதிமொழி வாங்கிக் கொண்டார். என் பெற்றோரும் தடை சொல்லவில்லை. கல்யாணம் நடந்தது'' என்று தன் மலரும் நினைவுகளைப் பகிர்ந்து கொள்கிறார் தனஞ்ஜயன்.

சரி, 38 வருடங்களுக்கு முன் பெண்கள் மேடை

• சாந்தா - தனஞ்ஜயன் தம்பதி



# திருமணம் என்பது முற்றுப்புள்ளி அல்ல, கமாதான்!



◆ Iyer, Vadamal, Naitrava Kashyapa, Moolam 4th, Sept'74 born, 150cm, well settled Executive in Delhi, 35k, Ready to relocate requires groom below 35 years professionally qualified. Subsects no bar. Contact : 011-2786 8977 Box No. 28964

◆ Telugu Brahmin, Veginadu, Samanasa Gothram, Aayilyam, 32 years, 173 cm, M.Com., ACS (Inter) very fair, Tall, beautiful girl seeks only professionals, India or Abroad. Age not more than 37 from decent family. Subsects no bar. Contact : 044-22 322 089. Box No. 28965

◆ வெள்ளாள செட்டியார், உத்திராடம் 2ம் பாதம், 25, 5.5', B.D.S. டாக்டர், நல்ல சிவப்பு, பிரைவேட் டென்டல் கிளினிக், பெண்ணிற்கு டாக்டர்/என்ஜினியர் போன்று படித்த மணமகன் தேவை. இந்துவில் அனைத்துப் பிரிவினரும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண் : 28966

◆ ஐயர், பிரஹசரணம், பாரத்வாஜ கோத்திரம், மகம், 36 வயது, 163 செ.மீ., பி.காம்., அழகும், நல்ல சிவந்த நிறமும், நற்குணமும், பண்பாடும் நிறைந்த ஒரே பெண்ணிற்கு, செவ்வாய் தோஷம் உள்ள, நன்கு படித்த, வருமானமுள்ள மணமகன் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெற்றோர்களையும் அவர்கள் பிசினெஸ்ஸையும் பார்த்துக் கொள்ள வேண்டும். பெட்டி எண் : 28967

◆ Arya Vaisya, Ashlesha, Kataka, 34, M.Sc., Entomology, doing Ph.D., in Israel, Completing in April 2005, early marriage, seeks suitable bridegroom professionally qualified well employed, same caste, India/Abroad. Contact : 04177-236771. Box No. 28968

◆ Iyer, Vadamal, Athreya, Aswathi, 26, 157 cm, B.Com., B.A.L. Rs. 12,000/- Govt employed girl seeks suitable groom. Box No. 28969

◆ Iyer, Brahacharanam, Haritham, Moolam-3, 1981, 165cm, Suddha Jadagam, ACA, employed MNC Bangalore, seeks professionally qualified, well settled boy. Rukmani - 022-5629 7555. Box No. 28970

◆ Tamil Iyer, Vadamal, Krithigai, 19 years, 5.6', B.A. (Eng.) Very fair, god fearing, affluent family seeks well settled, well educated respectable family with clean habits age upto 25 years within India preferred. Mobile : 94443 67 421. Box No. 28971

◆ ஐயர், பிரஹசரணம், ஸ்ரீவத்சம், மாநிறம், 27, 5', பரணி, 4ம்பாதம், 7ல் செவ்வாய், நீசம், வேலைக்குச் செல்ல விருப்பமில்லை. Professionally qualified மற்றும் மத்திய அரசுப் பணி, போன் : 04179-221383. பெட்டி எண் : 28972

◆ Iyer, Vadama, Srivatsam, Rohini, Feb. 1978, 163cm, B.E., MNC Bangalore, seeks professionally qualified well settled with clean habits boy. Contact with horoscope. Bio-data. Phone : 0431-2471557 Box No. 28973

◆ ஐயர், வடமாள், பாரத்வாஜம், மூலம்-3, 5.3', பிறந்த தேதி 18.6.81 பி.பி.ஏ. படித்த அழகான பெண்ணிற்கு நன்கு படித்த வேலையுள்ள மணமகன் தேவை. ஃபோன்: 2232 9395 பெட்டி எண் : 28974

◆ Iyer, Vadama, Srivatsa, & Mother Saiva Pillai, Pure Veg. Alliance sought from interested Brahmins for their daughter aged 25/5.6', fair, slim, MS (IT), Software Engineer. MNC Star Anusham, Box No. 28975

◆ Thanjavur Vadamal, Bharadhwajam, 24/153 very fair, Post-graduate girl Software Engineer MNC, Bangalore Fit for Married Life cannot beget children seeks qualified well settled Broadminded groom agreeable for Adoption. Please respond Box No. 28976

◆ தஞ்சாவூர் சைவப் பிள்ளை, பூரம், பி.எஸ்ஸி., 26/160, சிவப்பு, குடும்பப்பாங்கான பெண்ணிற்கு சுத்த சைவப் பிள்ளை இனத்தாரைச் சேர்ந்த உத்தியோகத்தில் உள்ள மணமகன் தேவை. பெட்டி எண் : 28977

◆ Iyer, Vadama, Srivatsa, Sadayam, 25, 5.3', B.Com. PGDBF (M.Com). CA Inter-I, Computer Literate seeks BE/MCA/CA/MBA professionals, well employed groom. Box No. 28978

◆ Iyer, Tanjore Vadamal, Gowndinyam, Anusham, DOB:30.11.1978, M.Sc., Officer, ICICI Chennai, T. Nagar, seeks well settled Boy. Ph : 28144183 Box No. 28979

◆ Iyer, Brahacharanam, Athreya Mrigaseersham-1, 10.07.1980, 5.1', MA, PGDCA, Medium complexion girl seeks well employed graduate boys upto 30 years. Ph No. 22470780 Box No. 28980

◆ ஐயர், வாத்திமாள், தாரகாயணம் கோத்திரம், புனர்பூசம் 1ம் பாதம், 14.06.1980, 24, 5.1', B.Com., MFM, சென்னையில் வேலையிலுள்ள பட்டதாரி பெண்ணிற்கு நல்ல வேலையிலுள்ள பட்டதாரி மணமகன் தேவை. உட்பிரிவு சம்மதம். Phone : 044-24747156 (Before 7.30 A.M. After 7.30 P.M.) Box No. 28981

◆ Vadama Kousika Bharani-3, 23 years, 167cm, MBA, employed girl seeks well qualified/well employed Vadama Groom. Age group 26-28 years. Contact : R. Sekar, Ph : 040-2724 5105. Box No. 28982

◆ ஐயர், வயது 56, குழந்தை இல்லாத விதவைப் பெண்ணுக்கு நல்ல வருமானம் உள்ள பிராமண வரன் தேவை. ஃபோன்: 0431-2710325 பெட்டி எண்: 28983

◆ செங்குந்தர் திருவோணம்-4, லக்னத்தில் கேது. 29/5.4', பி.காம்., கம்ப்யூட்டர்



## திருமண மலர் விளம்பரங்கள் அனுப்பக் கடைசி தேதி

கடைசி நேர நெரிசல்களைத் தவிர்ப்பதற்காகவும், திருமண மலர் விளம்பரதாரர்களின் வசதிக்காகவும், மே மாத இதழில் திருமண மலர் விளம்பரம் கொடுக்க விரும்புபவர்கள், விளம்பரத்தை அதற்குண்டான கட்டணத்துடன் மங்கையர் மலர் அலுவலகத்திற்கு **10.04.2005ம்** தேதிக்குள் வந்து சேரும்படி அனுப்புமாறு கேட்டுக் கொள்கிறோம்.

சாஃப்ட்வேர் தனியார் பணி மாநிறமான, திருமணமாகி மூன்றே மாதத்தில் சட்டப்படி விவாகரத்தான பெண்ணுக்கு தகுந்த மணமகன் தேவை. இந்துவில் அனைத்துப் பிரிவினர்களும் விண்ணப்பிக்கலாம். P.G. Balasubramanian, 21, R.K. Mutt Road, Opp. P.S. High School, Mylapore, Chennai - 600 004. Ph : 2495 7129.

◆ Iyer, Ashtasahasram, Sounaka Gothram, Ashwini, 23 years, 5.03', M.Com., Employed Private seeks broad-minded Non-Athreya Groom. Girl's Mother Divorcee. Subsect no bar. Contact : Post Box No. 2405(RS), Coimbatore - 641 009.

◆ Iyer, Brahacharanam, Gowthama Krithika, Rishaba 32/165 B.Com., ICWA SAP Consultant Mumbai seeks suitably qualified Boy with clean habits. Send Horoscope 12, Sri Kanchi, Cheddanagar, Chembur, Mumbai - 89. Ph : 022-25286924.

◆ தகப்பனார் ஐயர், தாயார் நம்பூதிரி ஐயர், 11.03.1982, ஹஸ்தம், கன்னி ராசி, பாரத்வாஜ கோத்திரம், பிரஹசரணம், B.Sc., GNIIT (MBA), 159 cms, Software Developer, Chennai, குடும்பப்பாங்கான பெண்ணிற்கு நல்ல வேலையிலுள்ள, 29 வயதிற்குட்பட்ட ஐயர் மணமகன் தேவை. உள்நாடு/வெளிநாடு சம்மதம். K. Venkatraman, No. 4, Patel Street, A/20, Subham Flats, West Mambalam, Chennai - 600 033. Ph : (044)-24742668 காலை 8.00 மணிக்கு முன்பும், மாலை 6.00 மணிக்கு பின்பும் தொடர்பு கொள்ளவும்.

◆ Iyer, Vadamal, Kausikam, Revathy, 25/5', B.Sc., MCA seeks professionally qualified, well settled Vadamal, Brahacharanam groom. S. Balasubramanian, Lakshmi Kadaksham, Brindavan Street, Madipakkam, Chennai - 600 091.

◆ Iyer, Koundinya, Brahacharanam, Punarpoosam, Mithunam, 28/150, (M.Sc.,) Employed, Mumbai seeks well employed Boy with clean habits send HBP V.J. Balasubramanian, 37/3, Garodia Nagar, Ghatkopar (East), Mumbai - 400 077. email:vjb_64@hotmail.com

◆ Iyer, Athreya, Karthigai, 27.7.70, non-graduate, legal divorcee without encumbrance, seeks well-employed, same category/any other without encumbrance/liabilities. Send HBP Meenakshi Iyer, B5/003 Rutu Enclave, GB Road, Thane West - 400 601. Ph : 98205-87026. email: meenariyer@yahoo.com

◆ ஐயர், அஷ்டசஹஸ்ரம், ஸ்ரீவத்ஸம், பி.எஸ்ஸி., எம்.பி.ஏ., 25, 5.4', உத்திரம், பி.ஈ., எம்.சி.ஏ., எம்.பி.ஏ. படித்த நல்ல வேலையிலுள்ள வரன் தேவை. உட்பிரிவு சம்மதம். அருணாசலம், 11/ஏ, அண்ணா தெரு,. சின்ன சங்கரன்பாளையம், வேலூர் - 632 001. 0416-222 1919, 2268386.

◆ சீர்கருணீகர், சைவம், திருவோணம், 26/DECE, BCA தனியார் ரூ. 4000/- பெண்ணுக்கு அரசாங்க/தனியார் நிரந்தர வேலையிலுள்ள வரன் தேவை. ஏ.வி. மார்கபந்து, மனை 28, க.எண் 2/193. ஸ்ரீ பாலாஜி நகர், முடிச்சூர், சென்னை - 600 048. ஃபோன்: 22760604.

◆ செங்குந்தர், பூராடம்-3, 27/5.5', M.C.A. B.Com., GNIIT, SCJP தனியார் பணி, மாநிறமான பெண்ணுக்கு தகுந்த படிப்பு நல்ல வேலையிலுள்ள மணமகன் தேவை. P.G. Balasubramanian, 21, R.K. Mutt Road, Opp. P.S. High School, Mylapore, Chennai - 600 004. Ph: 24957129

◆ Vadakalai, Kowsigam, Revathy, Oct. 1978, 5.4', M.Com., M.Phil., fair, Process Administrator MNC, Chennai seeks professionally qualified & well employed groom Chennai age group 28 to 31. Contact : P. S. Rajagopalan, 15, Dass Avenue, Baby Nagar Extension, Velacherry, Chennai - 600 042. Phone : 22432559.

◆ Iyer, Bharatwajam, MNC, Aswini, 23.9.1975, 5.3', seeks well employed Boys in India or Abroad. S. Kailasanathan, 5, Rohini Shreyas, 14, Rajaji Street, Renga Nagar, Srirangam, Trichy - 620 006. Ph : 0431-2433299, 243558.

புடவை எடுத்துச் சொல்லும் இந்திய பண்பாட்டை
உலகம் எங்கும் செல்லும் சாரதாஸ் பட்டாடை




45, என்.எஸ்.பி. ரோடு, திருச்சி - 2. போன் : 2702077
தன்பில்டிங், 827, அண்ணாசாலை, சென்னை - 2. போன் 285211

# மங்கையர் மலர்

பெட்டகம் 2 ஏப்ரல் 2005







## மாலை சூடும் மணநாள்







ஏப்ரல் 1985 இதழிலிருந்து...

# கோடை ஸ்பெஷல்

### ஆப்பிள் ஜெல்லி

**ஆ**ப்பிள்களை தோல் சீவி வேக வைக்கவும். வெந்ததும் மசிக்கவும். இதில் பாதி அளவு சர்க்கரையைப் போட்டு கொதிக்க விடவும். அடுப்பை நன்றாய் எரிய விட்டால் சீக்கிரம் பாகு வரும். பாகு ஆறியதும், சிட்ரிக் ஆசிட், பைன் ஆப்பிள் எஸென்ஸ், ரோஸ் எஸென்ஸ் விட்டு மசித்த ஆப்பிள்களைக் கலந்து எடுத்து வைக்கவும். ஃப்ரிஜ்ஜில் வைக்கவும்.

### கொய்யாப்பழம் ஜெல்லி

**கொ**ய்யாப் பழத்தைச் சிறு துண்டுகளாய் நறுக்கி வேகவிட்டு வெந்ததும், நன்கு மசித்து விட்டு வடிகட்டவும் (வடிகட்டியில்). வடித்த நீரில், சரி பாதி சர்க்கரை போட்டு, ஒரு மணி நேரம் கொதிக்க விடவும். இறக்கி ஆறவைக்கவும். சிட்ரிக் ஆசிட், பைன் ஆப்பிள் எஸென்ஸ் சேர்த்து, பாட்டிலில் கொட்டி வைக்கவும். மறு நாள் கெட்டியாகவில் லையென்றால், மறுபடி 10-15 நிமிடம் கொதிக்க வைக்கவும்.



### மில்க் ஷேக்

**வா**ழைப்பழம், ஆப்பிள், சீதாப்பழம், மாம்பழம், தர்பூசணி, கிர்ணி அல்லது முலாம் போன்ற எல்லா சதைப்பற்றுள்ள பழங்களிலும் மில்க் ஷேக் தயாரிக்கலாம். பழங்களைத் தோலி சீவி, சர்க் கரை, தேவையான அளவு, பால் ¼ லிட்டர், ஏலப் பொடி சிட்டிகை சேர்த்து, மிக்ஸியில் ஓடவிட்டுக் கடைந்து, ஐஸ் துண்டம் சேர்த்து பரிமாறவும். பப்பாளி பழத்திலும் மில்க் ஷேக் செய்யலாம்.

### ரோஸ் மில்க்

**ச**ர்க்கரை 200 கிராம், ரோஸ் எஸென்ஸ் 2 ஸ்பூன், ரோஸ் கலர், 1 சிட்டிகை, சிட்ரிக் ஆசிட் ½ ஸ்பூன், சர்க்கரையை 2 பங்கு தண்ணீர் சேர்த்து கொதிக்க வைக்கவும். வடிகட்டி ஆறியதும், ரோஸ் எஸென்ஸ், சிட்ரிக் ஆசிட், ரோஸ் கலர் கலந்து பாட்டிலில் எடுத்து வைக்கவும். தேவைப்படும் போது, ¼ தம்ளர் சிரப்பில் ¾ தம்ளர் பால் கலந்து ஐஸ் துண்டு போட்டு பருகவும்.

### பானகம்

**கோ**டையில் எளிய, சிக்கனமான, பானம், பானகம். சுக்கு 100 கிராம், ஏலக்காய் 4, வெல்லம் அரை கிலோ, சுக்கு வெயிலில் உலர்த்தி நைஸாகப் பொடி செய்யுங்கள். வெல்லம், சுக்குப் பொடி, ஏலப்பொடியை இடித்து அள்ளி வைக்கவும். பானைத் தண்ணீரை ஜில்லென்று எடுத்து, வெல்லப் பொடி கலக்கிக் குடிக்க ஜில்லென்று, எளியவர்க்கும் இனிய ஜூஸ் தயார். கோடையில் நீர்ச்சுருக்கு ஏற்படாத வண்ணம் காக்கும் இந்த ஏழைகளின் பானகம். (இதனாலேயே, கோடையில் ராமநவமி, நரசிம்ம ஜயந்தி, காலங்களில் பானகம் வழங்குகிறார்கள்).

\- கனகவல்லி



# தைரிய பலம்!

கல்கி கையில் கிடைத்தவுடன் நான் முதலில் படிப்பது தைரியமாக எழுதப்படும் நடுநிலைமையான தலையங்கத்தைத்தான். "இப்படி பயப்படாமல் எழுதுகிறீர்களே, அரசியல்வாதிகளைக் கண்டு பயமில்லையா" என்று ஒருமுறை கல்கி ஆசிரியரிடம் கேட்டதற்கு, "அதற்காக நம் கொள்கையை விடமுடியுமா?" என்றார் பளிச் என்று. இதுதான் கல்கியின் பலம், எப்பொழுதும்.

சிறுவயதில் கல்கி வந்தவுடன் எங்கள் வீட்டில் யார் படிப்பது என்று ஒரு போட்டியே நடக்கும். கல்கியில் வெளிவந்த அத்தனை தொடர்களையும் சேகரித்து பைண்ட் செய்து மீண்டும் மீண்டும் படித்து மகிழ்கிறேன்.

**- எழுத்தாளர்
ரமணி சந்திரன்**

படம் : **ஸ்ரீஹரி**





**க**ண்ணா! ராஜா! மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது. நீ ஒரே பையனாகப் பிறந்து வளர்ந்து, படித்துப் பட்டம் பெற்று கை நிறையச் சம்பாதித்து... இப்படி ஒவ்வொரு காலகட்டத்திலும் உன் வளர்ச்சியை, உயர்வைக் கண்டு பூரித்திருக்கிறோம் நானும் உன் அப்பாவும். நீ சி.ஏ. படிக்கும்

# மாப்பிள்ளையாகப் போகும்

போது இன்டர் ஒரு பேப்பரில் ஒன்பது மார்க் குறைந்ததால் தேர்வு பெறாததற்குத் துவண்ட போது அப்பா தந்த அன்பான ஆதரவு தானே இன்று அக்கௌண்டஸ் எக்ஸிக்யூடிவ் ஆகத் திறமையுடன் நிர்வகிக்கக் காரணம்?

திருமணமும் பெரியோர்களால் நிச்சயிக்கப் படட்டும் என்று நீ சொன்னதனால்தான் இந்த ஏற்பாடுகள். நல்ல பெண், நல்ல குடும்பம்... நல்லதே எண்ணுவோம்! நல்லதே நடக்கட்டும். உலக நடப்பினைக் கண்டு உன் அப்பாவும் நானும் நிறையப் பேசிய பிறகுதான், திருமணம் ஆவதற்கு முன்னால் உன்னிடம் சில விஷயங்களைச் சொல்ல வேண்டும் என்று முடிவு செய்தோம். இது உனக்கு வியப்பாக இருக்கலாம். பெண்ணுக்குத்தானே






ரேவதி சங்கரன்

# மகனுக்கு . . .

இப்படிச் சொல்லுவார்கள் என்று நினைக்கிறாயா:? இல்லை கண்ணா... நாங்கள் மனம் திறந்து சொல்வதைச் சொல்லி விடுகிறோம். காதில் போட்டு வைத்தால் சில விஷயங்கள் மனதிலும் இறங்கும். அதுவே தக்க சமயத்தில் உதவக்கூடும்!

**பெஸ்ட் அம்மா பெஸ்ட்!**

இதுவரையில் பெண்ணென்று வீட்டில் உன் அம்மாவை மட்டுமே பார்த்திருக்கிறாய். அவள் சமைப்பதையும், வீட்டை வைத்துக் கொள்வதையும், பாடம் சொல்லித் தருவதையும் பாடுவதையும், கோலம் போடுவதையும், பண்டிகைகளை முழுமையாகக் கொண்டாடுவதையும் எதிலும் திறம்பட எடுக்கும் முடிவையும் பார்த்து 'என் அம்மாதான் பெஸ்ட்' என்று எண்ணியதில் தப்பில்லை. உன்னுடைய எனக்கு அது பெரிய கிரீடம்தான்!

இனிமேல் அதையே மனதில் அசைபோடாதே! அதைத் தாண்டி வா! 'அம்மா பெஸ்ட்' என்ற உன் கருத்தை உள்ளத்தின் ஆழத்தில் மட்டும் வைத்துக் கொள். வார்த்தைகளில் 'உன்னவளுக்குத்' தெரியப்படுத்த வேண்டிய அவசியம் இல்லை. தாய் சொல்லைத் தட்டாதே! சிறிய முகமூடிதான். அதைத் திறம்படப் பயன்படுத்து! அது எல்லோரையும் மகிழ்விப்பதைப் புரிந்து கொள்வாய்.

**தாய்க்குப் பின் தாரம்!**

நலங்கு மஞ்சள் காயும் முன்பே பிரம்மதண்டத்தைத் தலையில் வைத்தது போல் 'எங்க அம்மா ரொம்பக் கஷ்டப்பட்டிருக்கிறார்கள். அவர்களை அனுசரித்துக் கொண்டு போக வேண்டும்' என்ற வசனங்களைப் பேசாதே! அப்படிச் சொன்னால் அவளுக்கு மனதில், 'அப்படியானால் அம்மா பிள்ளையாகவே இருக்க வேண்டியதுதானே. அப்புறம் எதுக்கு நான்?' என்று சிறு கசப்பு உணர்வு தோன்றும். அவள்தான் உன் உலகம் என்பதை அவளுக்குப் புரிய வை. அம்மாவும் அப்பாவும் சண்டை போட்டுக் கொள்வார்கள் என்றும் சொல்லாதே! அதையே என்றாவது உன் மீது திருப்பக் காரணமாக நீ இருக்கக் கூடாது. சண்டையில்லாவிட்டால் நீ கேட்டதெல்லாம் கிடைத்திருக்குமா?

காபியை 'சர்,புர்' என்று உறிஞ்சிக் குடிக்





திருமணங்களின் போது இலைகளில் உணவு அயிட்டங்களை பரிமாறிவிட்டு அதற்குப் பின்னால் விருந்தினர்களை அழைத்து உட்கார வைப்பதை விட, அவர்களை உட்காரச் செய்து விட்டு பிறகு பரிமாறுங்கள். அப்போதுதான் அவர்களது உடம்பிற்கு ஒவ்வாமைப் பொருட்களை இலையில் வைத்து வேஸ்ட் செய்யாமல் மிச்சப்படுத்திக் கொள்ள இயலும்!

- ஜே. தனலட்சுமி



யாதப்பா! நான், அன்றைய கெட்டிக்காரி! இவள் இன்றைய மங்கை!

## அம்மாவின் கட்டளை ஆறு!

உனக்கு என்னிடம் உள்ள பேரன்பை மனதில் கொண்டு நான் சொல்லும் அறிவுரைகள் ஆறு :

காதே. உனக்கொரு மனைவி வந்தால், ''நல்லா வளர்த்திருக்கா'' என்று என்னைக் குறை சொல்வாள் என்று அடிக்கடி சொல்வேனே. இன்று உன்னுடைய நடை உடை பாவனையில் உயர்வைக் கண்டு நான் பூரிக்கிறேன். வரப் போகிறவள் பெருமையடைவாள். நல்ல ஆசானாகப் பணி ஆற்றிய நிறைவு எனக்கு.

## தாயா? தாரமா?

அம்மா சமையலைத் தவிர வேறொன்றும் நீ அறியாததால் அது மிக உயர்வாக உனக்குத் தோன்றுவதில் வியப்பில்லை. இருந்தாலும் வார்த்தைக்கு வார்த்தை, ''எங்க அம்மா செய்கிற மாதிரி சேப்பங்கிழங்கு ரோஸ்ட், முருங்கைக்காய் சாம்பார் மாதிரி வராது'' என்று ஒப்பிட்டுப் பேசாதே! உன் அம்மாவுக்கு உன் மனைவியாகப் போகிற பெண்ணைப் போலக் கார் ஓட்டவும், வங்கிப் பணி ஆற்றவும், டைம் மேனேஜ்மெண்ட்டும் தெரி

1. அம்மா புராணம் பாடாதே!
2. அம்மாவோடு ஒப்பிடாதே!
3. அம்மாக் கோண்டு என்ற பட்டம் பயன் தராது!
4. அம்மாவைக் கொஞ்சம் பீடத்திலிருந்து இறக்கி வை. அவளும் சற்று இளைப்பாறட்டும்!
5. அம்மா தேவைப்பட்டபோதெல்லாம் உதவிக்கு வருவாள் என்பதை மட்டும் சொல்லி வை!
6. உன்னவளுடைய அம்மாவையும் மதிக்கக் கற்றுக் கொள்!

பி.கு.

மாமனாரை உயர்த்திப் பேசுவதால் மருமகளுக்கு எந்தவிதக் கசப்பும் ஏற்பட்டதாகச் சரித்திரமே கிடையாது! ஆல் போல் தழைத்து அருகு போல் வேரோடி... நீடூழி வாழ வாழ்த்துகள்!

- அம்மா





# கணினி

"**நீ**ரின்றி அமையாது உலகு" என்றார் வள்ளுவர். ஆனால் "நீயின்றி எங்கள் உலகு இல்லை கணினியே" என்று இளசுகளெல்லாம் கண் கொட்டாது கணினியையே முறைத்துக் கொண்டிருக்கும் காலமிது.

நாட்டு நடப்பும் நலிந்த நம் கலைகளைப் பற்றியும் தெரிகிறதோ இல்லையோ, ஜாவா, விபி ப்ரோக்ராமிங், டாட்நெட், ஆரகிள் (ஆட்டாங்கல் அல்ல), சாப், சி ப்ளஸ் ப்ளஸ் என வாயில் நுழையாத கம்ப்யூட்டர் விஷயங்களையெல்லாம் கரைத்துக் குடிக்கிறார்கள்.

விளைவு, வாழ்க்கையில் இரண்டறக் கலந்து விட்ட கம்ப்யூட்டரின் டெக்னிக்கல் வார்த்தைகளே போகிற போக்கில் பேச்சில் கலந்து பேசி வருகின்றனர் இன்றையக் கல்லூரி மாணவிகள்.

'அட, நெசமாத்தேன்' என்று கங்கணம் கட்டிய சென்னை வேப்பேரி ஜி.எஸ்.எஸ். ஜெயின் கல்லூரி மாணவிகளுக்கு ஒரு சின்ன டெஸ்ட் வைத்தோம். சீட்டு போடும் பச்சைக் கிளியம்மாவை நம்முடன் கூட்டிச் சென்றோம். இந்தப் பச்சைக் கிளியம்மா எடுத்துப் போட்ட கம்ப்யூட்டர்



சீட்டுக்கு கல்லூரி மாணவிகளும்



• என். நீரா



• எஸ். கமலி



• எஸ்.எம்.அனிதா

சளைக்காமல் கணினி போல் பதில் சொல்லி அசத்திட்டாங்க.

"ஹாய், எஸ்.எம். அனிதா, நீங்க இப்ப சொல்றதை எப்பவும் நாங்க நினைவுல வச்சுக்கணும். மெமரியிலிருந்து அழிக்கவே முடியாம..."

**எஸ்.எம். அனிதா :** ஆங், மெமரியை வைச்சு நான் சொல்றேன், இருங்க. நான் கம்ப்யூட்டர் சயின்ஸ் எடுத்தாலும் எடுத்தேன், இந்த மெமரி வார்த்தையை ஓயாம உபயோகிச்சிட்டிருக்கேன். "அம்மா நான் சின்ன வயசுல அழகா இருப்பேனா, அதையெல்லாம் உங்க மெமரியில ஸ்டோர் பண்ணி வைச்சிருக்கீங்களா?"

"ஏய் உன் மெமரி ஜஸ்ட் கனிமண்தான், என்னுடை யது 10 ஜிபி ஹா... ஹா... ஹா"

"ஐய்யோ என் மெமரியிலேயே இல்லடி, எங்க போச்சு இந்த பேனா மூடி?"



வாரே வாஹ். நெக்ஸ்ட் தீபா, 'டிரைவர்ஸ்!'

**தீபா :** 'கம்ப்யூட்டர் கம்பெனிகளில் அதிகமா டிரைவர்ங்கிற வார்த்தையைப் பயன்படுத்துவாங்க. சிடி டிரைவ், ஃப்ளாப்பி டிரைவ் மாதிரி. டிரைவ்னா என்ன? ஓட்டறது. காலேஜ்ல யாரு யாரை ஓட்டாம இருக்கா. அப்பாவிப் பொண்ணை செமத்தியா ஓட்டும் போது, "பாவம்டி, ப்ரேக் இல்லாம டிரைவ் பண்ணது போதும். பாவம் பாப்பா எங்கேயாவது போய் முட்டிக்கப் போகுது"னு சொல்வோம். சிஸ்டம்ல சிடி மாட்டிக்கிச்சுன்னா ஏய் டிரைவர், சொன்னாக் கேட்க மாட்டியான்னு சைடுல ஒரு தட்டு தட்டினா 'சொய்'ன்னு சிடி வெளியே வந்துடும். (ஜாலியாக சிரிக்கிறார்.)

ஓகே. நல்லாவே ட்ரைவ் பண்றீங்க. இப்பொழுது ஓவர் டு வித்யலக்ஷ்மி. உங்களுக்குக் கொடுக்கப்பட்ட வார்த்தை 'டெலிட்'.

**வித்யலக்ஷ்மி :** உங்க கேள்வியை

'டெலிட்' பண்ணட்டா? ம்... யாராவது தப்பா பேசினா அந்த வார்த்தையை நீ முதல்ல 'டெலிட்' பண்ணு, தப்பு தப்புன்னு சொல்வோம். பெண்கள் எப்பொழுதுமே ஒருத்தர் வாழ்க்கையில 'என்டர்' ஆகி எல்லா பிரச்னைகளையும் 'ஸ்கேன்' பண்ணுவாங்களாம். அப்புறம் உங்களை உங்க இதயத்துக்குள்ளே 'சேவ்' பண்ணி எல்லாப் பிரச்னைகளையும் டெலிட் பண்ணிடுவாங்களாம். இது எப்படி?

அடடா, பெண்மைக்கு ஈடு இவ்வுலகில் வேறு உண்டா? ஓகே. டி. அனிதாவுக்கு பச்சைக் கிளியம்மா எடுத்துக் கொடுத்த சீட்டு - 'போஸ்டிங்.'

**டி. அனிதா** : எங்க ப்ரெண்ட்ஸ் யாருக்காவது கல்யாணம் ஃபிக்ஸ் ஆயிடுச்சுன்னா, என்னடி எங்க உனக்கு போஸ்டிங்? அமெரிக்காவா அல்லது அய்யனார் பட்டியான்னு செமத்தியா டிரைவ் பண்ணுவோம். அவ, கண் கலங்கிக்கிட்டே, ''இல்லப்பா எனக்கு தண்ணியில்லாத காட்டுக்குத்தான் போஸ்டிங். மாப்பிள்ளை ஊரு சென்னை தான்''ன்னு சொல்லுவா. டைமிங்காத்தான் பேசியிருக்காங்க. தீபாவுக்கு ''ஸ்ப்ரெட் ஷீட்'' கொடுத்து ரொம்ப நேரமாச்சே.

**தீபா** : ம்... எனக்கு ''ஸ்ப்ரெட் ஷீட்'' விரிச்சு சிவப்புக் கம்பள விரிப்பு மரியாதை கொடுத்தாத்தான் பேசுவேன். ஆமா. (சிணுங்குகிறார்)

அடடா, இப்போ சென்னை மீனாட்சிக்கு 'சர்ஃபிங்.'

**மீனாட்சி** : பெண்களுக்கு எதிரா எங்க கொடுமை நடந்தாலும் அவங்களை நல்லா சர்ஃபிங் பண்ணி துவைச்சி காயப்போடணும்னு நினைப்பேன். எங்கம்மாகிட்டே போய், ''என்னம்மா 'சர்ஃபிங்' எல்லாம் முடிச்சிட்டியான்னு கேட்டா, வந்து நீயும் சர்ஃபிங் பண்ணு, முடிச்சிடலாம்னு'' என்னையே டிரைவ் பண்ணுவாங்க. அடுத்த செகண்டே ஐ'யாம் எஸ்கேப்!

**• ச.ந. கண்ணன்**

படங்கள் : **ஸ்ரீஹரி**

## கணினி அறி நீ
## தமிழ் அர்த்தங்கள்

**Memory** : நமக்கு எப்படி மூளையோ அதே போல் கம்ப்யூட்டரின் மூளைதான் மெமரி. கம்ப்யூட்டரின் தகவல் கூடமாக விளங்கும் சிப்களின் தாங்குதிறன்தான் மெமரியாகும்.

**Delete** : அழிப்பது (அ) நீக்குவது கம்ப்யூட்டரில் உள்ள தகவல் ஃபைல்களை அடியோடு அழிப்பது.

**Posting** : வெப்சைட்களில் உள்ள விவாதப் பகுதிகளில் தங்களது கருத்துக்களைப் பதிவு செய்தல்.

**Surfing** : இன்டர்நெட்டில் புகுந்து தேவையான தகவல்களை அலசுவது.

**Spread Sheet** : கம்ப்யூட்டரின் கணக்குப் புத்தகம். மாதக் கணக்குகள் போடும் புத்தகம் போல இருக்கும்.

**Drivers** : கம்ப்யூட்டரின் உதிரிபாகங்களை (எ.கா. பிரிண்டர்) கம்ப்யூட்டரோடு இணைத்து அதனைப் பற்றித் தெரிவிக்கும் மென்பொருள். இதன் மூலமாக கம்ப்யூட்டர் தன்னோடு இணைக்கப்பட்டுள்ள உதிரி பாகங்களை அறிந்து கொள்ளும்.






# குஜ்ஜிலி பொட்டு நினைவலைகள்!

**நா**ங்கள் ஐம்பத்தாறு ஆண்டுகள் திருவல்லிக்கேணியில் வசித்தவர்கள். அதுவும் திருவல்லிக்கேணி பெரிய மசூதி பக்கம். குஜ்ஜிலி என்றே அந்த இடத்துக்குப் பெயர். இருபுறமும் முஸ்லீம்கள் கடைகள்தான் அதிகம். குஜ்ஜிலிப் பொட்டுகள், சம்க்கி, ஜிகினாப் பொட்டுகள், ஜரிகை லேஸ்கள், வியாபாரம் நடைபெறும்.

புடைவைகள், மெல்லிய துணிகளில், ஜிகினா வேலைப்பாடுகள், மணிகளால் குஜ்ஜிலிப் பொட்டுக்களால் மிக அழகாக வேலைப்பாடுகள் செய்து தருவார்கள். சிறு வயது முதலே நான் இங்கு குடி இருந்தமையால் சென்னையிலும், குஜ்ஜிலி என்று ஓர் இடம் உள்ளது என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

**- கே. ராஜம் காமேஸ்வரன், சென்னை.**

**கு**ஜ்ஜிலிப் பொட்டு பற்றிப் படித்ததும் எனக்கு நான் சின்னவளாக இருந்த பொழுது பாட்டி ஆசையாக அரைத்து கையில் இடும் மருதாணி, தாத்தா பேத்திக்காக வாங்கி வரும் தஞ்சாவூர் கதம்பம் நினைவிற்கு வருகிறது. பக்கத்து வீட்டில் இருக்கும் பண்டிதர்கள் வீட்டுப் பெண்மணி, குஜ்ஜிலிப் பொட்டு வைத்து விடுவாள். மாலையில் இந்த அலங்காரத்துடன் பாட்டியுடன் பக்கத்தில் இருக்கும் கொங்கணேசுவரர், காமாக்ஷி கோயில் போய் வருவோம். இரவு சாப்பிட்டு விட்டுத் திண்ணையில் உட்கார்ந்து பாட்டி, தாத்தா சொல்லும் கதைகளைக் கேட்டுக் கொண்டே தூங்கி வழியும் சமயம், மேளச் சத்தம் எழுப்பும். பச்சைக் காளி, பவழக்காளி, ஆடிக் கொண்டே வர பின்னால் சுவாமி உலா வருவார். தாத்தா தவறாமல், காலணா, அரையணா, ஒரு அணா என்று திருவிழாவிற்காகக் கொடுப்பார். தலையில் ஒரு சின்ன முக்காலியில் சிறிய சிம்னி விளக்குடன் வரும் கமர்கட் விற்பவரைச் சுற்றிச் சிறுவர், சிறுமி கூட்டத்தில் முண்டியடித்து கமர்கட் வாங்கி தின்பது ஓர் ஆனந்தம். இவையெல்லாம் ரீவைண்ட் ஆகி மனம் பழைய நினைவுகளில் திளைத்து இருப்பதை உடனே எழுதி விட்டேன்.

**- காமாக்ஷி சுந்தரம், சென்னை - 90.**

**ஒ**வ்வொரு வைகுண்ட ஏகாதசியன்றும் வெங்கடேசப் பெருமாள் கோயிலுக்குப் போவதே இந்தப் பொருட்கள் வாங்குவதற்குத்தான். அன்று



மங்கையர் மலர் வெள்ளிவிழா

### ஜாம் ஜாம் கல்யாணம்

இந்த இரட்டைக் கிளவியைப் பயன்படுத்தாத திருமண விழாக்கள் இல்லை. அதென்னது? ஜாம் ஜாம்? திருமணத்திற்குப் பிறகு சம்பந்தப்பட்டவர்கள் எல்லோரும் 'ஜாம்'மில் மாட்டிக் கொள்வார்கள் என்றா? டிராஃபிக் ஜாம் தெரியும்! கல்யாண ஜாம் தெரியுமா?



தான் மேசைகளின் மேல் வெள்ளைத் துணி விரித்து, பளபளவென்று இந்தப் பொட்டுக்களை விற்பார்கள். வாங்கி வந்து, தூண்களில் மேலே ஒட்டி வைத்திருக்கும். பலாப்பிசினை வைத்து, நெற்றியில் ஒட்டிக் கொண்ட மாத்திரத்தில் நாங்களும் எலுமிச்சை நிறத்து குஜ்ஜிலிப் பெண்களாகி விட்டதாக நினைத்து மகிழ்ந்தது நினைவுக்கு வருகிறது.

குஜ்ஜிலியர் வீட்டில் கல்யாணமென்றால், எல்லார் வீடுகளுக்கும் அழைக்க, நிறையப்பேர் வருவார்கள் - ஊரிலிருந்து வந்த உறவினர்கள் உட்பட. கல்யாணத்தில் ஸ்பெஷல் டிஷ் 'வடிரஸா' சுவையோ சுவை. பூச்சூட்டல் அன்று திண்டுகளின் மேல் நல்ல வண்ணங்களில் காசிப் பட்டுப் புடைவையை விரித்து, அதில் சாய்ந்து பூச்சூட்டல் பெண்ணை உட்காரச் சொல்லி, பாட்டுப் பாடி மகிழ்வார்கள். எல்லாமே அழகுதான். கத்தி, கத்தியாக, என்ன என்னவோ டிசைனில் தாழம்பூவைக் கத்தரித்து, (வெறும் வாழை நார்களை வைத்தே) அரை முதுகுப் பின்னலைக் கூட நீளமாகப் பின்னி விடுவார்கள். பிரித்து நான்கு நாட்களானாலும் மணம் ஊரைத் தூக்கும்.

**- மைதிலி சம்பத், செகந்திராபாத்.**



**எ**ன்னுடைய சிறு வயதில் நாங்கள் சிலோனில் இருந்தோம். தமிழ் சினிமா நடிகைகள் அணியும் சேலை, நகைகள் எனக்கு ரொம்பப் பிடிக்கும். அதற்கேற்றாற் போல் அவர்கள் வைத்திருக்கும் ஜிகினாப் பொட்டு என்னை மிகவும் கவர்ந்தது. உறவினர்கள் யாரும் இந்தியாவுக்குப் போவதாகச் சொன்னால், உடனே எனக்கு தஞ்சாவூர் கதம்பமும், ஜிகினாப் பொட்டும் அவசியம் வாங்கி வரும்படி சொல்லி அனுப்புவேன். அவர்கள் வரும் போது, தஞ்சாவூர் கதம்பம், ஜிகினாப் பொட்டோடு, சம்பங்கிப் பூவும் வாங்கி வருவார்கள். அந்த சம்பங்கிப் பூவோடு ஜிகினா பேப்பர், அலங்கரித்து மரிக்கொழுந்தும் வைத்து கட்டியிருப்பார்கள். அதுவும் தலைக்கு வைக்க அழகாக இருக்கும். இவற்றைக் கையில் வாங்கும் போது எனக்கு வைரங்கள் கிடைத்தளவு சந்தோஷமாக இருக்கும். என்னுடைய பழைய ஞாபகத்தை மீட்டுக் கொடுத்த மங்கையர் மலருக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள் கிறேன்.

**- இலகா, திருச்சி.**

'**கு**ஜ்ஜிலிப் பொட்டு' என்றதும் உண்மையிலேயே பழைய ஞாபகங்கள் வந்து விட்டன. 50 வருடங்களுக்கு முன்பு அந்தக் காலத்தில் கல்யாணத்தில் நலங்கு சமயம் பெண்கள், 'பத்தியம்' என்று பாடுவார்கள். அதில் வரும் பாடலில் என் ஞாபகத்திற்கு வந்த சில வரிகள் :

*கொப்பரையில் வெந்நீரும்*
*பக்குவமாய்க் கீழிறக்கி,*
*குளிப்பாட்டி விட்டெனக்கு*
*பட்டு முடுத்தி.*

குஞ்ஜிலியப் பொட்டு மிட்டு,
கூர்விழிக்கு மையெழுத
கூட இரண்டு தாதிமார்
இருக்க வேண்டும்....
(ஓடம் மெட்டில் பாடுவார்கள்)

**- லக்ஷ்மி அருணாசலம், சென்னை.**

**நா**னும், என் குடும்பமும், தஞ்சையைச் சேர்ந்தவர்கள்தான். தஞ்சை, 'குஞ்ஜிலிப் பொட்டுக்கு மட்டுமா சொந்தம்? அட, தஞ்சை கதம்பம், முந்திரி, தலையாட்டி பொம்மை பிரசித்தமில்லையா? குஞ்ஜிலிப் பொட்டு மார்வாடிகளும், குஜராத்தியர்களும் தெருவெங்கும் காணப்படுவார்கள்.

என் பாட்டியும், எனக்கு பலாப்பிசின் ஒட்ட வைத்து, கறுப்பு, சிவப்பு என பளபள குஞ்ஜிலிப் பொட்டு வைத்து விடுவார்கள், ஏக்கமாக இருக்கு!

**- சரோஜா வாஞ்சி, பெங்களூர் - 93.**

**நா**ன் தஞ்சையைச் சேர்ந்த குஜராத்திப் பெண். தஞ்சாவூரில் வைகுண்ட ஏகாதசியன்று வெங்கடேச பெருமாள் கோவிலில் குஞ்ஜிலிப் பொட்டு கடை (அன்று ஒரு நாள் மட்டும்) என் சகோதரர்கள் வைப்பார்கள். பிராகாரத்தில் மேசையின் மேல் வெள்ளைத் துணியைப் பரப்பி அதன் மேல் விதவிதமான குஞ்ஜிலிப் பொட்டு வைத்து விற்பார்கள். சிறுமியாக இருந்த நானும் அன்று முழுவதும் அவர்களோடு உட்கார்ந்திருப்பேன். குஞ்ஜிலிப் பொட்டுடன் 'பிசினு'ம் சிறு டப்பியில் வைத்து விற்பார்கள். பிசின் டப்பியின் விலை அரையணாவும், குஞ்ஜிலிப் பொட்டுக்களின் விலை தரத்திற்கு ஏற்றவாறு 1 அணா, 2 அணா என்று விற்கப்படும். நாங்கள் தஞ்சாவூரை விட்டு வந்து 40 வருடங்களுக்கு மேலாகின்றன. அதற்குப் பிறகு அங்கு செல்லும் வாய்ப்பே கிடைக்கவில்லை.

**- பிரபா டாக்கர், ஹைதராபாத்.**

**'கூடை நகையும் குஞ்ஜிலிப் பொட்டுமாக வந்தாள்' என்று மருமகளைப் பற்றி மாமியார்கள் கூறுவார்கள்.**



## சாந்துப் பொட்டு பளபளக்க...



ஸ்டிக்கர் பொட்டை அவசரம் அவசரமாக நெற்றியில் ஒட்டிக் கொண்டு ஓடுகின்ற காலத்தில் கறுப்புச் சாந்து பற்றிச் சொன்னால் கேட்கப் பொறுமை இருக்குமா? இருந்தாலும் பழைமையான விஷயங்கள் மற(றை)ந்து போகாமல் இருக்க அடுத்த தலைமுறைக்குச் சொல்ல வேண்டிய கடமை இருக்கிறதே!

கைப்பிடியளவு ஜவ்வரிசியை இரும்பு வாணலியில் போட்டுக் கைவிடாமல் கருக வறுக்கவும். அதில் கொஞ்சம் நீர் ஊற்றிக் கொதிக்க விடவும். ஜவ்வரிசி கரைந்து மெழுகுப் பதமாகப் பளபளவென்று வரும். மத்தால் நன்றாக மசித்தால் கட்டிகள் இருக்காது. ஆறவைத்து அதில் வாசனைத் தைலம் (அத்தர்) ஊற்றிக் கலந்து ஒரு கிண்ணத்தில் ஊற்றிக் காயவைக்கவும். வெயிலில் உலர்த்துவதாக இருந்தால் தூசி படாமல் ஒரு மெல்லிய துணியால் மூடி வைக்கவும். இறுகிய பிறகு தேவையான போது சிறிது நீர் விட்டுக் குழைத்து நெற்றியில் இட்டால் அதன் மணமும், பளபளப்பும் நிறமும்... அழகே அழகு!

✱ அத்தர், புனுகு, ஜவ்வாது, அரகஜா - இதெல்லாம் அந்தக் காலத்தில் உபயோகித்த வாசனைப் பொருட்கள்.

- ரோகிணி






# யுகாதிப் பண்டிகை

யுகம் + ஆதி = யுகாதி.

யுகம் என்பது புது வருடம். ஆதி என்பது ஆரம்பம்.

9.4.2005 அன்று யுகாதி பிறக்கிறது. (தெலுங்கு வருடப் பிறப்பு).

அன்று பஞ்ச அமிர்தங்கள் கலந்த பச்சடி செய்வர். வெல்லம் - இனிப்பு, வேப்பம்பூ - கசப்பு, புளி - புளிப்பு, மாங்காய் - துவர்ப்பு, மிளகு - கார்ப்பு.

இந்தப் பச்சடி குளிர்காலம் முடிந்து வேனில் காலம் பிறக்கும் இச் சமயத்தில் நமது உடலில் ஏற்படும் மாற்றங்களுக்கும், சிறு சிறு உபாதைகளுக்கும் சிறந்த மருந்தாகும். இந்த யுகாதிப் பச்சடியின் அர்த்தம் நம் வாழ்வில் ஏற்படும் இன்ப, துன்பங்களை சமமாகப் பாவிக்க வேண்டும் என்பதே.

யுகாதியன்று தெலுங்கு தல்லி (தெலுங்குத் தாய்)யை வழிபடுவார்கள். அவள் வலது கையில் நவதானியப் பயிரையும், இடதுகையில் அமிர்தகலசத்தையும் வைத்திருப்பாள். விவசாயிகள் அவளை தெய்வமாகக் கொண்டாடுவார்கள். அவள் கையில் உள்ள அமிர்த கலசமானது என்றும் வறட்சி ஏற்படாமல், நதிகள் தண்ணீரோடு அமிர்தம் போல் இருக்க வேண்டும் என்றும், மற்றொரு கையில் உள்ள நவதானியப் பயிர் அனைத்துத் தரப்பு மக்களின் இல்லந்தோறும் தானியங்கள் செழிப்புடன் நிறைந்து இருக்க வேண்டும் என்பதே ஐதீகமாகும்.

யுகாதி அன்று பஞ்சாங்க பூஜை செய்து பஞ்சாங்கம் படிப்பார்கள்.

அதில் திதி - செல்வத்தையும், வாரம் - ஆயுளையும், நட்சத்திரம் - பாவத்தையும், யோகம் - நோய்களைத் தீர்ப்பதையும், கரணம் - காரியசித்தியையும் குறிக்கும். இதன் மூலம் நன்மை, தீமைகளை தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி ராவணனை வதம் செய்து சீதையை அயோத்திக்கு அழைத்துச் சென்றது யுகாதி அன்றுதான்.

குருக்ஷேத்திரப் போரில் வென்று, தர்ம ராஜன் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் கைகளால் முடிசூட்டிக் கொண்டதும் யுகாதி அன்றுதான்

- ஸர்வாணி

# மணிக்கு 100 டாலர்

ரம்யா நாகேஸ்வரன்

ரசத்திற்கு ஜாக்கிரதையாகத் தாளித்தேன். கொஞ்சம் புகை அதிகமாகி விட்டால் மேலே உள்ள ஸ்மோக் டிடெக்டர் அலறத் துவங்கிவிடும். பலமுறை இந்த அமெரிக்க சமையல் அறையில் வேலை செய்து பழகி விட்டதால் இதெல்லாம் இப்பொழுது தெரிந்து விட்டது. சமையல் ரெடி! சாப்பிடத்தான் ஆளில்லை. வழக்கம் போல் மருமகள் ரீமாவும், மகன் விவேக்கும் இன்னும் வேலையிலிருந்தே திரும்பவில்லை. இப்பொழுதெல்லாம் ரீமா எட்டு மணிக்கு வருகிறாள். விவேக்கோ இன்னும் லேட்டாக வருகிறான். 'என்னடா' என்று கேட்டால் இருவரும் சரியாகப் பதில் சொல்வதில்லை. ஏதோ மழுப்புகிறார்கள். விவேக் அமெரிக்காவுக்கு வந்து பத்தாண்டுகள் ஓடி விட்டன. ரீமா அஸாமைச் சேர்ந்தவள். இன்னும் அவளிடம் சேர்ந்தாற்போல் பத்து வாக்கியங்கள் பேசியதில்லை. நிறைய புன்சிரிப்புகளோடு சரி. அவர்களுக்கு இன்னும் குழந்தை பிறக்கவில்லை.

இன்று எத்தனை மணியானாலும் விவேக்கிற்கு சாப்பாடு பரிமாறி விட்டுத்தான் தூங்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டேன். நான் இன்னும் ஒரு வாரத்தில் கிளம்பி விடுவேன். பிறகு அவர்கள் தானே பார்த்துக் கொள்ள வேண்டும்.

சோர்வாக வந்தான். "என்னம்மா? இன்னுமா தூங்கலை?'' என்றான்.

"நீ முதல்லே சாப்பிடு..." என்றபடி "ஏம்ப்பா? வேலை அதிகமா? ரொம்ப சோர்வா இருக்கே? நேரம் கழிச்சு வீட்டுக்கு வர்றே?" என்றேன்.

அவஸ்தையாகச் சிரித்தான். "அதெல்லாம் இல்லைம்மா. உங்கிட்டே சொன்னா நீ அனாவசியமா ஏதாவது கற்பனை பண்ணிக் கவலைப்படுவே..'' என்று இழுத்தான்.

"சொல்லலைன்னாதான் கவலையா இருக்கு. சொல்லுப்பா..." என்றேன்.

"வேலையிலே ரொம்ப மன உளைச்சல். கம்பெனி நஷ்டத்துலே ஓடிக்கிட்டு இருக்கு. அதை வாங்க சில பெரிய



கம்பெனிகள் போட்டி போட்டுக்கிட்டு இருக்காங்க. வாங்கின பிறகு எங்களுக்கெல்லாம் வேலை இருக்குமா இல்லையான்னு தெரியலை. ரீமாக்கு வேற குழந்தை வேணும்னு ரொம்ப ஆசை. அதுக்கு ட்ரீட்மெண்ட் எடுத்துக்கிட்டு இருக்கோம். பலன் இருக்குமான்னு தெரியலை. இந்தப் பிரச்னைகளினாலே இரண்டு பேருக்கும் அடிக்கடி சண்டை வேறு வரது. ரொம்பக் கவலையாவும், மனச்சோர்வாகவும் இருக்கிறதுனாலே..'' என்று இழுத்தான்.

'திக்'கென்றது. ''அதனாலே?'' என்றேன்.

''நான் ஒரு சைக்கியாட்டிரிஸ்ட் கிட்டே தினம் சாயந்திரம் போயிட்டு வரேன். நீ ஒண்ணும் பயப்படாதே. அவர்கிட்ட மனசு விட்டுப் பேசலாம். எல்லாம் கேட்டுப்பார். அவ்வளவுதான். தேவையின்னா மருந்து தருவார். பெரிய டாக்டர். மணிக்கு 100 டாலர்னா பார்த்துக்கோ! ரீமாவையும் இரண்டு, மூணு கவுன்சிலிங் செஷனுக்கு வரச் சொல்லி இருக்கேன். இன்னும் கொஞ்ச நாள்லே எல்லாம் சரியாயிடும். நீ நிம்மதியா தூங்கு'' என்று சொல்லிவிட்டு தூங்கப் போய்விட்டான் விவேக்.

அடுத்த நாள் இருவரையும் கொஞ்சம் சீக்கிரமாக வீட்டுக்கு வரச் சொன்னேன். வரும்பொழுதே ஊதுபத்தியின் வாசனையை முகர்ந்தபடி, ''என்னம்மா விசேஷம்?'' என்றான் விவேக்.

''உங்க 100 டாலர் டாக்டருக்கெல்லாம் தாத்தா வந்திருக்கார்'' என்றேன். இருவரும் முழித்தபடி என்னைத் தொடர்ந்து வந்தனர். காலியாக இருந்த ஒரு பெட்ரூமை அழகான பூஜை அறையாக மாற்றி இருந்தேன். என் பெட்டியில நான் தினமும் பூஜிப்பதற்காக வைத்துக்கொண்டிருந்த எல்லாப் படங்களையும் ஒரு புத்தக அலமாரியில் அடுக்கி, தோட்டத்தில் பூத்திருந்த பூக்களால் அலங்கரித்து, விளக்கேற்றி, ஊதுபத்தி ஏற்றியிருந்தேன். சின்ன டேப்ரெக்கார்டரில் ஜேசுதாஸ் 'ஓம் நமோ நாராயணா' என்று ஜபித்துக் கொண்டிருந்தார். அனிச்சையாக இருவரும் கைகூப்பினார்கள். பிரசாதமாக சேமியா பாயசத்தை இருவருக்கும் கொடுத்து விட்டுச் சொன்னேன், ''விவேக், ரீமா... இவர்தான் எங்க எல்லாருக்கும் பெரிய சைக்கியாடிரிஸட். விவேக், நானும், அப்பாவும் கஷ்டமே படாமலா உன்னையும், உன் தம்பி வருணையும் வளர்த்தோம். அப்பாவின் ஒரே சம்பளத்தில் அத்தையையும், சித்தப்பாவையும் படிக்க வைச்சு, கல்யாணம் செஞ்சு கொடுத்தோம். அப்புறம் பாட்டி, தாத்தாவின் வைத்தியச் செலவு.. நாங்க பார்க்காத பிரச்னையா? எனக்கு யூட்ரஸ் எடுக்க வேண்டிய பெரிய ஆபரேஷன் நடந்தது. அப்ப உனக்கு பத்து வயசுதான். கையிலே காசில்லை. எப்படியோ சமாளிச்சோம். ஏன்னா, எங்களோட ஒரே கவுன்சிலர் கடவுள்தான். தினம் காலையில், 'எல்லாப் பிரச்னைகளையும் உன் பாதத்துலே வைச்சுட்டேன். நீதான் பார்த்துக்கணும்னு' பிரார்த்தனை செஞ்சுட்டு வேலைகளைத் தொடங்கினா எப்படி மன உளைச்சலோ, சோர்வோ வரும்? உங்க ரெண்டு பேருக்கும் பெரிசா கடவுள் நம்பிக்கை இல்லைன்னு எனக்குத் தெரியும். நம்பிக்கை இல்லாத வாழ்க்கை வேரில்லாத மரம் மாதிரி. லேசா காத்தடிச்சாலே ஆட்டம் கண்டுடும்.''

இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

''இவ்வளவு நாளா இந்த வீட்லே பூஜை அறை இல்லை. எனக்காக ஒரு வாரம் இந்த சைக்கியாட்ரிஸ்ட்கிட்டே ட்ரீட்மெண்ட் எடுத்துண்டு பாருங்களேன். ஒரு மணி நேரம் வேண்டாம். பத்து நிமிஷம் போதும்'' என்றேன்.

அவர்களின் முகத்தில் தெரிந்த தெளிவைப் பார்த்தால் செய்வார்கள் என்றுதான் தோன்றியது.



பொன் மொழிகள் :

**நீ வெற்றியின் ஏணியில் ஏறும் போது, ஏணி சரியான சுவரின் மேல் சாய்ந்திருக்கிறதா என்று உறுதிசெய்து கொள். - ஐன்ஸ்டீன்**

தகவல் : **ஜி.கே.எஸ். மூர்த்தி**




மயிலை கற்பகாம்பிகை

ஓவியம் :

ரேவதி சங்கரன்

## கற்பகமே! கண்பாராய்!

பங்குனி மாதம் வந்து விட்டாலே வெயிலின் வெப்பமும் ஏறும், மயிலையின் ஆலயக் கொடியும் ஏறும். புன்னை மரச் சோலையில் மயிலுருவாய் உமையன்னை ஈசனைப் பூசனை செய்து மணம் புரிந்த திருத்தலம் மயிலை. இங்கு ஈசன் காணும் திருவிழாச் சிறப்பினால் கயிலையே மயிலை எனும் சிறப்பும் உண்டு.



அன்னதானம், ஐப்பசி ஓணம், கார்த்திகை விளக்கிடு, ஆதிரை நாள், தைப்பூசம், மாசிக் கடலாட்டு, பங்குனி உத்திரம், அட்டமி நாள், பெருஞ்சாந்தி என ஒவ்வொரு பதிகத்திலும் மடநல்லார் மாமயிலைத் திருவிழாக்களைத் தமிழால் பெருமைப்படுத்தியுள்ளவர் ஞானசம்பந்தப் பெருமான். அவனி போற்றும் அதிகார நந்தியும், அறுபத்து மூவரும், பூம்பாவை உயிர்த்தலும், திருத்தேரும் என இன்றும் விழாக்களால் பொலிவோடு திகழ்கிறது மயிலை.

### உமை மயிலுருப் பெற்றதேன்?

முன் ஒரு சமயம், கயிலையில் அன்னை வேண்டியபடியே, ஐந்தெழுத்தின் பெருமையையும், திருநீற்றின் மகிமையையும் பற்றிச் சிவபிரான், விளக்கம் செய்து

# 6 ஈச்வரி ஜெகதீச்வரி


வாலீசர் கோயில்


விருபாக்ஷீசர் கோ


மல்லீசர் கோயில்

ஆனந்தம்...

## அரன் கோயில் ஏழும் வலம் வருதல் ஆனந்தம்!

வாரத்தின் ஏழு நாட்களும், தினமொரு ஆலயமாகத் தரிசித்து வரம் பெறவும், ஒரே நாளில் ஏழு கோயில்களையும் தரிசித்துப் பலன் பெறவும் அமைந்தவை கபாலீச்சரத்தோடு ஏனைய ஆறு கோயில்கள்.

**1. தீர்த்த கபாலீசர் கோயில் :**
மாசிக் கடலாடித் தீர்த்தம் கொடுக்கச் செல்லும் கபாலீசர் தங்குமிடத்தில் அமைந்த கோயில் - திரிபுரசுந்தரியோடு விளங்கும் தீர்த்த கபாலீசருக்கு மார்கழியில் வெந்நீர் அபிஷேகமும் ரத்தினக் கம்பளம் சாற்றுவதும் சிறப்பு.

**2. காரணீசுவரர் கோயில் :**
அனைத்துக்கும் மூலகாரணமானவன் என்பதால் காரணீசுவரராகப் பொற்கொடியாள் உடனுறைய விளங்கும் அழகிய கோயில்.

**3. மல்லீசர் கோயில் :**
'மல்' என்ற சொல் வளம், செழிப்பு என்பதாகும். வளத்தை அடியார்க்கு


காரணீசுவரர் கோயில்


தீர்த்த கபாலீசர் கோயில்


கபாலீச்சரம் கோயில்

கொண்டிருந்தபோது, மென்சாயலுடன் ஒரு மயில் அருகில் வந்து சிலிர்த்தாடுவதைக் கண்ணுற்ற அன்னை, ஒருகணம் அதன் அழகில் ஈடுபட்டாள்.

அதனைக் கண்ட முக்கண்ணனும், "எம்முரை கேளாது எதன் மீது கவனம் வைத்தாயோ, பூதலத்தில் சென்று அது ஆகவே உருவெடுத்துப் பின்னர் எம்மருள் பெருக" எனப் பணித்தான். ஆசான் மொழி கேட்கும் பண்பு இன்னதென்று மானிடவர்க்குச் சுட்டிக்காட்டவே இந்த விளையாட்டு!

மயில்போலும் சாயலுடையாள் மயிலாக மாறித் தவம் செய்து வழிபட்ட இடம் மயிலாபுரி. அன்போடு அன்னை செய்த சிவபூசைக்கு இரங்கி அரவணி பெருமானும், மகிழ்வோடு "இயலுருப் பெற்று, வேண்டுவோர் கேட்கின்ற வரமனைத்தும் அருளும் கற்பகமாய்

# ஆல்ஃபா மைண்ட் பவர்

## சக்திகளிலேயே பெரிய சக்தி ஆழ்மனதின் சக்தி!




ALPHA™ MIND POWER

" Unwind Your Mind & Empower Yourself "

**டாக்டர் விஜயலக்ஷ்மி பந்தையன்** அளிக்கும் ஒரு நாள் இந்தியாவின் பழம்பெரும் சித்தர்களின் சக்தியுடன் கூடிய ஒரு நாள் ஆல்ஃபா தியான பயிற்சி



- மன அழுத்தம் குறைக்க
- பணவரவை அதிகரிக்க
- உறவுகளை சீர்படுத்த
- குடும்பத்தில் அன்பு நிலவ செய்ய
- நோய் தீர்க்கலாம்,நிம்மதியாக தூங்க
- பரீட்சையில் அதிக மார்க் வாங்க
- மகிழ்ச்சியுடன், தன்னம்பிக்கையுடன், வெற்றியுடன் வாழ

தபால் மூலம் கற்கலாம் ஆல்ஃபா மைண்ட் பவர்

ஆடியோ காஸட், சிடி மற்றும் பயிற்சி புத்தகம் ஆங்கிலம் மற்றும் தமிழ் தபால் மூலம் பெறலாம்.

ஒரு நாள் பயிற்சி மட்டுமே!

**ஆல்ஃபா தியான அனுபவம் இதோ ஒரு கடிதம்**

என் அக்காவின் குழந்தைக்குக் கடுமையான டெங்கு காய்ச்சல் ஏற்பட்டு ஆஸ்பத்திரியில் அவசர சிகிச்சை பிரிவில் அட்மிட் செய்தோம். டாக்டர்கள் இரண்டு மணி நேரம் கழித்துத்தான் எதுவும் கூற முடியும் என்று சொல்லி விட்டார்கள். நான் அங்கேயே அமர்ந்து ஆல்ஃபா தியானத்தின் மூலம் நோய் தீர்க்கும் தியானம் செய்து குழந்தைக்கு சக்தி அனுப்பினேன். 40 நிமிடங்களிலேயே குழந்தையின் உடல்நலம் தேறி விட்டது டாக்டர்களே வியந்தனர். என் அக்கா எனக்கு மனமார்ந்த நன்றி தெரிவித்தார். அந்த நேரத்தில் ஆல்ஃபாவிற்கு நான் பல நன்றிகள் கூறினேன்.

- ஸ்ரீவத்சன், சென்னை.

**ஏப்ரல் மாத பயிற்சி வகுப்புகள்**

| | | | |
|---|---|---|---|
| பெங்களூர் | 03.04.05 | திருச்சி | 10.04.05 |
| கோயம்புத்தூர் | 17.04.05 | டெல்லி | 24.04.05 |

#11, அருணாசலம் சாலை, சாலிகிராமம், சென்னை - 600093, இந்தியா
போன் - +91- 44- 23760007, 23760283 மொபைல் : 98414 02000
email:amp@alphamindpower.net www.alphamindpower.net

---

# பில்ராத் கருத்தரிப்பு மையம்



**உலகத் தரம் வாய்ந்த அதிநவீன வசதிகளுடன் கூடிய**

## HI TECH TEST TUBE BABY CENTRE

### FACILITIES AVAILABLE



- INTRA UTERINE INSEMINATION (IUI)
- INVITRO FERTILISATION (IVF)
- INTRA CYTOPLASMIC SPERM INJECTION (ICSI)
- BLASTO CYST CULTURE
- LASER ASSISTED HATCHING
- EMBRYO & SPERM CRYOPRESERVATION
- MICRO EPIDI DYMAL SPERM ASPIRATION (MESA)
- PRE IMPLANTATION GENETIC DIAGNOSIS

## BILLROTH HOSPITALS

43, லட்சுமி திரையரங்க சாலை, (பூந்தமல்லி நெடுஞ்சாலை சமீபம்) செனாய் நகர், சென்னை - 600 030. போன் : 2644 1777, 2644 4070 ஃபேக்ஸ் : 2644 2999
Email: drvjegan@hotmail.com.

வாரி வழங்கும் மரகதாம்பிகை உடனுறையும் மல்லீசன். இங்குள்ள அரசமரத்தடிச் சிவலிங்கம் சித்தரால் வழிபடப்பெற்றது.

**4. விருபாக்ஷி ஈசர் கோயில் :**

அட்சம் என்றால் கண். மீனைப் போன்ற கண்ணாள் மீனாட்சி எனப்பட்டது போல் விருப, அதாவது இயற்கைக்கு மாறாக நெற்றியில் மூன்றாவது கண்ணை உடைய ஈசன் என்பது பெயராயிற்று. விசாலாக்ஷி அம்மையுடன் விருபாக்ஷி ஈசர் அருளும் கோயில்.

**5. வாலீசர் கோயில் :**

வானரவீரன் வாலியால் பூசிக்கப்பட்டதால் வாலீசர் எனப் பெயர் பெற்ற இறைவன் கிழக்கு நோக்கி அருள்பாலிக்க, அம்மை பெரிய நாயகியோ தெற்கு நோக்கி விளங்குகிறாள். இக் கோயிலில் விளங்கும் பஞ்சலிங்கங்களை வழிபடப் பாபங்கள் தீரும் என்பர்.

**6. வெள்ளீச்வரர் கோயில் :**

சுக்கிரனாகிய வெள்ளி வந்து வணங்கித் தனது கண்பார்வையை மீண்டும் பெற்ற தலம். மாவலி மன்னன், மூவடி மண்ணை வாமனருக்குத் தானம் செய்யும் போது தடுத்ததால் தனது ஒரு கண்ணை இழந்தார் சுக்கிராசாரியார். இத் தலத்தில் சிவலிங்கத்தைத் தாபித்துப் பூசை செய்து இறைவனைக் காணும் பேறு பெற்றார். அருளிய சிவனிடம், இத் தலம் சுக்கிரபுரி என விளங்க வேண்டியபடியால் அப் பெயரும் உண்டு.

கபாலீச்வரர் ஆலயம், மற்றும் இந்த ஆலயங்களிலும் சிறப்பாக நடைபெறும் பிரதோஷ விழாவைத் தரிசிப்பதால் எல்லா நன்மைகளையும் பெறலாம்.




படங்கள் தந்தி: மயிலாப்பூர் டைம்ஸ்

விளங்குக!" என அருள் பாலித்ததால், இன்றளவும், அடியார் மனக்கிடக்கைகளை அறிந்தருளும் அருட்கடலாய்ப் பரிவெனும் கடைக்கண் பார்வை அமுதத்தால் அனைவரையும் குளிர்விக்கும் அற்புதக் கற்பகவல்லியாய்க் காப்பாற்றி வருகிறாள். மாதரார் மனமுருகி மாவிளக்கு ஏற்றுவதையும், மங்கையர் மங்கலப் பொருட்களை அர்ப்பணித்து மகிழ்வதையும், அங்கு அருட்சுடராய் விளங்கும் கற்பகத்தையும், கபாலீசரையும் காணக் கண் கோடி வேண்டும்!




* படம் உதவி : ஆட்டோ டிரைவர் விஜயகுமார்

### ஈசன் கபாலி ஆனதேன்?

பிரமனது ஐந்தாவது தலையை அவனது ஆணவம் நீக்கிடக் கிள்ளியெறிந்ததால், பிரமனது மண்டையோடு இறைவனது கைகளில் கபாலமாய்




ஒட்டிக் கொண்டது என்பர். அதிலே காசி விசாலாக்ஷி அன்னபூரணியாய் அன்னமிடச் சாபம் விலகியதாம். இறைவனும் இறைவியும் ஆடுகின்ற அருளாடல் அவனியோர்க்குக் காட்டும் வாழ்க்கை நெறிதானே!

"கற்பகம் கற்பகம் கற்பகம் என்றே
கரைபவர்க்குப்
பொற்பதம் பொற்பதம் பொற்பதம்
என்றே புரந்தருளும்
அற்புதம் என்னே! அணிமா
மயிலைவாழ் ஆரணங்கே!
நற்பதக் காபாலிநாதர் தழுவிடும்
நாயகியே!"

எனும் கற்பகக் கவியரசியின் அந்தாதி மலர்களை நாமும் தூவிக் கைதொழுவோம்!

## அற்புதம்...

## கோலமிகு கோலவிழியாள்

மயிலையின் எல்லைக்காளியாகக் காவல் தெய்வமாக விளங்குபவள் அருள்மிகு கோல விழி அம்மன். அமர்ந்த திருக் கோலத்தில் இடக்காலில் அசுரனை அழுத்தி, வலக் கால் மடக்கி, எட்டுக் கரங்களில் சூலம், வாள், உடுக்கை, வேதாளம், கேடயம், அங்குசம், மணி, கபாலம் ஏந்தி, சிரத்தில் தீச்சுடரோடு சீறியெழும் நாகபடமும், திருமுடியில் திங்களும் கங்கையும், நாகமும் இகழச் செவிகளில் பாம்படமும் பூண்டு சிவசக்தியான உருவில் ஒரு நேரம் அன்பொழுகும் தாய் போலும், ஒரு நேரம் அகன்ற விழி நோக்கால் அச்சமூட்டும் கொற்றவை போலும் மாறி மாறிக் கோலம் காட்டும் கோலவிழியாள் மக்களைக் காக்கும் மாபெரும் சக்தியாக விளங்குகிறாள்.

கொட்டு முழக்கோடு
கொண்டாடிடும் பால் குடமும்,
பூச்சொரியலும்
நாடி வந்து காண்பவர்
மனம் களிக்கும் நல்விழாக்களாகும்.

## அதிசயம்...

## எலும்பைப் பெண்ணாக்கிய தமிழ்!

ஏழாம் நூற்றாண்டிலே மயிலையில் வாழ்ந்து வந்த சிவநேசப் பெருந்தகையான வணிகர், சிவநேசர் ஆவர். அவர்,

## பித்தம் தெளிய மருந்தொன்று...



மஹாஸ்வாமிகளைத் தரிசிக்க வந்தவர்களில் பலரும் எலுமிச்சம் பழ மாலைகளையே சமர்ப்பித்தனர். ஒவ்வொன்றாக எடுத்துக் கழுத்திலும், தலையிலும் சூட்டிக் கொண்டவர் சிரித்தபடி, ''எல்லோரும் முடிவு கட்டி விட்டார்கள் போலிருக்கிறது, எனக்குத் தலையில் எலுமிச்சம் பழம் தேய்ப்பதென்று! அதுதான் எலுமிச்சம் பழமாகக் குவித்து விட்டார்கள்... பித்தன் என்று சொல்லாமல் சொல்லி விட்டார்களோ?'' என்று கூற, அங்கே வந்த ஓதுவார்மூர்த்திகள் தாம் பாட விரும்புவதாகச் சொன்னார். பெரியவர் சரியென்று கையசைக்க, அவர் பாடியதும் மஹாஸ்வாமிகள் உட்பட அத்தனை பேரும் கலகலவென்று சிரித்து விட்டனர். ஓதுவார் பாடியது, ''பித்தா! பிறைசூடி...'' எனும் சுந்தரர் தேவாரம்.

தமிழால் சைவநெறி தழைக்கச் செய்து வந்த திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகளுக்கே தமது செல்வம் எல்லாவற்றையும் அளித்துத் தன் மகள் பூம்பாவையையும் மணமுடித்துத் தந்து தாமும் அவரது உடைமையாக விரும்பினார். ஒருநாள் மலர் கொய்யச் சென்ற ஏழு வயதுச் சிறுமியான பூம்பாவை அரவம் தீண்டப் பெற்று மாய்ந்தாள். இறைவனிடம் மாறா அன்பு பூண்ட சிவநேசரும், அவளது உடலை முறைப்படி எரித்து அவளுடைய எலும்புகளையும், சாம்பலையும் ஒரு குடத்தில் இட்டு வைத்திருந்தார்.

ஐந்து ஆண்டுகளுக்குப் பின்னர், சம்பந்தர் திருவொற்றியூரிலிருந்து மயிலைக்கு எழுந்தருளிக் கற்பகத்தையும், கபாலீசுவரரையும் தரிசித்த பிறகு, சிவநேசர் கூறியது கேட்டு மனமிளகி, எலும்பும் சாம்பலும் இட்ட குடத்தினைக் கோயில் மதிற்புற வாயிலுக்குக் கொண்டு வரும்படிக் கூற அப்படியே செய்தார் வணிகர்.

மயிலையின் மக்களும், ஈசனடியார்களும், புறச்சமயத்தவரும் திரளாகக் கூடி நிற்க, ஞானப்பிள்ளை தமிழின் மீதுள்ள நம்பிக்கையுடன் தாம் வணங்கும் ஈசனின் அருள் வேண்டி, 'மயிலையின் விழாப் பெருமைகளைக் காண வருக' எனப் பதிகம் பாடப் பன்னிரண்டு வயதுப் பெண்ணாகப் பூம்பாவை எழுந்தாள். கண்டவர் வியந்தனர்! 'ஆ! ஆ! அற்புதம், அரனருள்! பேரருள்!' எனக் கடல் போலும் ஒலி எழுப்பினர்! ஏடெதிர் கொண்ட தமிழ்! தீயில் வேகாத தமிழ்! என்பைப் பெண்ணாக்கிய தமிழ்! அதுவே தெய்வத் தமிழின் சிறப்பு!



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.
எமது புதிய கிளை நிறுவனம் : எண். 7, 30வது தெரு, தில்லைகங்கா நகர்,
நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214

# தமிழ் புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 16 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்

சுவாமி ஸ்ரீ அம்பிகானந்தா　　நல்லாசியுடன்　　A.ராஜாபக்கிரிசாமி MSc., MEd.,



முன்னொரு காலத்தில் பல்லியும் டைனோஸாரும்
உருவாகும் முன்பே
இன்னுயிர் இரண்டு இணைந்து கைகோத்து
அந்திசாயும் நேரம் அழகாய் நடைபோட்டன
பச்சைப்படல் விரித்த பள்ளத்தாக்கில் நின்று
பாங்கான மொழியதனில், இளையவளும் சொல்லுவாள்...
அன்புள்ள தமக்கையே! அதோ அங்கே இருப்பதென்ன?
என்றே தெரிந்து கொள்ள இன்னும் தூரம் போகலாம் வா!
எனக்குப் பயணம் வேண்டாம் இந்தச் சூழல் போதும்
எனக்குப் பின்னவளே! என்னை என்றும் மறந்திடாதே!
உன்னை மறப்பதா? நானா? ஒருநாளும் இல்லையக்கா!
பின்னையும் சொல்லுவாள் தமக்கை தங்கையிடம்
உனக்குத் தெரியாது ஊழ்வினையின் பெருவலிமை...
கனக்கும் இதயமும் பிரிவும் துயரும்தான் இவ்வுலகம்!
தமக்கை தங்கிவிட்டாள் - தங்கையோ பயணித்தாள்
நின்றுவிட்ட மூத்தவளோ நிலத்திலே வேர் பிடித்தாள்
மண்ணின் பரப்பிலே மகிழ்ந்தாள் முகிழ்த்தெழுந்தாள்
மலர் தரும் மரமாக வளர்ந்தாள் செழித்தாள்
...கண்ணிலே மை தீட்டிக் காலிலே கொலுசு ஒலிக்கக்
கண்மணி ஒருத்தி வந்தாள் கானகத்தில் மலர் பறிக்க...
செதலிப் பள்ளத்தாக்கின் செண்பகமணம் அள்ளியது
செண்பகப் பூப்பறிக்கச் சிறுமி சிறு கிளை ஒடித்தாள்
செழித்த மரத்தில் தளிர்த்த சிறிய கிளை ஒடிந்தது
சேட்டத்தியாம் தமக்கையின் உள்ளமும் அழுதது
என்னருமைத்தங்கையே! இளையவளே! என்சொல்வேன்
என்னை நீ மறந்து விட்டாய்! என்னை மறந்து விட்டாயே!

**ஓ.வி. விஜயனின் ஓவிய வரிகள்**

மூலம் : **மலையாளம்**
தமிழாக்கம் : **ரேவதி சங்கரன்**

# நான் கற்றுக் கொண்ட பாடம்

இந்தச் சம்பவம் நடந்த சமயம் எனக்குத் திருமணமாகி 12 வருடங்களாகியிருந்தன. அது ஒரு கோடை விடுமுறை. உறவினர்கள் விடுமுறைக்கு வீட்டுக்கு வந்திருந்தார்கள். எனவே காலை டிபனுக்கு அடை செய்ய நினைத்து, வீட்டில் நிறையப் பேர் இருந்தபடியால் 6 தம்ளர்கள் அரிசியும், பருப்புமாக (கிட்டத்தட்ட 1½ லிட்டர்) ஊறவைத்தோம். கிரைண்டர் வாங்காத காலம் அது. ஆகவே, என் மாமியார் தானே அடை மாவுக்கு ஆட்டுரலில் அரைத்தார். சின்ன வெங்காயம் நிறைய உரித்து, அரிந்து, இஞ்சி, கறிவேப்பிலையுடன் அடை மாவில் கலந்தார். பிறகு, மாவில் உப்பு, காரம் சரியாக உள்ளதா என ருசி பார்த்தார். எல்லாம் சரியாக இருப்பதாகவும், வீட்டிலிருக்கும் சுரைக்காயைத் துருவி வைக்கும்படியும், தான் குளித்து விட்டு வருவதாகவும் கூறிச் சென்றார்.

மாமியார் சொல்லிச் சென்றபடி நானும் சுரைக்காயைத் தோல் சீவித் துருவினேன். உடனே அடை மாவில் அதைப் போட்டுக் கலந்து, மாவை சுவை பார்க்கச் சிறிது எடுத்து வாயிலிட்டேன்! அவ்வளவுதான்! தூக்கி வாரிப் போட்டது! மாவு வாயில் வைக்க இயலாத அளவு கசந்து வழிந்தது! விழுங்க முடியவில்லை. உடனே சென்று துப்பினேன். திகைத்துப் போய் நின்றேன்.

மாமியார் குளித்து விட்டு வந்தவுடன் விவரம் கூறியதுமே, "சுரைக்காயை மாவில் போடுமுன்பு நீ வாயிலிட்டுப் பார்க்கவில்லையா? வெள்ளரிக்காய், சுரைக்காயெல்லாம் சில வகை மிகவும் கசக்கும். இதையெல்லாம் சுவைத்துப் பார்க்காமல் சமைக்கக் கூடாது. மேலும், துருவிய பின்பு அவசரப்பட்டு மாவில் போடாமலிருந்தால் இதைத் தவிர்த்திருக்கலாம்" என்று மென்மையாகக்



## வம்பில்லாத துணை!

துணி துவைக்க
ஆள் தேடியபோது
அழைத்து வந்தார்
என் கணவர் ஒரு பெண்ணை!
பார்க்க...
நல்ல வெள்ளை நிறமாகத்தான்
நளினமாகத் தெரிந்தாள்!
நீங்கள் வெறும்
சோப்புத்தூள் கொடுத்து
துணிகளைப் போடுங்கள்
சொன்னபடி செய்கிறேனென்று
சுறுசுறுப்பாய் நின்றாள்!
இருந்த துணிகளையெல்லாம்
இரண்டு மணி நேரம்
அலசித் துவைத்துப் பிழிந்துவிட்டு
அலட்டிக் கொள்ளாமல்
அலட்சியமாய்ப் பார்த்தாள்!
தொடை தெரிய
வழித்துக் கொள்ளாமல்,
ஆடைகளை விலக்கிவிட்டு
ஆயாசமாய்த் துவைக்காமல்
நாகரீகமாய்த் துவைத்த அவளை
நம்பாமல் இருக்க முடியாது.
'உன்னைவிட...
நன்றாகத்தான் துவைக்கிறாள்
இவரின் புகழுரைக்கு
ஏற்றவள்தான் என்றாலும்
வேலைக்குச் செல்லும்
என்போன்ற பெண்களுக்கு
'வாஷிங் மெஷின்' பெண்ணை விட்டால்
வம்பில்லாத வேறு துணை
வேறெங்கே கிடைக்கும்?

- தி. கவிமனோ



கடிந்தவர் எரிச்சலையும், கோபத்தையும் அடக்கிக் கொண்டு, மேற்கொண்டு என்ன செய்வதென்று யோசித்தார்.

பிறகு, சிறிதளவு மாவைத் தனியே எடுத்து அதில் தேங்காய்ப் பூ, வெல்லம், சீனி, கோதுமை மாவு, ரவை என்று வெவ்வேறு பொருள்களையும் மாற்றி மாற்றிக் கலந்து பார்த்தார். ஊஹூம்... அந்தக் கசப்பு எல்லாவற்றையும் தாண்டிக் கொண்டு மேலேறி நின்றது!

குற்ற உணர்வு மேலிட, விழித்துக் கொண்டு நிற்பது தவிர எனக்கு வேறு வழியிருக்கவில்லை. அதுவரை, அப்படிப்பட்ட ஓர் அனுபவம் எனக்கு ஏற்பட்டிருக்கவுமில்லை. மிகவும் விலை கொடுத்து, மாமியாரின் இரண்டு மணி நேர உழைப்பையும் கூட விலையாகக் கொடுத்து சமையலில் நான் கற்றுக் கொண்ட பாடம் இது! மிகவும் மனவருத்தமுடன் அந்த 1½ லிட்டர் அடை மாவும் கீழே கொட்டப்பட்டது. என் கண்களில் கண்ணீர் என்றால், என் மாமியாரின் கண்களில் ரத்தக் கண்ணீர் வராத குறைதான்! பாவம்! என்னிடம் கோபம் காட்டாமல் பொறுமை காத்தார்! இதற்குள் மணி காலை 9க்கு மேல் ஆகிவிட எல்லோரும் பசி, பசி என வர ஆரம்பித்து விட்டார்கள்.

அடைக்காக ஆவலுடன், பசியுடன் காத்திருந்தவர்களுக்கு அவசர அவசரமாக ரவா உப்புமாவை செய்து பரிமாறியபோது என் மனம் வெட்கத்தாலும், வேதனையாலும் நிரம்பியது. ஆனால் யாருமே எரிச்சலை, கோபத்தை வெளிக்காட்டாமல் மௌனமாகச் சாப்பிட்டு எழுந்தார்கள்.

- குமாரி சோமசுந்தரம்

க...ஏ...ஈ...ல...ஹ்ரீம்...ஹ...ஸ...க...ஹ...ல...ஹ்ரீம்...ஸ...க...ல...ஹ்ரீம்...ஹ்ரீம்

# ஸ்ரீ ஆதிசங்கரர் அருளிய கல்யாண வ்ருஷ்டி ஸ்தோத்ரம்

க...ஏ...ஈ...ல...ஹ்ரீம்...ஹ...ஸ...க...ஹ...ல...ஹ்ரீம்...ஸ...க...ல...ஹ்ரீம்...ஹ்ரீம்



9. ஹந்தேதரேஷ்வபி மனாம்ஸி நிதாய வான்யே
பக்திம் வஹந்தி கில பாமரதைவதேஷு ।
த்வமேவ தேவி மனஸா ஸமனுஸ்மராமி
த்வமேவ நௌமி ஸரணம் ஜனனி த்வமேவ ॥

10. லக்ஷ்யேஷு ஸத்ஸ்வபி கடாக்ஷநிரீக்ஷணானா
மாலோக்ய த்ரிபுர ஸுந்தரி மாம் கதாசித் ।
நூனம் மயா து ஸத்ருஸ: கருணைக பாத்ரம்
ஜாதோஜனிஷ்யதி ஜனோ ந ச ஜாயதே வா ॥

11. ஹ்ரீம் ஹ்ரீம் இதி ப்ரதிதினம் ஜபதாம் தவாக்யாம்
கிம் நாம துர்லபமிஹ த்ரிபுராதிவாஸே ।
மாலாகிரீட மதவாரணமானனீயா
தான் ஸேவதே வஸுமதீ ஸ்வயமேவ லக்ஷ்மீ ॥

12. ஸம்பத்கராணி ஸகலேந்த்ரிய நந்தனானி
ஸாம்ராஜ்ய தான நிரதானி ஸ்ரோருஹாக்ஷி ।
த்வத் வந்தனானி துரிதா ஹரணோத்யதானி
மாவேவ மாதரநிஸம் கலயந்து நான்யம் ॥

9. அற்ப பலன்களைக் கருதிப் பலரும் பற்பல தெய்வங்களிடத்தில் மனதைச் செலுத்தி வழிபடுகின்றனர். என்னால் அது முடியாத ஒன்று. ஓ! தேவி! தங்களையே மனதினால் முழுமையாக நினைக்கிறேன். தங்களையே பணிந்து வணங்குகிறேன்.

ஓ! தாயே! தாங்களே எனக்குச் சரணம்.

10. ஓ! திரிபுர சுந்தரி! தங்களுடைய பார்வை படுவதற்கேற்ற எத்தனையோ பொருள்கள் இந்த உலகில் இருக்கின்றன. இருந்தாலும், கதியற்ற என்னை ஒருமுறையேனும் கண்ணால் பார்க்க வேண்டும். தங்களது கருணைக்காக ஏங்கிடும் என்னைப் போல் ஒரு மனிதன் பிறந்ததுமில்லை, இனி பிறக்கப் போவதும் இல்லை என்பது நிச்சயம்.

11. 'ஹ்ரீம்' 'ஹ்ரீம்' என்ற தங்களது பீஜாக்ஷரத்தை தினந்தோறும் சொல்பவர்களுக்குக் கிட்டாத பொருள் எதுவுமே இல்லை. புஷ்ப மாலை, மணிமுடியுடன் கூடிய மதம் கொண்ட யானைகளால் பெருமைப்படுத்தப்படுபவளும், பொன்னையும், ரத்தினங்களையும் கொண்டுள்ளவளுமான மகாலக்ஷ்மி தானாகவே உனது மந்திரத்தைச் சொல்லுவோரை வந்து வணங்கிச் சேருகிறாள்.

12. செந்தாமரைக் கண்களை உடையவளே! எல்லா நன்மைகளையும், செல்வங்களையும், மகிழ்ச்சியையும் அளிக்கவல்ல தாயே! உனக்குச் செய்யப்படும் பணிவான வணக்கங்களின் நற்பயன் அனைத்தும் பக்தனாகிய என்னையே சேரும்படி அருள வேண்டும். பரம்பொருள் ஆகிய நீயும் நானும் தன்மயப்படும்போது உனக்குச் சேருபவை என்னையும் அடையுமன்றோ!

இந்தத் துதியை அனுப்பி உதவியவர் :

**திரு எஸ். பாலகிருஷ்ணதிரிவேதி**

(பொன்மழை இன்னும் பொழியும்)

• ஸ்ரீ சுந்தரவல்லித் தாயார் (மெய்யூர்)
படம் : ஸ்ரீனிவாசன்

அது ஒரு ஞாயிற்றுக் கிழமையின் இனிய மாலைப் பொழுது. சென்னை ஸ்ரீ கிருஷ்ணகான சபா அரங்கில் எங்கும் தெய்வீகச் சூழல். அங்கே மேடையில் நந்தனாராக பதினைந்தே வயது நிரம்பிய பாலகன், 'வருகலாமோ ஐயா!' எனக் கண்ணீர் மல்க, திருக்கோயில் எதிரில் நின்று தரிசனத்துக்காக இறைவனை இறைஞ்சிய காட்சி!

மனத்தின் ஆனந்தக் களிப்பு கட்டுக் கொள்ளாமல் கண்ணீராக என்னையறியாமல் தாரை தாரையாகக் கொட்டியது. நான்தான் இறையுணர்வு மேலீட்டால் உணர்ச்சிவயப்படுகின்றேனோ? என்று ஐயுற்று, அமர்ந்திருந்த ரசிகப் பெருமக்களைப் பார்த்தால் பெரியவர் முதல் சிறு குழந்தை வரை 'சிவ சிவ' என முணுமுணுத்து கண்ணீர்ப் பெருக்குடன் கண்டுகளித்தது எனக்குச் சிவலோக தரிசனமே கிடைத்தது போல் இருந்தது.

ஆம், அத்தகைய தெய்வீக அனுபவத்தை 'ஸ்ரீ முத்துகிருஷ்ண ஸ்வாமி மிஷன்' எனும் திருக்கூட்டத்தினர் நிகழ்த்திக் கொண்டிருந்தனர். மூன்று வயதுக் குழந்தை முதல் எண்பது வயது முதியவர் வரை அந் நாடகத்தில் கதாபாத்திரங்களாக

# ஆன்மிக வித்திடும் வித்தம்மா!








மங்கையர் மலர் வெளியீடு



உணர்ச்சிபொங்கப் பாடி, நடித்து வருகின்றனர். இம் மிஷனின் அங்கத்தினர்கள் மற்றும் அவரது குடும்ப உறுப்பினர்கள் அனைவருமே எவ்விதப் பிரதியுபகாரமும் இன்றி இறைத் தொண்டே தம் வாழ்வு என, ஏதோ ஓர் தெய்வீக சக்திக்குக் கட்டுப் பட்டவர்கள் போல் இயங்கி வந்தது ஆச்சர்யம் என்றால், இவர்களில் எவருமே தொழில் முறைக் கலைஞர்கள் அல்ல என்பது இன்னும் என்னை பிரமிப்பில் ஆழ்த்தியது.

ஸ்ரீ முத்துகிருஷ்ண ஸ்வாமி மிஷனின் 'லலித கலாமந்திர்' வாயிலாக 63 நாயன்மார்களின் திவ்ய சரித்திரம் எவ்வித இடைச் செருகல்களும் இல்லாமல், பெரிய புராணத் தொடர் நாடகமாக சென்னை, திருநெல்வேலி, திருவனந்தபுரம், கோவை என மாதந்தோறும் நிகழ்ந்து வருகின்றது. நிரந்தரமற்ற வாழ்வில் பந்தயக் குதிரைகளாக சுயநலம் எனும் கடிவாளத்தைக் கொண்டு தாவி ஓடும் இக்காலகட்டத்தில் சத்தமின்றி இத்தகைய ஓர் அருட்சேவை!

மிகச் சரியான நேரத்தில் நிகழ்ச்சிகள் ஆரம்பித்து உள்ளே நுழைந்தவுடன் மிஷன் அங்கத்தினர்கள் நம் காலணிகளைப் பெற்றுக் கொண்டு, நம் பாதங்களை அலம்பி, ஆண்; பெண் எனக்கிரம மாக அமரவைக்கும் பாங்கு; (அவர்கள் பத்திரிகைகளில் குறிப்பிட்டுள்ள நேரம் தவறிச் சென்றால் மகேசனுக்கும் கதவு திறக்காது); பக்தியையும், கலையையும் வெவ்வேறாகப் பார்க்காமல் மிகுந்த ஒழுக்கக் கட்டுப்பாட்டுடன் நிகழ்த்தி வருவது மிகுந்த பாராட்டுக்குரியது!

இந்தப் பெருமைக்கெல்லாம் பின்னணியில் நிற்பவர் மாதாஜி வித்தம்மா. இறையருள் தழைக்க ஆன்மிகத்தில் ஈடுபாடு கொண்டுவர பூஜைகள், பஜனைகள், கலை நிகழ்ச்சிகள் என்று அரும்பாடுபட்டு வரும் இவரை 'ஆன்மிகத்திற்கு வித்திடும் வித்தம்மா' என்று குறிப்பிடுவது எவ்வளவு பொருத்தம்!

**- நர்த்தகி நடராஜ்**




# மாலை சூடும் மணநாள்

பொதுவாக திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகின்றன என்ற வார்த்தைக்கு பதில் இல்லை, இல்லை அது பூலோகத்தில்தான் நிச்சயிக்கப்படுகிறது. காரணம், நாம் இறந்த பிறகுதான் சொர்க்கலோகத்துக்குச் செல்ல முடியும் என்று வேடிக்கையாகவும் சொல்லலாம். ஒவ்வொரு மதத்தினருக்கும் திருமணங்களில் நிறைய சடங்குகள், சம்பிரதாயங்கள் உள்ளன. இதில் கிறிஸ்துவ மதத்தினர் திருமணத்தில் உள்ள முக்கிய சட்டங்கள் என்ன என்பதை தெரிந்து கொள்ள லயோலாக் கல்லூரி ஆங்கிலப் பேராசிரியர் முனைவர் அ. தேவராஜை அணுகினோம். இவர் கிறிஸ்தவத் திருமணங்களில் கடைப்பிடிக்கப்படும் பொதுவான வழிமுறைகளை விளக்கிச் சொன்னார்

"கிறிஸ்துவ மதத்தைப் பொறுத்தவரை நிறைய பிரிவுகள் உள்ளன. இந்தியத் திருமணச் சட்டத்தைப் பொறுத்த வரை எல்லாம் ஒன்றுதான். தனித்தனியாக சபை மூலம் போகும் பொழுதுதான் சில கட்டுத் திட்டங்களை நாம் பின்பற்ற வேண்டியுள்ளது.

கத்தோலிக்க திருமணத்தைப் பொறுத்தவரை ஏறத் தாழ இந்துமத முறைகளைத்தான் பின்பற்றியிருக் கிறோம். இந்துக்கள் பார்ப்பது போன்றுதான் நல்ல நாள், பிறகு ஒற்றைப் படையில் தேதி, வெற்றிலைப் பாக்கு மாற்றுவது, நேரம் பார்த்து தாலிக் கட்டுவது போன்ற காரியங்கள் பின்பற்றப்படுகின்றன. ஆனால் திருமணம் என்றவுடன் முதலில் சபை மூலம்தான் அறிவிக்கப்படும்.





திருமணத்திற்கு முன்பு மூன்று ஓலைகள் வாசிக்க வேண்டும். இது வாரம் ஒருமுறை என்று மூன்று வாரங்களில் அறிவிக்கப்படும். சில நேரங்களில் வெளிநாட்டுப் பெண், அல்லது ஆண் என்று வரும் பொழுது விரைவில் திருமணம் முடித்துப் போக வேண்டிய கட்டாயம் இருக்கும். அதற்காக ஒரே நாளில் இரண்டு வீட்டார் சம்மதத்துடன் அவை வாசிக்கப்படும்.

### ஓலை வாசிப்பதின் நோக்கம்

1. மாப்பிள்ளை அல்லது பெண் சரியாக இல்லாமை, தீராத வியாதி போன்ற பிரச்னை எதுவும் இருந்தால் அதை வெளிக் கொணர்வது.

2. ஏற்கெனவே திருமணம் ஆகி அதை மறைத்து செய்யக்கூடிய சந்தர்ப்பம், அதைத் தெரிவிப்பது.

3. நெருங்கிய உறவு முறையில் திருமணம் செய்யக்கூடாது. தூரத்து உறவில் திருமணம் செய்ய அனுமதி உள்ளது. இதற்கு எதிர்மறையாக இருந்தால் அதைத் தெரிவிப்பது.

4. குறை இருப்பின் அதை 7 நாட்களுக்குள் தகுந்த ஆதாரத்துடன் நிரூபிக்க வேண்டும். பொய்ப் புகார் அளித்தாலும் அதை விசாரணை செய்து கண்டுபிடித்து விடுவார்கள்.

காரணம் சில திருமணங்களில் பொறாமை காரணமாகத் தேவையில்லாத அவதூறுகளை பெண் மீது அல்லது ஆண் மீது சுமத்தி திருமணத்தை நிறுத்தப் பார்ப்பார்கள். இதைக் கண்டு பிடித்தால் அவர்களுக்குச் சரியான தண்டனையும், அறிவுரையும் வழங்கி இனி இத் தவறுகளைச் செய்யக் கூடாது என்று எச்சரிக்கையும் செய்யப்படுவார்கள்.

### திருமணத்திற்கு முன்பு செய்ய வேண்டியவை :

ஒரு மாதப் பயிற்சி அளிக்கப்படும். அதில் பெண் ஆண் இருபாலாருக்கும் ஆலோசனை உண்டு. வாழ்க்கை என்பது என்ன? எப்படி வாழ வேண்டும்? அதன் நெறிமுறைகள், கோட்பாடுகள், ஒருவரையொருவர் புரிந்து கொள்ளுதல், மனம் கோணாமல் நடப்பது எப்படி? பிரச்னைகளை பேசி தீர்த்துக் கொள்வது எப்படி? திருமணப் பந்தத்தின் முக்கியத்துவம், குழந்தைகளை எப்படி வளர்க்க வேண்டும் போன்ற விஷயங்களை ஒரு மாதப் பயிற்சியின் போது கற்றுக் கொடுப்பார்கள்.

### திருமணத்திற்கு முன்பு இரண்டு சபைகளுக்கும் ஆண், பெண் இருவரும் கொடுக்கப்பட வேண்டிய சான்றிதழ்கள் :

1. மூன்று ஓலைகள் வாசித்ததற்கான சான்றிதழ்கள் இரண்டு வீட்டாரும் சபைகளில் கொடுக்கப்பட வேண்டும்.

2. மூன்று ஓலை வாசித்ததில் எந்த விக்கினம் இல்லை என்பதை சான்றிதழில் குறிப்பிட்டிருக்க வேண்டும்.

3. ஒரு மாதப் பயிற்சியை நல்லவிதமாக தினமும் வந்து கற்றுக் கொண்டிருக்க வேண்டும். இதற்கான சான்றிதழும் இருக்க வேண்டும்.

4. மருத்துவ அறிக்கை.

5. பங்குத் தந்தை கருத்துரைக்கான அறிக்கை.

6. தனியார் புலனாய்வு நிறுவனம் தந்த சான்றிதழ் என்று அனைத்தும் அளிக்கப்பட்டிருக்க வேண்டும்.

**ஆண், பெண் தகுதிகள் (அடிப்படை)**

1. தகுதியான வயது.

2. முன்பு அதிக வயது வித்தியாசம் இருக்கும். இப்பொழுது குறைந்த வயது 2 (அல்லது) 3 வயது இருந்தால் நல்லது என்ற முறை வரவேற்கப்படுகின்றன.

3. வேலை, வயது, தகுதி, படிப்பு, குணாதிசயங்கள் பார்க்கப்படுகின்றன.

**தாலி வகைகள்**

- சிலுவைத் தாலி
- இருதய வடிவத் தாலி
- கிண்ண வடிவத் தாலி

தாலி கட்டும் பொழுது மணி ஒலிக்கும், வாத்தியங்கள் ஒலிக்கும், சிலர் நாதஸ்வரக் கச்சேரி மற்றும் தவில் வாத்தியங்களுடன் தாலி அணிவார்கள்.

சிலர் தங்க மோதிரத்தை தாலி கட்டுவதற்கு முன்பு அணிந்து கொள்வார்கள்.

கத்தோலிக்கர்களின் நம்பிக்கை : குடும்பம் என்பது ஒரு குட்டித் திருச்சபை

**பெந்தகோஸ்த் சபையைப் பொறுத்தவரை :**

திருமணத்தின் போது வெள்ளை நிற ஆடைகளையே அணிவார்கள். நகைகள் எதுவும் அணிய மாட்டார்கள். வேதாகமத்தை மாற்றிக் கொண்டு திருமணம் செய்வார்கள்.

**சி.எஸ்.ஐ. பொறுத்தவரை :**

சர்ச் ஃபாதர்தான் அனைத்தையும் முன்னின்று செய்ய வேண்டும். அனைத்துப் பொறுப்புக்களையும் நல்லவிதமாக முடிக்க வேண்டும்.

சாதாரணமாக பெண் வீட்டார்தான் ஆண் வீட்டாருக்கு நகை, பணம் தருவார்கள். ஆனால் கத்தோலிக்க நாயுடு வகுப்பினரில் மாப்பிள்ளை வீட்டார் தான் பெண்ணிற்கு செலவு இல்லாமல் திருமணத்தை நடத்த வேண்டும். சில இடங்களில் சமமாக திருமணச் செலவுகளைப் பகிர்ந்து செய்கிறார்கள்.

சந்திப்பு : **எஸ். ஷெர்லிபிரமீளா**

# சமையலறை கலாட்டா-III



## பட்டை!

பிரட்டலுக்கு
பட்டை போட்டு
சமைக்கும்படி
சொன்னேன்!
இன்று...
அமாவாசை என்பதால்
அடுப்புக்குப்
பட்டை போட்டு
சமைத்து விட்டாள்...
நானும் (நாலும்)
தெரிந்த - என்
நாத்தனார்...!



## மலர்

விரிந்த
பச்சை
கூந்தலுக்குள்
விளைந்த
வெள்ளை
மலர்!
காலிஃப்ளவர்!
இது மங்கையர்
கூந்தலுக்கு
மலரல்ல...
கூட்டுக்கும்!
குருமாவிற்கும்!

செல்வி முருகப்பன்



## பாத்திரம்

சாப்பிட்டதோ
ஒரு பாத்திரத்தில்
சுத்தம் செய்வதோ
ஒன்பது பாத்திரத்தை,
மொத்தத்தில்
பத்துப் பாத்திரம்!
எப்படித்தான்
தினம்தோறும்
தேய்க்கிறாளோ!
என்று கூறி
ஊருக்குப்
போனவள்
வரவுக்காகக்
காத்திருந்தான்

## சமையல் வானொலி

பொம்பளை சிரிச்சா போச்சு...!
புகையிலை விரிச்சா போச்சு...!
என்று பாடும்
வானொலியின்
பாடலைக் கேட்டதும்
பூண்டு ரசம்
கொதிச்சா போச்சு...
என்று அவசரமாக
சமையலறைக்குள் ஓடினாள்
சமையல்காரி!





## சமையல் அறை குண்டு

பால் கொதிக்கும் முன்
குண்டு போட்டேன்
வெடிச்சத்தம் கேட்கவில்லை!
வெண்புகை கிளம்பவில்லை!
நாற்புறமும் சிதறவில்லை!
பதற்றம்... ஏதுமில்லை!
நீங்களும் பால் பொங்காமல்
குண்டு போடுங்கள்
வெடிகுண்டல்ல...
கோலிக்குண்டு!





# அம்பை

ஆர். லதா

**எ**திர்பார்த்ததைப் போலவே பத்து நாட்களாய்ப் படுத்த படுக்கையாய் இருந்த எதிர்வீட்டு அம்பை இன்று காலை இறந்து போனாள். எதிர்பார்த்ததைப் போலவே அவளது மூன்று மகன்களும் ஒவ்வொருவராய் வந்திறங்கினர். எதிர் பார்த்ததைப் போலவே யார் கொள்ளி போடுவது என்ற பிரச்னை எழுந்து, வார்த்தை தடித்து, கைகலப்பும் ஆகிவிட்டது. ஆக, இதுவரை எல்லாமே எதிர் பார்த்தது போலவே நடந்து வருகிறது. இனி, நடக்கப் போவதைத்தான் அவர்கள் யாருமே, அம்பையின் பிள்ளைகள் ஆகட்டும், ஊர் மக்கள்தான் ஆகட்டும் எதிர் பார்த்திருக்க மாட்டார்கள். ஆனால் அடுத்து என்ன என்பது எனக்குத் தெரியும். ஏனெனில் அம்பையைப் பற்றி முழுமையாகத் தெரிந்தவன் நான் மட்டுமே. என்னிடம் மட்டுமே எல்லா உண்மைகளையும், ரகசியங்களையும் அம்பை பகிர்ந்து கொள்வாள். இத்தனைக்கும் அம்பைக்கு நான், ஒட்டோ உறவோ கிடையாது. 'மாமா', 'மாமா' என்று வாய் நிறையக் கூப்பிடுவாள். முப்பது வருஷத்துப் பழக்கம்.

அம்பையின் கதையை ஆரம்பத்திலிருந்து சொன்னால்தான் புரியும்.

**மு**ப்பது வருடங்களுக்கு முன் எதிர் வீட்டு வாசலில் ஒரு கட்டை வண்டி வந்து நின்றது. முப்பத்தியைந்து வயது மதிக்கத்தக்க ஒரு பெண் முதலில் இறங்கினாள். அடுத்து நண்டும் சிண்டுமாய் மூன்று கைப்பிள்ளைகளை இறக்கினாள். வண்டியில் ஏற்றி வந்த தட்டுமுட்டுச் சாமான்களை வண்டிக்காரன் உதவியுடன் தானே இறக்கினாள். வீட்டைத் திறந்து உள்ளே கொண்டு சேர்த்தாள். பொடியன்கள் கூட, கூட, தங்களால் முடிந்ததைத் தூக்கிக் கொண்டு ஓடினர். வண்டிக்காரனுக்கு கூலியைக்





கொடுத்து விட்டு நிமிர்ந்த அப் பெண் என்னைப் பார்த்தாள். நான் வெகு நேரமாய் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பதைக் கவனித்திருப்பாள் போலும். புன்னகைத்தவாறே இறங்கி தெருவைக் கடந்து வந்தாள். தன் பெயர் 'அம்பை' என்று சொல்லிக் கைகுவித்தாள். எதிர்வீட்டிற்குப் புதிதாய் குடி வந்திருப்பதைத் தெரிவித்தாள். நானும் பதிலுக்கு வணக்கம் தெரிவித்தேன். அறிமுகப்படலம் அத்துடன் முடிந்தது.

மறுநாளிலிருந்து மூன்று பிள்ளைகளையும் கூட்டிக் கொண்டு, வீட்டைப் பூட்டிக் கொண்டு பள்ளிக்குப் புறப்பட்டு விடுவாள். அக்கம் பக்கத்தில் அனாவசியமாய் யார் கூடவும் பேச்சு இடையாது. பள்ளி முடிந்து மாலை வந்த பிறகும் கூட வீடு உள்புறம் தாழிடப்பட்டே இருக்கும். வீட்டிலிருந்து பள்ளி, பள்ளியிலிருந்து வீடு. வீண் சகவாசம் எதுவும் கிடையாது.

விதிவிலக்காய் எங்கள் வீட்டிற்கு



மங்கையர் சக்தி
மகத்தான சக்தி

மங்கையர் மலர் வெள்ளிவிழா

மட்டும் எப்பொழுதாவது வருவாள். என் வயதும், தோற்றமும் தந்த நம்பிக்கையோ, என்னவோ, 'மாமா', 'மாமா' என்று ஒட்டுதலாய்க் கூப்பிடுவாள். பெண் புலி குட்டிகளை ஒரு உறுமலிலேயே கட்டுப்படுத்தி பழக்குவது போல், பிள்ளைகளை ஒரு பார்வையாலேயே அடக்கி விடுவாள். என் மனைவி பழங்களோ, பிஸ்கட்டோ அப் பிள்ளைகளுக்குக் கொடுத்தால் அவை உடனே வாங்கி விடாது. தன் தாயாரைப் பார்க்கும். அவள் கண்களால் சம்மத உத்தரவு கொடுத்தால்தான் அவை வாங்கும். பேச்சே அதிகம் கிடையாது. சில சமயம் பார்வை மட்டுமேதான்.

அம்பை தன் கதையை என்னிடமும், என் மனைவியிடமும் சொல்லியிருக்கிறாள். சிவன் கோவில் குருக்களின் இரண்டாவது பெண் அம்பை. வீட்டில் ஆசாரமும், கட்டுப்பாடும் அதிகம். அப்படிப்பட்டவளுக்கு பட்டாமணியாய் இருந்த முதலியாரின் ஒரே மகனோடு காதலுண்டானவுடன், எதிர்ப்பிற்கு கேட்க வேண்டுமா? அது பணக்கார இடம். பெருங்கை. ஏழை குருக்களுக்கோ, ஜாதிப் பெருமையைத் தவிர வேறு எதுவும் கிடையாது. இரண்டு பக்கமும் கடும் எதிர்ப்பு. எதிர்ப்பை மீறி, இரண்டு வீட்டையும் பகைத்துக் கொண்டு இருவரும் கல்யாணம் பண்ணிக் கொண்டனர். காதல் திருமணம் என்பது இப்பொழுது வேண்டுமானால் சாதாரணமாய் இருக்கலாம். ஆனால் முப்பத்தாறு வருடங்களுக்கு முன், அதுவும் எங்கள் கிராமப்புறங்களில் இது மிகப் பெரிய விஷயம்.

எதிர்ப்பை மீறி வெளியூருக்குச் சென்று தனி ஜாகை. சந்தோஷமான வாழ்க்கை. அடுத்தடுத்து மூன்று ஆண் பிள்ளைகள். வாழ்க்கை வண்டி சீராய் ஓடிக் கொண்டிருக்கும் பொழுது சடக்கென்று கடையாணி முறிந்தது. நல்லவிதமாய் வேலைக்குப் போன கணவன், ஹார்ட் அட்டாக் வந்து, ஐந்தே நிமிடத்தில் இறந்து போய் விட, வெறும் கட்டையாய்க் கொண்டு வந்து கிடத்தினார்கள். அம்பை வாழ்வில் மட்டும் ஏனோ, காட்சிகள் மாறிக் கொண்டே இருந்தன. காரியம் முடிந்தது.

பிறந்தகமோ, புக்ககமோ, ஆதரிக்கவில்லை. எட்டாம் வகுப்பு மட்டுமே படித்த ஒரு பெண்ணால் என்ன பண்ண முடியும்? நல்லவேளை. கலப்பு மணம் செய்து கொண்டு விதவையானது ஒரு விதத்தில் விசேஷத் தகுதியாய் இருந்தது. குருகுலம் பயிற்சிப் பள்ளியில் இடம் கிடைத்தது. இதோ ஹையர் கிரேட் ஆசிரியையாய் இந்த ஊருக்குப் பணி உத்தரவு கிடைக்க, பிள்ளைகளுடன் வந்து வேலையில் சேர்ந்து, எதிர்வீட்டில் ஜாகையும் வந்து... எனக்கு பிரமிப்பாய் இருந்தது - இந்தப் பெண்ணின் தைரியத்தையும், நம்பிக்கையையும் நினைத்து. விதவை என்கிற கோலத்தை வெளியுலகத்துக்குக் காட்ட விரும்பாமலும், பாதுகாப்புக் கருதியும் தன்னை எந்தவிதத்திலும் அவள் மாற்றிக் கொள்ளவில்லை.

நாம் நம் திருமண வைபவங்களில் மணமக்களுக்குப் பரிசுகள் அளித்து மகிழ்கிறோம். ஆனால், ஜப்பானியத் திருமணங்களில் மணமக்கள்தான் திருமணத்திற்கு வருபவர்களுக்கு பரிசுகளை அளிக்க வேண்டும்.

- ஆர். ஜெயலெட்சுமி.



அடுத்த இரண்டு வருடங்களுக்குள், என் யோசனைப்படியே, அஞ்சல் வழிக் கல்வியில் சேர்ந்து படித்தாள். ஆங்கிலமும், கணக்கும் மட்டும் என் உதவியோடு படித்தாள். வேலைக்கும் போய்க் கொண்டே பதினோராம் வகுப்பு எழுதித் தேர்ச்சியும் பெற்று, மறு வருடமே செகண்டரி கிரேட் ஆசிரியையாகவும் உயர்வு பெற்று விட்டாள்.

வக்கீல் மாமா, வக்கீல் மாமா என்று அந்தப் பெண் அவ்வப்பொழுது வந்து என்னை யோசனை கேட்டாலும் அது வாழும் விதத்தைப் பார்த்து நான்தான் அநேகம் கற்றுக் கொண்டேன்.

வரும் வருமானம் எவ்வளவோ, அதற்குள்தான் செலவு; சீரான சிக்கனம். அண்டை அசலுடன் அளவான பேச்சு; கடன் என்று ஒரு துரும்பைக் கூடக் கேட்டு யார் வீட்டுக் குத்துச் செங்கல்லையும் மிதிக்காத சுயகௌரவம். நெறியோடு பிள்ளைகளை வளர்த்த பாங்கு.

பிள்ளைகள் மூவரையும் நன்றாக வளர்த்தாள். நன்றாகப் படிக்க வைத்தாள். ஓயாது உழைத்தாள். பிள்ளைகளும் பெரியவர்கள் ஆனார்கள். அம்பை எதிர் பார்த்தாளோ இல்லையோ, நான் நினைத்துக் கொள்வேன் - அப்பாடா இனியாவது இந்தப் பெண் நிம்மதியாய் இளைப்பாறலாம் மகன்களின் நிழலில் என்று. ஆனால் அதற்குப் பிறகுதான் பெரிய, பெரிய சூறாவளிகள் காத்திருந்தன.

வெளியூரில் வேலையில் இருந்த பெரியவன் திடீரென்று ஒரு நாள் முழு வெள்ளை அங்கி அணிந்து, கழுத்தில் சிலுவை ஆட வந்து நின்றான்.

நண்பர்களோடு வேளாங்கண்ணிக்குச் சென்றவன், கடலில் குளிக்கும் பொழுது பேரலை இழுத்துச் சென்று சுழற்றி தலைகுப்புற ஆழத்திற்கு இழுத்துச் சென்ற அந்த நேரத்தில், அந்த ஜீவமரணப் போராட்டக் கணத்தில், மாதாவை வேண்டிக் கொள்ள, உச்சிமுடியை கொத்தாய் இறுகப் பற்றி யாரோ, கரையில் கொண்டு வந்து சேர்த்தனர். இவன் உடனே, கிறிஸ்தவ பாதிரிகளிடத்துச் சென்று, ஞானஸ்நானம் பெற்று, சிதம்பரம் என்ற பழைய பேரை விட்டொழித்து, ஸ்டீஃபன் என்ற புது நாமகரணத்துக்கு மாறி விட்டிருக்கிறான். தோளிலிருந்து பாதம் வரை வெள்ளை அங்கி அணிந்து, ஸ்படிக மாலையில் கோத்த சிலுவையை நிரடிக் கொண்டே, கையில் பைபிளுடன் வாசலில் வந்து நின்றவனை ஊரே வேடிக்கை பார்த்தது.

அம்பையும் ஒரு நிமிடம் உற்றுப் பார்த்தாள் தன் தலைப் பிள்ளையை. வெறும் பார்வை மட்டும்தான். சிதம்பரம் இல்லை, இல்லை ஸ்டீஃபன் நிமிர்ந்து பார்த்தான். அந்த வயிற்றில் பிறந்து வளர்ந்தவனுக்கு அந்தப் பார்வையின் பொருள் புரியாதா என்ன? "நீ செய்த செயல் உன் வரையில் நியாயமாய் இருக்கலாம். ஆனால் எனக்கு அதில் துளியும் உடன்பாடு இல்லை. கஷ்டப்பட்டு, போராடி உன்னை வளர்த்து, படிக்க வைத்ததற்கு, நீ வேலையில் சேர்ந்து, சம்பாதித்து, என் பாரத்தைப் பகிர்ந்து, உன் தம்பிகளைக் கைதூக்கி விட்டிருக்க வேண்டும். அது உன் கடமை. ஆனால் நீயோ, ஏதோ காரணம் சொல்லி, இருந்த வேலையையும் விட்டு, மதம் மாறி, சன்னியாசியாகி, உனக்கு வேண்டுமானால் இது புனிதமாய் இருக்க



ஹைக்கூ

**அலாரம்**
**பிறரை**
**எழுப்புவதற்காகத்**
**தன் தலையில்**
**குட்டு வாங்கிக் கொள்ளும்**
**தியாகி!**

**- எம். சரண்யா.**



மங்கையர் மலர் வெள்ளிவிழா

விளக்கு வைத்தபிறகு பால், தயிர், மோர் பிறருக்குத் தருவதில்லை. ஏன்?



வெண்மை நிறம் அறிவுத் தெய்வமான கலைமகளுக்கு உகந்ததாகும். எனவேதான் முதன் முதலாக ஒரு வீட்டுக்குக் குடிபுகும் போது பால், அரிசி ஆகிய வெண்மைப் பொருட்களைக் கொண்டு செல்கிறார்கள். வீட்டில் உள்ள வெண்மைப் பொருட்களை வெளியாருக்குக் கொடுத்தால், வீட்டின் அறிவுச் செல்வமும் அதன் மூலம் பெறப்படும் தனலாபங்களும் வீட்டை விட்டுச் சென்று விடும் என்பது நம்பிக்கை. இரவு நேரங்களில் வெற்றிலை பாக்கு போடுபவர்கள், 'சுண்ணாம்பு' என்று கேட்காமல் 'மூன்றாவது கொடு' என்பார்கள். ஏனெனில் அதுவும் வெண்மைதானே!

**- தேவகோட்டை பி. நாராயணன்.**

லாம். எனக்கு இது வேஷம். கடமை தவறியவர்களுக்கு இவ் வீட்டில் இடமில்லை. வாய் திறந்து ஒரு வார்த்தை பேசவில்லை. ஆனால் அந்தப் பார்வை அத்தனையையும் பேசிற்று. அதற்கு மேலும் அப் பாதிரிக்கு அங்கு என்ன வேலை? புறப்பட்டு விட்டார்.

இது நடந்த கொஞ்ச நாளில் எங்கள் பகுதியில் புதிதாய்க் கட்டப்பட்ட புதிய தேவாலயம் ஒன்று எரிக்கப்பட்டது. அம்பை வீட்டுக் கதவைத் தட்டிய போலீஸ் இரண்டாவது மகன் சங்கரனைக் கைது செய்தது. எங்களுக்கெல்லாம் பெரிய அதிர்ச்சி. காவிக்கரை வேட்டி உடுத்தி, நெற்றியில் நீளமாய் செந்தூரம் அணிந்து, எப்பொழுதும் கோவில் கோவிலென்று பக்திப் பழமாய் இருக்கும் சங்கரனையா போலீஸ் கைது செய்தது என்று. அவன் அறையைச் சோதனை செய்ததிலும், அவனது நண்பர்கள் வீட்டைச் சோதனை செய்ததிலும், தேவாலய எரிப்பில் சங்கரனின் நேரடிப் பங்களிப்பு முழுமையாய் தெரிய வந்தது. அது மட்டுமின்றி, ஹிந்துமத தீவிரவாதம் பேசும் ஒரு தடைசெய்யப்பட்ட அமைப்பின் அங்கத்தினன் அவன் என்பதும் தெரியவந்தது. நான் எத்தனையோ மன்றாடினேன், அம்பையிடம். ஒரு வக்கீலாய் இருந்து கொண்டு அவனை பெயிலில் எடுப்பது எனக்கு ஒன்றும் பெரிய விஷயமில்லைதான். ஆனால் அம்பையின் பிடிவாதம் என் கைகளைக் கட்டிப் போட்டு விட்டது.

"வேண்டாம் மாமா! மனுஷனுக்கு மட்டும்தான் இங்க, இந்த வீட்ல இடமுண்டு. ஒரு தீவிரவாதிக்கு இங்க, இந்த வீட்ல எந்தக் காலத்திலும் இடம் கிடையாது. சத்தியமா, அவன் இங்கு வரக்கூடாது!" என்று சொல்லி விட்டான். ஆக, இரண்டாவது பிள்ளையும் இல்லையென்று தலைமுழுகியாகி விட்டது.

வேலைக்கு எப்பொழுதும் போல் போய் வந்து கொண்டிருந்தான். வயதால் சிறு தளர்வு ஏற்பட்டதே தவிர அந்தக் கம்பீரம் குறையவே இல்லை. கடமையைச் சரியாக செய்து கொண்டே இருந்த



• திருமணத்தில் பெண்ணின் அலங்காரத்திற்கு அழகு சேர்ப்பது பூச்சடை! இதைப் பின்னலுடன் தைக்காமல் பூச்சடையின் மேல்புறத்தில் கனமான ஒரு கொண்டை ஊசியை வைத்துத் தைத்து விட்டால் அதை அப்படியே பின்னல் ஆரம்பிக்கும் இடத்தில் சொருகிக் கொள்ளலாம். இதை எப்பொழுது வேண்டுமானாலும் கழற்றி திரும்பவும் மாட்டிக் கொள்ளலாம்.

(தலையை காயவைக்கவோ, தலைக் கனத்தை குறைக்கவோ சுலபமாக இருக்கும்!)

- ரோகிணி



வளுக்கு மூன்றாவது இடியும் வெகு சீக்கிரம் இறங்கிற்று.

பட்டமேற்படிப்பு முடித்து விட்டு சென்னையிலிருந்து வந்த இளையமகன், கூடவே பர்தா அணிந்த ஒரு பெண்ணையும் கூட்டி வந்தான். கல்லூரியில் இவனை விட ஒரு வருடம் கீழே படித்த அந்தப் பெண்ணிற்கும் ஹரிக்கும் நட்பு காதலாக மாற, ஹரியின் தோற்றமும், புத்திசாலித்தனமும் பெண் வீட்டாருக்கும் பிடித்து விட அந்தக் கோடீஸ்வரக் குடும்பம் சம்மதம் தெரிவித்து விட்டது. ஆனால், ஒரே ஒரு நிபந்தனை. ஹரி முஸ்லீமாக மதம் மாற வேண்டும். மாறினால் மறுநாளே நிக்காஹ். அதற்கு அடுத்த நாள் கோடீஸ்வரன். அம்மாவிடம் கேட்டுச் சொல்வதாக அவளையும் அழைத்து வந்திருக்கிறான். "நீ என்ன முடிவு பண்ணி இருக்க ஹரி?" என்றாள் அம்பை, சற்று ஆறுதலாய் மகனைப் பார்த்து.

"ஹரிக்கு ஹெச். அதே ஹெச்சில் வர்ற ஹுஸைன் தேவலையா? ஹக்கிம், ஹனிபா? எது தேவலை? மொஹமட் ஹக்கீம் நல்லா இருக்கு இல்ல?" என்றான் ஹரி.

நான் விக்கித்து நிற்க, அம்பை அசராமல் வழக்கம் போலவே இருந்தாள். ஆக மூன்றாவது முழுக்கும் போட்டாகி விட்டது.

அம்பை வழக்கம் போல் பள்ளிக்குச் சென்று வந்தாள். மூன்றைப் பெற்றும் ஒன்றும் பலனில்லாமல் போய் விட்டது.

"என் பிள்ளைகள் மூணு பேரும் மதத்தை எப்படி தவறாகப் பயன்படுத்தி களங்கப்படுத்திட்டாங்க பாருங்க மாமா? இப்பெல்லாம் எம் பிள்ளைகளால் ஏற்பட்ட ஏமாற்றத்தை, பள்ளி மாணவர்கள் மேல் நம்பிக்கை பல மடங்கு வைத்து சொல்லித் தர்றேன். அன்பு, மதநல்லிணக்கம், மனிதநேயம், எந்தச் சூழலிலும் சுய கௌரவம் இழக்காமை, இப்படிப் பள்ளி முடிந்த பிறகும் ஸ்பெஷல் கிளாஸ் மாதிரி எடுக்கறேன். நல்ல ஆர்வமா கத்துக்கறாங்க. எனக்கு நம்பிக்கை இருக்கு."

எனக்கு அவள் நம்பிக்கை மேல் பிரமிப்பு பல மடங்கு ஏற்பட்டது. வாழ்க்கையின் அத்தனை தோல்விகளால், இவளை, இவளது நம்பிக்கையை தோற்கடிக்க முடியவில்லை.

பதவி நாள் முடியும் வரை விடுப்பு எடுக்காது உழைத்தாள். அதற்குப் பிறகும் மாணவர்கள் அடிக்கடி வீட்டிற்கு வந்து போவார்கள். பிள்ளைகள் மூவரும் எப்பொழுதாவது கடிதம் போடுவதோடு சரி.

பத்து நாட்களுக்கு முன் மயக்கம் வந்து அம்பை, பாதி பேச்சிலேயே விழுந்தாள். பேசிக் கொண்டிருந்த மாணவர்கள் வண்டி பிடித்து ஆஸ்பத்திரியில் சேர்த்தார்கள். செய்தி கேள்வியுற்று நானும், மனைவியும் போய்ப் பார்த்தோம். என்னை அருகில் அழைத்து சன்னக் குரலில் ஒரு விஷயம் சொன்





னான். கேட்ட எனக்கு ஒன்றும் அதிர்ச்சியாய் இல்லை. அம்பையைப் பற்றித்தான் நன்கு அறிந்தவனாயிற்றே நான்.

அதன்படியே ஆவன செய்து, ஸ்டாம்ப் ஒட்டப்பட்ட பத்திரங்களில் மறுநாள் அவனிடம் கையெழுத்து வாங்கினேன். நான்காம் நாளிலிருந்து அவளுக்கு நினைவு திரும்பவே இல்லை. டாக்டர்கள் கைவிரித்து விட்டார்கள். அம்பை சொல்லவில்லைதான். ஆனாலும் நானாகவே மூன்று பிள்ளைகளுக்கும் தகவல் அனுப்பினேன்.

அவள் இறந்த நிமிடத்திலிருந்து பள்ளி மாணவர்கள்தான் கதறி அழுத ஒலி கேட்டதே தவிர, பெற்ற பிள்ளைகள் மூன்றும் குத்துக்கல்தான். இடையில் அடிதடி ரகளை வேறு. (சொத்துக்குத்தான்) ஒருவழியாய் ஊர் கூடி முடிவு செய்தது.

தாய்க்கு தலைமகன்தான் கொள்ளி போட வேண்டும் என்பது தர்மம். ஆனால் இவ் விஷயத்தில் மூத்தவன் வேறு மதமாகி விட்டான். இளையவன் கதையும் இதுவே. அதனால் நடுவில் உள்ள, இந்து மதத்திலேயே உள்ள இரண்டாவது பையன் கொள்ளி போட வேண்டும் என்று தீர்ப்பாயிற்று.

நானும் எவ்வளவு தூரம்தான் இந்த கூத்து போகிறதென்று, அதன் எல்லை வரை சென்று பார்த்து விடுவதென்று மௌனமாய் வேடிக்கை பார்த்தேன். கடைசியில் மருத்துவக் கல்லூரியிலிருந்து அந்த ஊர்தி வந்து நின்றது. சீருடைப் பணியாளர்கள் குதித்து இறங்கினர். மகன்களும், ஊர் மக்களும் புரியாமல் பார்க்க, நான் கடைசியாய் அந்தப் பத்திரத்தை எடுத்துச் சத்தமாய் வாசித்தேன்.

"எனக்கு மதத்தின் மேல் நம்பிக்கை இல்லை. ஆனால் மனிதர்கள் மேல் அளவு கடந்த நம்பிக்கை உண்டு. யார் பேரிலும் வருத்தம் கிடையாது. எனக்குப் பிறகு எனது சொத்துக்கள் அத்தனையும் கோசாலைக்கும், முதியோர் இல்லத்திற்கும், அனாதைக் குழந்தைகளின் கல்விக்கும் பைசா பாக்கியில்லாமல் பயன்படட்டும். எனது கண்களை திருச்சி செயின்ட் ஜோசப் கண் மருத்துவமனைக்கு தானமாக அளிக்கிறேன்.

எனது உடலை யாரும் எரிக்கவோ, புதைக்கவோ கூடாது. அதை, தஞ்சாவூர் மருத்துவக் கல்லூரிக்குத் தானமாக அளிக்கிறேன். அது மாணவர்களுக்கு, அவர்கள் படிப்பிற்குப் பயன்படட்டும்."

இப்படிக்கு,
அம்பை.

## மேங்கோ பாத்



தேவை : மாங்காய், தாளிக்கும் பொருட்கள்.

செய்முறை :

மாங்காயைத் தோல் நீக்கித் துருவிக் கொள்ளவும். வாணலியில் 2 ஸ்பூன் எண்ணெய் விட்டு, கடுகு, கடலை பருப்பு, உளுத்தம் பருப்பு, வ்ரமிளகாய், பெருங்காயப் பொடி போட்டு தாளித்து மாங்காய்த் துருவலைச் சேர்த்துக் கலக்கவும். தேவையான அளவு உப்பு சேர்த்து அதில் சாதத்தைக் கொட்டி கிளறவும். மேங்கோ பாத் தயார்.

- எஸ். ராஜம்.



**எங்களது இளைய மகளுக்கு பஞ்சாமிர்தம் என்றால் மிக்க ஆசை. அந்த பஞ்சாமிர்தம் முருகன் கோவில்களில் மட்டுமே கிடைப்பதால் எப்போதாவது மட்டுமே எங்களால் அவளுக்கு அளிக்க முடிகிறது. ஆகவே, தாங்கள் பஞ்சாமிர்தம் செய்முறையைச் சொல்லித் தருவீர்களா? - கே.எஸ். நிர்மலா.**

# தின்னத் தின்ன ஆசை

இதோ! பஞ்சாமிர்தம் என்பது ஐந்து உயர்ந்த பொருள்களின் உன்னதக் கலவை. எனவேதான் பஞ்சாமிர்தத்தால் இறையுருவங்களுக்கு அபிஷேகம் செய்வது வழக்கம். இதில் சேர்க்கப்படும் முக்கிய ஐந்து பொருள்கள் - நாட்டுச் சர்க்கரை (காங்கேயம் கண்டசாரி சர்க்கரை என்பார்கள்), விருபாக்ஷி மலைப்பழம் - (இது பழனி, திண்டுக்கல் பகுதியில் மட்டுமே கிடைக்கும்), ஏலம், நெய், தேன்.



**நாம் வீட்டில் செய்யத் தேவையான பொருள்கள் :**

மலைப்பழம் - 12,
நாட்டுச் சர்க்கரை - 2 கப்,
நெய் - 6 தேக்கரண்டி,
தேன் - ½ கப்
ஏலக்காய் - 6,
உலர்ந்த திராட்சை - ½ கப்
உடைத்த முந்திரி - ¼ கப்,
பேரீச்சம் பழம் - ½ கப், (கொட்டை நீக்கி நறுக்கியது),
டைமண்ட் கல்கண்டு - ½ கப்

**செய்முறை :**

மலைப் பழத்தைத் தோல் உரித்துச் சிறு சிறு துண்டுகள் ஆக்கிக் கொள்ளவும். நாட்டுச் சர்க்கரை சேர்த்து ஒரு மர மத்தால் மசிக்கவும். பீங்கான் அல்லது கற்சட்டிப் பாத்திரம்தான் ஏற்றது. எவர்சில்வர் பாத்திரத்தில் செய்தால் புளித்து விடும். மசித்த பழம், சர்க்கரைக் கலவையில் அடுத்து கல்கண்டு, திராட்சைப் பழம், பேரீச்சம் பழத்தைக் கலந்து மத்தால் சுழற்றவும். கடைசியாகத் தேன், நெய், ஏலப்பொடி கலந்து கிளறி வைக்கவும். இது 'ப்ரிஜ்ஜில்' 10 நாட்கள் வரை வைத்துச் சாப்பிடலாம்.

- ஆசிரியர்.



# ஆண்மையும் பெண்மையும்

டாக்டர். அரசி
மகப்பேறு மருத்துவ நிபுணர்

பால்திரிபு நிலை (அலி) என்பது வெகு அபூர்வமாக ஏற்படக்கூடியது. 0.05 - 0.2 சதவிகிதம் கருக்களில் இந்த பால்திரிபு நிலை ஏற்படுகிறது. ஆனாலும், இந்த சொற்பமான பிறப்புகள் சிலர் வாழ்வில் எத்தகைய கொடுமையை அளிக்கிறது என்றும் பெற்றோரின் கனவுகளையும், மனதையும் சுக்குநூறாகச் சிதைத்து விடுகின்றன என்பது மனதைக் கனமாக்கும் விஷயம்.



மகப்பேறு மருத்துவராக, பால்திரிபு குழந்தைகள் பிறக்கையில், தாயின் பரிதவிப்பையும், சோகத்தையும் கண்டு வேதனையுற்றவள் நான். இங்ஙனம் பிறக்க நேரிட்ட குழந்தைகளையும், வளர்ந்த பால்திரிபு நிலையாளர்களையும் கனிவுடன் நோக்கக் கற்றுக் கொள்ளுங்கள். பாலியல் உறுப்புக்களின் அமைப்பு ஒவ்வொருவரின் சொந்த அந்தரங்க விஷயம். இது எவ்வகையிலும் பிறரைச் சேதப்படுத்தப் போவதில்லை. பின் ஏன் இவர்களை கேலிக்குரியவர்களாக சமுதாயத்திலும், திரைப்படங்களிலும் சித்திரிக்கிறார்கள் எனப் புரியவில்லை. இத்தகைய குழந்தைகள் இயற்கையின் தவறால் பலிகடா ஆக்கப்பட்ட, அதன் கருணையற்ற வரத்தைச் சுமப்பவர்கள்; மானுட கருணைக்கு முற்றிலும் தகுதியானவர்கள். இதனை பெற்றோர்கள் மனதார உணர்ந்து, தங்கள் குழந்தைகளுக்கும் விளக்கமாகக் கூறி, அவர்களை அன்புக் கரம் நீட்டச் சொல்லித் தர வேண்டும். ஐம்பது சொல்லிக் கொடுத்தால் ஐந்து வளையத் தயாராகும்.

இந் நிலை ஏற்படுவதற்கு பெரும்பாலும் தாயின் வயிற்றில் கருக்கொண்ட சினை முட்டையிலும், ஆண் விந்துவிலும் உள்ள பாலியலை நிர்ணயிக்கும் X மற்றும் Y குரோமசோம்கள், நேர்க்கோட்டில் பிளவுபடுதல், அல்லது துண்டுபட்டு போவதாலோ அல்லது குறைபாட்டுடன் இப் பிளவு நிகழ்வதாலும், சில சமயங்களில் விந்துவின் Y குரோமசோம் இல்லாமல் போய் விடுவதாலும் இவை ஏற்படக்கூடியவை.

Y குரோமசோம் மட்டுமே, சிசுவின் ஆண்மைத்தனத்தை முடிவு செய்யும் வீரியமும், முனைப்பும் கொண்டது. ஒரு கருவின் ஆணியலை முடிவு செய்வது



அது மட்டுமே.

சில நேரங்களில் பாலியல் உறுப்பை முடிவு செய்வதிலுள்ள சில மாற்றங்களில் குரோமசோம்களின் வழிகாட்டுதலில் குழப்பம் நேர்கையில், விந்துப் பையும், சினைப் பையும் இரண்டுமே ஒரே உடலில் வளரத் தொடங்கி விடுகின்றன. இந்த நிலையை இருபால் உறுப்புகளும் இருக்கும் நிலை என்று சொல்லப்படுகிறது. இதனால் பாதிக்கப்பட்டவர்கள், உடல் வளர்ச்சியின் அடிப்படையில் ஆணாகவோ, பெண்ணாகவோ இருக்கக்கூடும்.

சில சமயங்களில் Y குரோமசோம் கருவுற்ற கருவில் இடம்பெறாமல் போனால் (46X0), இந்தக் குழந்தைகள் பால்திரிபு உடலமைப்பைப் பெறுகிறார்கள். இவர்கள் பாலியல் வெளியுறுப்புகள் பெண்ணை ஒத்ததாகவும், அதே சமயம் ஆண்மையுறும் தன்மை காரணமாக ஆண் உறுப்பின் சிறு வளர்ச்சியும் அதே இடத்தில் காணப்படும். இவர்கள் உடலில் பால்திரிபு நிலையில் உள்ள 'கோனாட்ஸ்' ஆண்மைக்கான அதீத உரோம வளர்ச்சியை ஏற்படுத்துகிறது.

### இதற்கான வேறு காரணங்கள் என்ன?

1. சில மரபணு திரிபுகள்
2. பெண் சிசுவின் அட்ரீனலின் அதீத வளர்ச்சி
3. கருவுள்ள பெண்ணின் உடலில் ஆன்ட்ரோஜன் எனும் ஆண்மை ஹார்மோன் உற்பத்தி செய்யும் கட்டிகள் இருத்தல்.
4. Danazole, Progesterone போன்ற மருந்துகளை தாய் உட்கொண்டிருந்தால்.

### பெற்றோர்கள் கவனித்து உணர வேண்டிய குறைகள் என்ன?

பூப்பெய்தும் வயதிலுள்ள சிறுமிகள் உடல்வாகில் பெண்களை ஒத்திருந்தாலும், அவர்களிடம் காணப்படும் சில மாற்றங்களை விடலைப் பருவ குணக் கோளாறுகள் என ஒதுக்காமல் பெற்றோர்கள் உன்னிப்பாகக் கவனித்தல் அவசியம். ஏனெனில், பெண் பாலியல் உடலமைப்பு இருப்பினும், குரோமசோம்களின் தவறான அமைப்புகளாலும், கூட்டுதல்களாலும் ஒரு பெண்ணின் அறிவுக்கூர்மை குறைவாகவும், மனநிலை பாதிப்பு, சமூக விரோத செயல்களை நடத்திக் காட்டுவதில் ஈடுபாடு உடையவர்களாக இருக்கக்கூடும். இவர்களது மூளையின் செயல்பாட்டினை அறியக் கூடிய ஈஈஜியின் அமைப்பில் அசாதாரண மாற்றங்கள் காணப்படும்.

### இக்கோளாறுகளை கண்டறியும் வழிகளும், அணுகுமுறைகளும் என்ன?

மேற்கூறியவற்றின் நோய் நாடி, அதன் முதல் நாடுதலே அதற்கான சிகிச்சை முறைகளை வரையறுக்க உதவும்.

முழுமையான உடல் பரிசோதனை மிகவும் அவசியமாகிறது. குழந்தை

தேங்காய் முற்றலா? இளசா?

குடுமியைப் பிடியுங்கள் (தேங்காயின் குடுமியைத்தான்!) குடுமியின் நார்கள் பெவிகால் போட்டு ஒட்டியது போல ஒன்றோடொன்று ஒட்டிக் கொண்டு மொத்தையாக இருந்தால் இளசு...! மாறாக - ஷாம்பூ போட்ட தலைக்கூந்தல் போல தனித்தனியாக குடுமியின் நார்கள் ஒன்றோடொன்று ஒட்டாமல் இருந்தால்- முற்றிய தேங்காய்!

- எஸ். பட்டம்மா

பிறந்தவுடன் வெளியுறுப்பில் இயல்புக்கு மாறான பேதம் இருப்பதையும், வேறு குறைபாடுகளையும் கண்டறிய இது உதவுகிறது.

2. குழந்தைகளின் பாலியல் குரோமசோம் வகையினைக் கண்டறிய இரத்த மற்றும் திசு பரிசோதனை அவசியம்.

3. குழந்தையின் வயிற்றில் இருக்கும் சினைப்பை, அட்ரீனல் கட்டிகளை ஸ்கேன் மூலமாகக் கண்டறிதல் இயலும்.

4. சிறுநீர், இரத்தப் பரிசோதனைகள் மூலமாக இவற்றுக்குக் காரணமாக உருவாகும் வேதியல் பொருட்களின் அளவை அறியலாம்.

மேற்கூறியவை மூலமாகக் குழந்தையின் பாலியல் தன்மையை பெரும்பாலும் அறிய இயலும். அதன் பின்னரே பெற்றோரிடம் இதனைப் பற்றி விளக்கி, குறிப்பிட்ட பாலியலை அவர்கள் ஏற்பதற்கு ஒப்புதல் பெற வேண்டும்.

அடுத்தகட்ட அணுகுமுறை அந்தந்த நிலைக்குத் தகுந்த வெவ்வேறு அறுவை சிகிச்சைகள் நடத்துதல் அவசியம்.

பெரும்பாலும் அறுவை சிகிச்சை முறைகள், குழந்தையின் மன உளைச்சலை தடுக்கும்விதமாக இருத்தல் மிக அவசியம். பல்வேறு புனரமைப்பு அறுவை சிகிச்சைகள் மூலமாக, பெண்ணுறுப்பின் வெளிப்புறமுள்ள பகுதியின் அதீத வளர்ச்சியை சாதாரண நிலைக்கு மாற்ற இயலும். அதே போல் ஆணுறுப்பின் சிறிய பகுதியாக வளர்ந்திருப்பதை அகற்றுதலும் இயலும்.

அடிப்படையில் ஒவ்வொரு குழந்தையின் ஆண் அல்லது பெண் உடலமைப்பு அமைவதைப் பொறுத்தே சினைப் பைகள் அல்லது விந்துப் பைகளை அறுவைச் சிகிச்சையால் நீக்குதல் அவசியம்.

முக்கியமாக பெற்றோரும், உறவினர்களும் அந்தப் பிஞ்சு உள்ளங்களை வார்த்தையால், செய்கையால் காயப்படுத்துதல், வெறுத்து ஒதுக்குதல் இவற்றை அறவே தவிர்க்க வேண்டும்.

ஏனெனில் அவர்கள் வாழ்வின் ஆதார சுருதியென எதிர்பார்த்து ஏங்குவது, அவர்களை அன்பு பாராட்ட, மடியில் வைத்துத் தாலாட்ட ஒரு தாய் மடியைத்தான். துன்ப நினைவுகளும், சோர்வும், பயமும் அன்பில் அழியுமடி என்ற கவிதை வரிகள் எத்துணை வலிமையானது!

(தொடரும்)




ஆர். ராஜலட்சுமி




"டியூலிப் மலர்களின் மேல் மெல்லிய நிலவொளி படுவது போல இருக்கிறது இந்தத் துணி..."

15-ம் நூற்றாண்டைச் சேர்ந்த கவிஞர் "அமீர் குஸ்ரு"வின் இந்த அற்புத வரிகள், அன்றைய இந்தியர்களின் "மஸ்லின் துணி"யைத்தான் குறிப்பிடுகின்றன.

"பெண்களின் முகத்தை மலராகவும், அந்த அழகிய நாசியின் மூச்சுக் காற்றை, மலரின் நறுமணமாகவும் கருதி, வண்டுகள் மொய்த்து திரை போடுகின்ற போது, தனியாகப் பெண்களுக்கு ஏன் முகத் திரை...'' இப்படி வர்ணிக்கிறார் புராணக் கவிஞர் பாணா.

எத்தனை அழகான கற்பனை!

பழங்கால இந்தியப் பெண்களின் உடை, ஆபரணங்கள் பற்றிய

# திருமண உடைகளில்



வர்ணனைகள் நம் இலக்கியங்களில் நிறையவே இருக்கின்றன...

ஃபோர்ப்ஸ் வாஸ்டன் (Forbes Waston) என்னும் மேற்கத்திய சரித்திர ஆராய்ச்சியாளர், பழங்கால இந்தியர், 'தைத்த' உடைகளை அணிய வில்லை என்று எழுதியிருக்கிறார்...

"தறியிலிருந்து மேனி"க்கு பாணி உடைகள் அணிந்ததாக

அவர் குறிப்பிடுகிறார்...

(ஒருவேளை வேட்டி, புடைவைகளைச் சொல்லியிருப்பாரோ?)

ஆனால் வேதகாலம், பௌராணிக் காலத்துக் காவியங்களில் தாண்ட்டு, (நூல்) தறி (தந்த்ரா) போன்ற சொற்கள் நிறையக் கிடைத்திருப்பதைப் பார்த்தால், நெசவு மற்றும் தையற்கலை வல்லுநர்களாக



# திருப்பமா?

இருந்திருக்கிறார்கள் என்றும் தெரியவருகிறது...

வந்தார்கள் முகலாய மன்னர்கள்...

குர்தா, பைஜாமா, நீண்ட அங்கிகள் என்று நம் பழைமையும் முகலாயப் பாணியுமான உடைகள் மிக வேகமாகப் பரவின...

அதிலும் அக்பரின் அரசவையில் அதிகாரிகள் அனைவரும், எந்த மதத்தினராக இருந்தாலும் - முகலாய பாணியிலேயே உடை அணியுமாறு வற்புறுத்தப்பட்டார்கள்... முகலாய சாம்ராஜ்யம் முடிந்துவிட்ட போதும், உடைகளில் ஒரு புதுமையான



• ஜெயஜோதி - ஸ்ரீநாத்

கலவை ஏற்பட்டது.

இந்து மதத்தினர் மட்டும் அணிந்து வந்த "காக்ரா" "ஒபானி" போன்ற உடைகளை இஸ்லாமியப் பெண்கள் அணிய, அவர்களது பைஜாமா, குர்தாவை இந்துப் பெண்கள் அணிய, இடைச்செருகலாக வங்காள ஹிந்துப் பெண்ணின் புடைவை கட்டும் பாணியும் கலந்து கொண்டு வட இந்தியா முழுவதும் பெண்கள் உடை ஒரு புது ஸ்டைலாகப் பரவியது...

"அபிதான சிந்தாமணி" என்னும் சம்ஸ்க்ருத இலக்கியம், "புதிய பாணி உடை" என்று பைஜாமா குர்த்தாவை வியந்திருக்கிறது.. இந்த மாற்றம் எல்லாம் வட இந்தியாவில் நிகழ்ந்து கொண்டிருக்க, தென் இந்தியாவில் அதிக பாதிப்பு எதுவும் ஏற்படவில்லை.

அதாவது சில ஆண்டுகள் முன்பு வரை... இளையதலை





முறையினரின் மாடர்ன் உடைகள், சுரிதார் போன்றவை ஒரு புறம் இருக்கட்டும்… திருமணங்களைப் பொறுத்தவரை… காலையில் மடிசாரும், கூறைப்புடைவையும், தாலியுமாக இருக்கும் மணமகள், மாலை வரவேற்பில் ஒரு முழுமையான இந்தியப் பெண்ணாகப் பொலிகிறாள்…

ரிசப்ஷனா… கழுத்தை அழுத்தும் பெரிய கொண்டையும், ஆளை அழுத்தும் ஜரிகைப் புடைவையும்… அந்தக் காலம் எல்லாம் போயாச்சு… பட்டாய் விரித்துப் பரப்பிய கூந்தலில் ஆங்காங்கே முத்து (அல்லது மணி பூ) கோர்த்த ஹேர்பின்களை செருகி, ஒரு குஜராத்தி பாணி புடைவையோ, காக்ராவோ, ராஜஸ்தானி ஸ்டைலோ… அணிந்து, இந்திய நாட்டின் எந்தப் பகுதிக்கும் பொருந்தும் முழு இந்தியப் பெண்ணாக மிளிர்கிறாள்… மாப்பிள்ளைகள் மட்டும் என்ன, சூட், கோட், டை என்று சென்ற தலைமுறைப் பிள்ளையாக இல்லாமல், ஷெர்வானியும், கழுத்தில் ஷால் சுற்றி இந்தியனாகத்தான் நிற்கிறார்கள்.



• காயத்ரி

மருதாணி என்ற உள்ளங்கை வட்டமும் விரல் தொப்பிகளும் போய், மெஹந்தி என்று கைகளில் இடும் ஓவியக் கலைக்கு வரவேற்பு.

டின்னர்…?

"மசாலா அயிட்டமே ஒத்துக்காது…" என்று தள்ளுபடி செய்யும் சிலருக்காக, சில பாரம்பரிய அயிட்டங்களைச் செய்து விட்டு, மற்றபடி சாட், வட இந்திய டைப் ருமாலி ரோடி போன்ற உணவு வகைகளை இளையதலைமுறைக்கு ரொம்பப் பிடித்த மாதிரி பஃபே செய்து விடுகிறார்களே…!

இந்த சுவாரசியமான மாற்றங்கள் குறித்து ஓர் அலசல்…

கம்ப்யூட்டர் பொறியாளராக இருக்கும் திருமதி ஜெயபாரதி ஸ்ரீநாத் சமீபத்தில் திருமணமான இந்தத் தலைமுறை… சொல்கிறார்…

"மெஹந்தி டிசைன் எல்லாம் மனசை அள்ளுது… பல்லக்கில் பவனி வரும் இளவரசியின் உருவத்தை என் கல்யாணத்தின் போது மெஹந்தி இட்டு விட்டார்கள். இப்போதெல்லாம் பொறியியல் படிப்பு, மேற்படிப்பு என்று கல்லூரிகளில் பயில, நிறைய வட இந்தியப் பெண்கள் இங்கே வருகிறார்கள்… நம் ஊர்ப் பெண்களும் (பிலானி போன்ற) வடஇந்திய நகரங்களுக்குப் போய்ப் படிக்கிறார்கள். கம்ப்யூட்டர் துறையில் வேலை பார்க்கும் போதும் இப்படி ஊர் விட்டு ஊர் செல்கிறோம்… கலாசார மாற்றம் நிகழ்வது இயற்கைதானே… திருமண வரவேற்பில் மூன்று மணி நேரம் வீடியோ வெளிச்சத்தில் நிற்பதற்கு பட்டுப் புடைவையை விட, காக்ரா போன்ற உடைகள் வசதியாக இருக்கின்றன… அதே நேரம் தென்னிந்தியக் கலாசாரத்தை விட்டுக் கொடுக்காமல் அந்த பாணியில் காலையில் கூறைப் புடைவைதானே கட்டுகிறோம்…?" என்கிறார் ஜெயபாரதி.

பத்து வருடங்களுக்கு முன் திருமணம் செய்து



கொண்ட திருமதி காயத்ரி அனந்த பாஸ்கர் அப்போதே தான் மெஹந்தி இட்டுக் கொண்டதை பெருமை யுடன் சொல்கிறார்.

"என் கையில் இடப்பட்டிருந்த மெஹந்தியைப் பார்த்து எத்தனையோ வெளிநாட்டுக்காரர்கள் வியந்து பாராட்டினார்கள்.

"பிரபல பாப் பாடகி மடோனாவையும் இந்த மெஹந்திக் கலை ரொம்பவே கவர்ந்திருக்கிறது..." என்று கூறும் திருமதி காயத்ரி, "குழந்தைகளுக்கு சாட் வகை உணவுதான் ரொம்பப் பிடிக்கிறது..." என்கிறார்.

"எப்படி உடை உடுத்தினாலும் என்ன, நாங்கள் இந்தியப் பெண்மையின் அடையாளமாகத்தானே இருக்கிறோம்... குஜராத்தி பாணியில் பட்டுப் புடைவை கட்டினால், அந்தத் தலைப்பு முன்புறம் முழுக்க விகசித்து எத்தனை அழகாக இருக்கிறது...! மாட்சிங் பொட்டு, வளையல்கள், கொலுசு, நெற்றியில் சின்ன நெற்றிச் சுட்டி தலையில் பூ இவற்றோடு காக்ரா உடையும் அணிந்து வரவேற்பில் நிற்கும் போது இந்தியப் பாரம்பரியமும் கலாசாரமும்தான் உயர்ந்து நிற்கின்றன..." என்று பெருமைப்படுகிறார் காயத்ரி.

கல்யாண ஆலோசகராக இருக்கும் திருமதி வத்சலா பாஸ்கரன், "நோ, நோ! தழையத் தழையப் புடைவை தான் அழகு" என்கிறார்.

"ஆறு வருஷம் முன்னாடிதான் என் பெண்ணுக்குக் கல்யாணம் செய்து கொடுத்தேன்... முழுக்க முழுக்க தென்னிந்திய சம்பிரதாயப்படி நான்கு நாள் கல்யாணம், நுனி வாழை இலை போட்டு, நம் பக்கத்துச் சாப்பாடுதான் ஒவ்வொரு வேளையும். அதுவும் தஞ்சாவூர் வாழை இலை... என் பெண்ணின் திருமண வரவேற்



• வத்சலா பாஸ்கரன்

பில் திருமதி எம்.எஸ். சுப்புலட்சுமி அம்மா அவர்கள் வந்து பாடியதை மறக்க முடியுமா? மாப்பிள்ளை அழைப்புக்கு உன்னிகிருஷ்ணன் கச்சேரி... புடைவையும், பின்னலும், மருதாணியும், தலைநிறையப் பூவுமாகத்தான் மணப்பெண் அலங்காரம்... நாகரிகம் என்று தலையை விரித்துப் போட்டுக் கொள்ள முடியுமா? நலங்கு, ஊஞ்சல் என்று சம்பிரதாயம் மாறாமல், எல்லாம் நடந்தன.. ஒரு நாலு நாள்... நம் வழக்கப்படியே எல்லாம் நடந்தேறினால் எவ்வளவு அழகாக இருக்கும் தெரியுமா?" என்கிறார் இவர்.



• சுஜாதா விஜய்வைத்யநாதன்

"நம் திருமணங்களில் வட இந்தியக் கலாசாரம் கலப்பதற்கு சினிமாவும் ஒரு காரணம்" என்று ஆரம்பிக்கிறார் மழலையர்க்கான பள்ளியை நடத்தி வரும் திருமதி சுஜாதா விஜய் வைத்யநாதன்...

"ஹிந்திப் படங்களில் பாருங்கள்... திருமணம் என்றால் என்ன டான்ஸ், என்ன வண்ணமயமான உடைகள்... மாதுரி திட்சித், ஷில்பா ஷெட்டி, கரீஷ்மா கபூர் இவர்களுடைய அலங்காரங்களைப் பார்க்கும் நம் இளம்

பெண்களுக்கு, தங்கள் திருமணத்தின் போது அப்படி உடை அணிய ஆவல் ஏற்படுவதில் தவறில்லையே! நம் டீன் ஏஜ் பெண்கள் வெளிநாடுகளுக்குப் போய்ப் படிக்கிறார்கள்.. வேலை பார்க்கிறார்கள்... உணவின் ருசி மாறுபடுகிறது... எத்தனை படித்திருந்தாலும் திருமணம் என்று வரும்போது இந்தியத் தன்மை மாறாமல்தானே இருக்கிறார்கள்! கைகளில் வண்ணக் கோலமிடும் மெஹந்தியோ, பெண்களின் சடங்கான ஹல்தியோ, வட இந்தியப் பாணி உடையோ.. எதுவாக இருந்தால் என்ன? குளோபலைசேஷன் மூலம் உலகமே நெருங்கி வரும் போது (அல்லது சுருங்கி!) நம் பெண்கள், திருமணத்தின் போது, தென் இந்திய, வட இந்திய கலாசாரங்களின் ஒருமித்த சங்கமமாக மாறி, இந்தியப் பெண்ணாக நிற்பது பெருமைக்குரிய விஷயம்தானே?" என்கிறார் இவர்.

சரிதானே...!

ஒரு சின்ன வரலாற்றுச் சம்பவம்...

ஒரு வரலாற்று ஆசிரியர் எழுதியிருக்கிறார் :

"டகாசகியா என்கிற நீண்ட வகை அங்கியை அரசர் தைக்கச் சொல்லி இருக்கிறார்.. இதை வட்டமாக குடை போல தைத்து, வலது பக்கம் முடிச்சிட வேண்டுமாம். உட்புறம் லைனிங் தேவையில்லையாம்.

இந்த அங்கியைத் தைக்க ஏழு கஜம் துணி வேண்டும்... இதைத் தைக்க ஒரு ரூபாயில் இருந்து மூன்று ரூபாய் வரை ஆகுமாம்! மணிகள் வைத்து நகாசு வேலை செய்வதென்றால் மொத்தம் நாலே முக்கால் ரூபாய் செலவாகி விடும்..." இப்படிக் கணக்குப் பார்க்கும் அந்த ஆசிரியர் அபுல்ஃபாசல்... அவர் குறிப்பிடும் அந்த அரசர், அக்பர் சக்ரவர்த்திதான்!

**- பத்மினி பட்டாபிராமன்**

## பச்சைக்கிளி ஆறு!



9 புள்ளி 5 வரிசை இடுக்குப் புள்ளி

சில மாதங்களுக்கு முன் ஒருநாள் வேலைக்காரி சி.எல். எடுத்துக் கொண்டு விட, சீக்கிரமே பாத்திரத்தைத் துலக்க உட்கார்ந்தேன். நீர் விட்ட பாத்திரத்தில் தேங்கியிருந்த சோற்றுப் பருக்கைகளைத் திரட்டி தோட்டத்து சிமெண்ட் பெஞ்சில் வைக்கப் போக... காக்கைகள் மட்டுமா? குருவி, புறா, மைனா என்று பறவைக் கூட்டமே வந்து விட்டது புதை ருசி பார்க்க! அட! அதிகாலையில் நம் வீட்டிற்கு இத்தனை விருந்தாளிகளா?

அவர்களனைவரும் ஏதோ பஸ் பிடிக்க அவசரமாக ஓடும் அலுவலக ஊழியர்கள் போல் வந்த வேகத்தில்

# வேண்டுவதெல்லாம்



பறந்து விட, அடுத்ததாக வந்தவர் நம்ம வில்லிபுட் ராஜா!

யார் அது?!

அதாங்க... தென்னை மரத்திற்கும், மாமரத்திற்கும் தாவித் தாவி சறுக்கு மரம் விளையாடும்! அணில் பையாவைத் தான் சொல்கிறேன்...!

அதுகள் அடிக்கும் லூட்டி இருக்

# சாந்தா ராமசாமி

# ஒரு பிடி சோறு!

கிறதே...! அப்பப்பா! சொல்லி மாளாது! இதில் வேடிக்கை என்னவென்றால் சதா சர்வகாலமும் தோட்டத்தில் துரத்தித் துரத்தி ஓடிப் பிடித்து விளையாடும். ஆனால் டைனிங்டேபிளில் வந்தால் மட்டும் சதாமும் புஷ்ஷுமாக (வீரப்பனும், விஜயகுமாரும் என்று வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்களேன்) மாறிவிடும்.

இந்த 'பிரேக் ஃபாஸ்ட் செஷ்ஷன்' ஆரம்பித்த ஒரு சில நாட்களிலேயே அவர்களனைவரும் எனக்கு மிகவும் நெருக்கமாகி விட்டார்கள்! அதிகாலையில் புழக்கடைக் கதவைத் திறந்தால், மதில் மீதும் மரத்தின் மீதும், கிணற்று விளிம்பிலும் ஆவலுடன் காத்திருக்கின்றன, அந்த வாயில்லா ஜீவன்கள் ஒரு வாய் சோற்றுக்காக! நம்ம அணில் பையாவையோ கேட்கவே வேண்டாம்.... நான் வாசல் தெளித்து கோலம் போட்டு விட்டு வருவதற்குள் மதில் மீது 'மாரத்தான்' ரேஸே வைத்து விடுவார். ஆக, பொழுது புலர்கிறது எனக்கு சந்தோஷமாக... அதுகள் செய்யும் தவத்தால்...!!

ஒருநாள் சாப்பாட்டுக் கடை முடிந்ததும் ஒரு காகம், சமையலறைக் கதவின் மீது வந்தமர்ந்து, கத்தோ கத்தென்று கத்தித் தீர்த்தது. யாரோ விருந்தாளிகள் தான் வரப் போகிறார்கள் என்று எண்ணிக் கொண்டேன்.

"அம்மா, சாப்பாடு



ரொம்பப் பிரமாதம்னு சர்டிஃபிகேட் கொடுக்கறது போலிருக்கு..." என்று என் மகன் கலாய்க்க,

"ஆ..மா..ம்.. வெச்சது வெறுஞ்சோறு... இதுக்கு சர்டிஃபிகேட் வேறயாக்கும். நாளைலேர்ந்து தேங்காய் சாதம், பிஸி பேளாபாத், புலாவ் இப்படி வெரைட்டியா வெய்யின்னு சொல்றதுடா..." என்று என் கணவர் கிண்டலடிக்க...

"ஏன் உங்களுக்கு வேணுமாக்கும், அதுக்கு காக்கா மேல பழியைப் போட நீங்க" என்று நான் அவரை பதிலுக்கு வார.... அப்போதுதான் கவனித்தேன். அந்த காகம் தென்னை மரத்து வாய்க்காலில் தேங்கியிருந்த நீரை, கஷ்டப்பட்டுக் குடித்துக் கொண்டிருப்பதை...!

அடேடே! இதுவா விஷயம்...?! சோறு வைத்த நமக்கு, தண்ணீர் வைக்க வேண்டும் என்று கூடத் தெரியாமல் போயிற்றே என்று வருந்தி, அன்றிலிருந்து தண்ணீரும் ஒரு குட்டி பக்கெட்டில் வைக்கத் துவங்கி விட்டேன். இதில் பறவைகள் அவ்வப்போது வந்து காயும் வெயிலுக்கு தாகம் தீர்த்துக் கொள்வதைப் பார்க்கும் போது மனசுக்கு நிறைவாக இருக்கும்.

மாலையில் புழக்கடைக் கதவைத் திறந்தால், 'இன்று என்ன டிபன்' என்பது போல் ஒவ்வொன்றாக எட்டிப் பார்க்கும்! இட்லி, தோசை, பஜ்ஜி, போண்டா அனைத்திலும் பங்குண்டு.

வெறுஞ்சோறு வைக்க மனமில்லாமல் அவ்வப்போது சிறிது ரசமோ, தயிரோ விட்டுப் பிசிறி வைப்பேன். மைய பிசைந்து வைப்பதை விட உதிரியாக இருந்தால்தான் அவைகளுக்குப் பிடிக்கும். இரவில் சோறு மீறவில்லை என்றால் எத்தனை நேரமானாலும் குக்கரில் ஒரு பிடி வைத்து விட்டுப் படுப்பதும், அதுவும் முடியவில்லை என்றால் அதிகாலையில் அவைகளுக்காகவே சீக்கிரம் எழுந்து வடித்து பின் ஆறவிட்டு வைப்பதும் உண்டு. ஆக, என் வாழ்க்கையில் அவர்களும் ஓர் அங்கமாகி விட்டார்கள். எங்க குடும்பம் ரொம்பப் பெரிசுங்க...!

நாம் என்னதான் விதவிதமாகச் சமைத்துப் பரிமாற விரும்பினாலும், அவர்கள் உண்மையில் வேண்டுவது ஒரு பிடி சோற்றைத்தான். வெறும் சோறு அல்லது அரிசியானாலும் ஓ.கே! விரும்பிச் சாப்பிட்டு விட்டு நீர் குடித்து விட்டுச் செல்வார்கள்.

இதையெல்லாம் பார்க்கும் போது எனக்கு பழைய சினிமாப் பாடல்தான் நினைவுக்கு வருகிறது...

அம்மா பசிக்குதே... தாயே பசிக்குதே...
ஆண்டவன் எங்களை மறந்தது போலே
அன்னை நீ மறவாதே...
வேண்டியதெல்லாம் ஒரு பிடி சோறு
வெறுஞ்சோறாகிலும் போதும்...
அம்மா... ●

பெரும்பாலான சிறிய/பெரிய திருமண மண்டபங்களும், சமுதாயக் கூடங்களும் சுத்தக் குறைவுடனேயே காணப்படும், குறிப்பாகக் கழிப்பறைகள்! ஆகவே, நாம் நம் வீட்டு விசேஷங்களுக்காக இவற்றில் தங்கி இருக்க நேரும்போது, இரண்டு மூன்று பினாயில் பாட்டில்கள் எடுத்துச் செல்வது நல்லது. அப்படியே தப்பித் தவறி அவர்களே வெகு சுத்தமாகப் பராமரித்து வருவார்களேயானால் அந்தப் பாட்டில்களை அவர்களுக்கே அவர்களது சேவையை மெச்சி அன்பளிப்பாகக் கொடுத்து விடலாம்.

- வெ. நா. சிவகுமார்.

# இம்மாத இல்லத்தரசி

## தேன் பழ ஜாம்

தேவையான பொருள்கள் :
ஆப்பிள் - 1,
வாழைப்பழம் - 2,
பப்பாளி - 1,
ஆரஞ்சு - 1,
கொய்யாப்பழம் - 1,
பலாப்பழம் - 2 சுளை,
விதையில்லாத திராட்சை - 50 கிராம்,
சப்போட்டா - 2,
தேன் - 150 கிராம்,
முந்திரி - 25 கிராம்,
ஏலக்காய் - 4,
நெய் - 1 ஸ்பூன்,
கேசரி கலர் - 1 சிட்டிகை.

முதல் பரிசு :
பட்டர்ஃபிளை வழங்கும் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பிரஷர் குக்கர் மற்றும் பிரஷர் பான்

பொருள் : தேன்

செய்முறை :
பழங்களைத் தோல் நீக்கி, கொய்யாப்பழத்தில்



மோர்க்குழம்பு செய்தேன். புளிப்பிற்கேற்ற பச்சை மிளகாய் வைத்து அரைத்திருந்தாலும் புளிப்பே தூக்கி நின்றது. புளித்தால் அனைவரும் சாப்பிட ஸ்டிரைக் செய்வர்ரர்கள். உடனே மோர்க் குழம்பில் அரை தம்ளர் பாலைக் கலந்து அனைவருக்கும் பரிமாறினேன். மோர்க் குழம்பு சுவையோ சுவை என ஒரே பாராட்டு மழைதான்.

- விஜயா சுந்தர்ராஜன்.

விதை நீக்கி நன்கு மிக்ஸியில் அடித்துக் கொள்ளவும். வாணலியில் நெய் விட்டு, அடித்து வைத்துள்ள பழக் கலவையைக் கலந்து இந்த வாணலியை அடுப்பில் மிதமான சூட்டில் வைத்து நன்கு கிளறவும். "ஜாம்" பதம் வந்தவுடன் தேனை அதில் கொட்டி முந்திரி, ஏலக்காய் பொடி சேர்த்து கேசரி கலர் தூவி இறக்கவும். தேன் பழ ஜாம் ரெடி. இதில் சர்க்கரைக்குப் பதிலாக தேனைச் சேர்ப்பதால் சுவையும், ருசியும் கூடுதலாக இருக்கும். இந்தத் தேன் பழ ஜாமை பெரியவர் முதல் சிறியவர் வரை விரும்பிச் சாப்பிடுவர்.

- டி. நிர்மலா தேவி,
பம்மல்.

## இரண்டாம் பரிசு ரூ. 300/-

### ஓட்ஸ் எனர்ஜி கேக்ஸ்

**தேவையான பொருள்கள் :**

ஓட்ஸ் - 5 டேபிள் ஸ்பூன்,
தேன் - 1½ டேபிள் ஸ்பூன்,
பாதாம் - 8,
கசகசா - 2 டீஸ்பூன்,
திராட்சை (உலர்ந்தது) - 8,
அலுமினியம் ஃபாயில்.

**செய்முறை :**

ஓட்ஸை வெறும் வாணலியில் இட்டு, மிதமான சூட்டில் நன்கு வாசனை வரும் வரை நிதானமாக வறுக்கவும். இதனுடன் கசகசாவையும் சேர்த்து சிறிது நேரம் வறுக்கவும். உலர்ந்த திராட்சையை சிறு துண்டுகளாகப் பிய்த்துக் கொள்ளவும். பாதாம் பருப்புகளை மெலிதாகச் சீவி வைக்கவும். இவற்றை வறுத்த ஓட்ஸ், கசகசாவுடன் சூடாக இருக்கும்போதே ஈரமில்லாத பாத்திரத்தில் போட்டு, முழு டேபிள் ஸ்பூன் தேனைப் பரவ விட்டு, கையால் அழுத்தி உருண்டையாக்கவும். இந்த உருண்டைகளை ஃப்ரிட்ஜில் ஃப்ரீஸரில் வைக்கும் ஐஸ் ட்ரேக்களில் வைத்து இலேசாக அழுத்தினால் அதே வடிவில் வில்லைகளாகும், ஒட்டாது. ட்ரேயை ப்ரிட்ஜில் (ஃப்ரீஸரில் அல்ல) 1-2 மணி நேரம் வைத்து வெளியில் எடுத்து, வில்லைகளை அலுமினியம் ஃபாயில் கொண்டு தனித்தனியாக மடித்து வைக்கவும். காற்றுப் புகாத பாத்திரத்தில் போட்டு ஃப்ரிட்ஜில் வைக்கவும்.

இந்த வில்லைகள் (குக்கீஸ்) சட்டென்று பசியாறவும், தெம்பு அளிக்கவும் வல்லது. 4-5 வில்லைகள் சாப்பிட்டால்

1-1½ மணி நேரம் பசி தாங்கும். விடுதிகளில் தங்கிப் படிக்கும் மாணவ மாணவிகள், இரவு வெகு நேரம் வீட்டிலேயே கண் விழித்துப் படிக்கும் குழந்தைகளுக்கும் எப்போதும் வைத்துக் கொள்ளக் கூடிய தின்பண்டம். பல நாட்கள் வரை கெடாமல் இருக்கும்.

**- கே. வசுமதி, கோடம்பாக்கம்.**

## மூன்றாம் பரிசு ரூ. 200/-

## வல்லாரை சர்பத்

**தேவையான பொருள்கள் :**

வல்லாரைச் சாறு - 1 லிட்டர்,
சர்க்கரை - 500 கிராம்,
தேன் - 500 கிராம்,
சுக்கு - 25 கிராம்,
மிளகு - 25 கிராம்,
வசம்பு - 25 கிராம்,
ஏலம் - 25 கிராம்,
லவங்கம் - 10 கிராம்.

**செய்முறை :**

பச்சை பசேலென்ற வல்லாரைக் கீரையைப் பறித்து மிக்ஸியில் ஒரு ஓட்டு ஓட்டி பிழிந்து ஒரு லிட்டர் சாறு எடுக்கவும். அதில் 500 மில்லி நீர் சேர்த்து, சர்க்கரையையும் சேர்த்து நன்கு கொதிக்க விடவும். பாதியாகும் வரை நன்கு கொதிக்க விடவும். பின் சுக்கு, மிளகு, வசம்பு, ஏலம், லவங்கம் ஆகியவற்றை தூள் செய்து அதில் தூவி மேலும் ஒரேயொரு கொதி விட்டு இறக்கவும். இதை வடிகட்டி தேனை அதில் கலந்து ஆறவிடவும். நன்கு ஆறியவுடன் பாட்டிலில் நிரப்பி எடுத்து வைத்துக் கொண்டு தேவைப்பட்ட போது சர்பத் கலந்து குடிக்கலாம்.

தினமும் வெறும் வயிற்றில் இந்த சர்பத்தைக் குடித்து வந்தால் வாதம், பித்தம், அஜீரணம், வயிற்றுப்பூச்சி ஆகியவை அண்டாது. வல்லாரை ஞாபக சக்தியை அதிகரிக்கும் என்பதால் குழந்தைகளுக்கு ஏற்ற சர்பத் இது.

**- காசி. இ. நிர்மலா பிரேம் ஆனந்த், மயிலாடுதுறை.**

## ஆறுதல் பரிசு ரூ. 100/-

## கம்பரிசி - தேன் கொழுக்கட்டை

**தேவையான பொருள்கள் :**

கம்பு அரிசி மாவு - 3 கப்,
தேங்காய்த் துருவல் - 2 கப்,
தேன் - ½ கப்,
கருப்பட்டி - தேவைக்கேற்ப,
ஏலப்பொடி - ½ டீஸ்பூன்,
நெய் - 1 டேபிள் ஸ்பூன்.

**செய்முறை :**

கம்பு அரிசியைக் கடையில் வாங்கி கல் நீக்கி சுத்தம் செய்து மாவு மில்லில் கொடுத்து, மெல்லிய ரவை போன்று அரைத்து வாங்கவும். அத்துடன் தேங்காய்த் துருவல், தேன், ஏலப்பொடி, நெய் ஆகியவற்றை சேர்த்து அழுத்தாமல் இலேசாக மாவு கலவையைப் பிசையவும். தேன் சேர்த்து இருப்பதால், இனிப்பு கூடுதலாகத் தேவைப்படுபவர்கள் கருப்பட்டியை சிறிது நீர் விட்டு, அடுப்பில் உருக வைத்து சேர்த்துக் கொள்ளவும். மாவு கெட்டியாக இருக்கும்படி பார்த்துச் செய்ய வேண்டும். பிறகு மாவை சிறு



**காலில் கண்ணாடி குத்தி விட்டதா? ஓமத்தை வெல்லத்துடன் அரைத்து குத்திய இடத்தில் வைத்துக் கட்டுங்கள். எவ்வளவு சிறிய துண்டாக இருந்தாலும் வந்து விடும். இது எங்கள் பாட்டி சொன்ன வைத்தியம்.**

**- சுலைஹா அஹமது.**

சிறு கொழுக்கட்டைகளாகச் செய்து கொண்டு, இட்லித் தட்டில் சிறு துணியை விரித்து, அதில் கொழுக்கட்டைகளைப் பரப்பி ஆவியில் சிறிது நேரம் மட்டும் வேகவைத்துச் சாப்பிடலாம். இதைச் செய்த அன்றே சாப்பிடுவதை விட மறுநாள் சாப்பிட சுவை கூடுதலாகி இருக்கும்.

**- எஸ்.சி. ஜனுல் ஆரிஃபா, சென்னை - 3.**

## ஆறுதல் பரிசு ரூ. 100/-

## தால் இன் ஆல்

**தேவையான பொருள்கள் :**

பொட்டுக்கடலை - 1 கிண்ணம்,
பயத்தம் பருப்பு - 1 கிண்ணம்,
தேன் - 3 மேசைக்கரண்டி,
பேரீச்சம் பழம் - கொட்டை நீக்கி, துண்டுகளாக்கியது - 1 கிண்ணம்,
முந்திரிப் பருப்பு (வறுத்தது) - சிறிதளவு,
திராட்சை (பொரித்தது) - 1 கிண்ணம்,
நெய் - 2 மேசைக்கரண்டி,
ஏலக்காய்ப் பொடி - 1 ஸ்பூன்.

**செய்முறை :**

பொட்டுக்கடலை, பயத்தம் பருப்பு இரண்டையும் அரை மணி நேரம் ஊற வைத்து, கெட்டியாக அரைக்கவும். அரைத்ததை இட்லித் தட்டில் தட்டி, பதினைந்து நிமிடங்கள் அவிக்கவும். ஆறியதும், உதிர்த்துக் கொள்ளவும். முந்திரி, திராட்சை, தேன், நெய், பேரீச்சம் பழம், ஏலக்காய் ஆகியவற்றை உதிர்த்த பருப்புடன் கலந்து கொள்ளவும்.

**1. தால் உசிலி :** மேற்சொன்ன கலவையைச் சூடாக அப்படியே கிண்ணத்தில் போட்டுச் சாப்பிடலாம்.

**2. தால் பேடா :** உசிலியைச் சூடாக இருக்கும்போதே சிறு உருண்டைகளாக உருட்டிக் கொள்ளலாம்.

**3. தால் போளி :** கோதுமை அல்லது மைதாவைச் சப்பாத்தி போல் இட்டு, இனிப்பு உசிலியை வைத்து மூடி, போளி போல் செய்து, தோசைக் கல்லில் நெய் விட்டுச் செய்யலாம்.

**4. தால் கொழுக்கட்டை :** அரிசி மாவைக் கிளறி, கிண்ணம் செய்து, இனிப்பு உசிலியைப் பூரணமாக வைத்து, இட்டிலித் தட்டில் வைத்துக் கொழுக் கட்டை செய்யலாம்.

பொட்டுக்கடலை புரோட்டீன் சத்து, பேரீச்சம் பழம் இரும்புச் சத்து, தேன் எனர்ஜியும் நினைவாற்றலும் தருவது என்று அனைத்துச் சத்தும் அடங்கிய இனிப்பு இது. சிறுவர்கள் விரும்பிச் சாப்பிடுவர். நெய், முந்திரி பருப்பைத் தவிர்த்து பெரியவர்களுக்கும் கொடுக்கலாம். இதய நோய், ரத்தக் கொதிப்பு உள்ளவர்கள் உப்பு, எண்ணெய் இல்லாமல் சாப்பிடுவதால், மாலை நேரச் சிற்றுண்டியாக இதை உண்ணலாம்.

**- ஸ்ரீகலா, சென்னை - 20.**



பழைய நைலான் கொசுவலைகளைத் தூர எறிந்து விடாதீர்கள். மொட்டை மாடியில் சாமான்களைக் காயவைக்கும் போது கொசுவலையைப் போட்டு நன்றாக மூடிவைத்து விட்டால் காக்கைத் தொல்லை இருக்காது. நல்ல சூரிய வெளிச்சத்தால் சாமான்களும் நன்றாகக் காய்ந்து விடும்.

- ஆர். கவிதா

